# ஞான சூரியன்.

ஆசிரியர்,

சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்கள்.

——)o(——



வெளியிடுவோர்,

"குடி அரசு" பதிப்பகம், ஈரோடு.

1935. [அணா 5.

"குடி அரசு" பதிப்பக வெளியீடு 1.



# ஞான சூரியன்.



(நான்காம் பதிப்பு.)

இஃது

சுவாமி சிவானந்த சரஸ்வதி

அவர்களால் எழுதப்பட்டது.

சுவாமி வேதாசலம்,
திரு கா. சுப்பிரமணியப் பிள்ளை, M. A., B. L. திரு.
V. O. சிதம்பரம் பிள்ளை, "நாடார் குல மித்திரன்"
பத்திராபர், திரு. சு. ஆ. முத்து நாடார், "குடி
அரசு" "ரிவோல்ட்" பத்திராதிபர், திரு.
ஈ. வெ. ராமசாமிப் பெரியார், S. ராம
நாதன், M. A., B. L., திரா
விடன் பத்திராதிபர் ஜ. ச.
கண்ணப்பர், கானாடுகாத்
தான் வை. சு. ஷண்
முகஞ் செட்டியார்
ஆகிய பெரியோர்களின் நற்கருத்துக்களைப் பெற்று

"குடி அரசு" பதிப்பகத்தாரால்
வெளியிடப்பட்டது.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு காப்பி ... | ... | 1000 |
| இரண்டாம் பதிப்பு காப்பி | ... | 2000 |
| மூன்றாம் பதிப்பு காப்பி ... | ... | 4000 |
| நான்காம் பதிப்பு காப்பி ... | ... | 4000 |
| ஆக பதிப்பு 4-க்கு காப்பிகள் | ... | 11000. |

உண்மை விளக்கம் பிரஸ்,

ஈரோடு.

# ஞான சூரியன் விஷய அட்டவணை.

———)o(———

# முன்னுரை.

இந்த ஞான சூரியன், தன் பெயருக்கேற்ப இந்து மதம் என்பதின் பெயரால் நடைபெற்றுவரும் புரட்டுகளையும், ஆபாசங்களையும், ஆரியப்பார்ப்பனர்கள் சூழ்ச்சிகளையும், சமஸ் கிருதத்தில் உள்ள வேதம், ஆகமம், ஸ்மிருதி உபநிஷத்து, புராணம் முதலியவைகளின் ஆதாரத்தோடு விளக்கிக்காட்டி தமிழ் மக்களிடம் அறிவுப்பயிரைச்செழித்து வளரச்செய்யும் சிறந்ததொரு நூலாகும்.

இதனை ஒருமுறை படிப்பவர்கள் சாதி, மதம், சடங்கு, வருணாச்சிரம தருமம், யாகம், பூஜை திருவிழா முதலியவைகள் யாவும் ஆரியப் பார்ப்பனர்கள் தங்கள் வயிற்றுப்பிழைப்புக்காகத் தமிழர்களை ஏமாற்றும் பொருட்டு ஏற்படுத்திவைத்தவை; என்பதைத் தெள்ளத்தெளிய உணர்ந்து, அவைகளில் நம்பிக்கை வைத்து ஏமாறுந்தன்மை ஒழிந்து, பகுத்தறிவும் சுயமரியாதையும் உடையவர்களாகச்சிறந்து விளங்குவார்கள் என்பது உறுதி.

இந்நூலை எழுதித் தமிழர்களுக்கு உபகாரஞ்செய்தவர், தமிழ் வடமொழிகளில் தேர்ந்த அறிவாளராகிய சுவாமி சிவானந்த சரஸ்வதி என்பவர்.

இதனை எழுதச்செய்து முதல் முதலாக அதிக பொருட் செலவில் அச்சிட்டு வெளியிட்டவர் பொதுஜன உபகாரியும், சுயமரியாதைத் தோழருமாகிய கானாடு காத்தான், தோழர், வை. சு. சண்முகம் அவர்களாவார்.

இவ்விருவர்களுக்கும் தமிழ் மக்களின் சார்பாக நமது நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

இப்புத்தகத்தை ஒவ்வொரு தமிழரும் அவசியம் வாங்கிப் படித்து ஆரியச் சூழ்ச்சியிலிருந்து விடுபட வேண்டும் என்னும் சிறந்த நோக்கத்துடனேயே மிகவும் குறைந்தவிலையில் வெளியிடுகிறோம். தமிழர் ஒவ்வொருவரும் தவறாமல் வாங்கிப்படித்து உண்மை உணர்வார்களாக.

ஈரோடு.<br>
12—3—35 } குடி அரசு பதிப்பகத்தார்.

# ஞான சூரியன்.

சத்தி சத்தர் சனாதனப் பேரொளிச்
சித்தர் முத்தர் திருமிகு மோனியர்
சுத்த நெஞ்சுறுந் தூய்மைகண் டுய்ந்திடப்
பத்தியாலவர் பாதம் பணிகுவாம்.

செழுந் தமிழ்க் குடித்திரரே; வீரரே;
எழுந்து மின்னே இழிதகை யோர்ந்துநாம்
அழுந்தி நாளும் அடிமைசெய் காரணம்
கொழுந் தறிவினிற் கூர்ந்துணர் வாமரோ.

---

நமது நாட்டின் கண் தமிழர்களாகிய (திராவிடர்கள்) நம்மவர்கள் கல்வி கற்பதில் சிறிது காலமாகவே ஊக்கங்கொண்டு உழைத்து வருகின்றனர். அதன் பயனாக, நம்மவர்களின் மனக்கண்ணை மூடியிருந்த அறியாமை என்னும் மாசு, சிறிது சிறிதாக நீங்கிற்று. நீங்கவே இதுவரையிலும் நம்மை ஏமாற்றி வந்த ஆரியப் பார்ப்பனர்களின் சமய நூற்களாகிய "சிரவுத, ஸ்மார்த்த, தரும"ங்களின் மேற்பூச்சு விளங்கலாயிற்று. அதனால் அந் நூற்களில் நமக்கிருந்த மதிப்பும் குறையலாயிற்று. எதிர் காலத்தில் நம்மவர்கள் அடையும்படியான மேல் நிலையைக் குறிக்கிற இத்தருணத்தில், ஆரிய சமாசத்தினர், இந்து சபையார், பிர்ம்ம சமாசத்தினர் முதலிய பல குழுவினரும் மேற்சொன்ன நூற்களின் பழைய பூச்சைத் துடைத்துப் புதிதாகப் பூசி மினுக்குமாறு வேஷத்

துடன் நம்மவர் முன் காட்டி நம்மவர்களை ஏமாற்ற முயன்று வருகிறார்கள். எனவே, இவர்களின் எண்ணத்தை உற்று நோக்குமிடத்து மேற்குறித்த சமய நூற்களிலுள்ள மூடக் கொள்கைகளை நம்மவர்களின் உள்ளத்தில் தழைத்தோங்கி வளரச்செய்து நம்மவர்களை என்றென்றைக்கும் அடிமைப் படுகுழியினின்றும் கரையேறவொட்டாமல் தடுக்கவேண்டு மென்பதே யல்லாது வேறில்லை என்றே கொள்ளக் கிடக்கும். இவர்களின் முயற்சியும் சிறிது சிறிதாகப் பயன் கொடுத்துக்கொண்டே வருகின்றது. இம்மைக்குரிய பயன்களுள் சிலவற்றை இவர்களின் வயப்பட்ட ("சூத்திரர்" என்றழைக்கப்படுகிற) நம்மவர்கள் அடைகின்றார்களெனினும் பார்ப்பன நூற்களாகிய வேதம், ஸ்மிருதி, முதலியவைகட்கு இவர்கள் சொல்லுகிற யுக்தி வாதங்களும், உரைகளும் அந்தந்த நூற்களுக்கு ஃ மகிதரர் முதலிய பழைய உரையாசிரியர்களின் கருத்திற்கு ஒத்திட்டுப் பார்த்த பிறகே ஒப்புக் கொள்ளத் தக்கவை. இதற்காக முயற்சிப்போர் "தயானந்த திமிர பாஸ்கரம்" முதலிய நூற்களின் ஆசிரியரான 1 பண்டித "ஜ்வாலப்ரஸாத் மிஸ்ரஜி" முதலிய மேதாவிகளைப் போல் இவர்களைக் கண்டிக்க முற்படுவார்

---

ஃ இவரால் எழுதப்பட்ட உரைக்கு மஹீதர பாஷியம் என்று பெயர். வேதத்தின் பழைய உரையாசிரியர் இவரேயாவர். இடைக் காலத்தில் சாயனர் (வித்தியாரண்னியர்) உரை எழுதினர். இக் காலத்தவராகிய தயானந்த சரஸ்வதியும் உரை எழுதியுள்ளார். இம் மூன்று உரைகளும் ஒன்றற்கொன்று மாறுபட்ட கொள்கைகளை யுடையனவாகக் காணப்படுகின்றன.

1 தயானந்த சரஸ்வதியவர்கள் எழுதியுள்ள நூல்களுக்குக் கண்டன நூலெழுதி வெளியிட்ட ஆசிரியராவார்.

கள். நாம் இங்கு எதைக் குறித்து ஆராயப்போகின்ளுமென்ருல், நமது நாட்டில், யாவராலும் பிரமாணங்களாகக் கொள்ளப்படுகின்ற வேதம், ஆகமம், ஸ்மிருதி இவைகளில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களையும் அவைகளின் உண்மைக் கருத்துக்களையுமேயாம். பகவான் புத்தன் அவதரிப்பதற்கு முன்னும் அதன் பின்னரும் உள்ள நமது தேச சரித்திரத்தைப் பதினறு வருடங்களாக ஆராய்ந்தவுடன், நமது தேசம் முழுவதும், நேபாளம், காஷ்மீரம், சிலோன் முதலிய பல தேசங்களிலும், சஞ்சரித்து அந்தந்த தேசத்தார்களின் முற்கால தற்கால வழக்க ஒழுக்கங்களையும் அறிஞர்களிடத்தும், சரித்திர வாயிலாகவும், நேரிற் கண்டும் கேட்டும் அறிந்ததன் பயனுக "தமிழ் மக்களாகிய நம்மவர்கள்" நெடு நாட்களாகவே அடிமைப் படுகுழியில் தள்ளப்பட்டிருப்பதையும், கரையேற முயற்சி செய்யாதிருப்பதையும், அறிந்த யான் நம்மவர்களின் முன்னேற்ற வழியை எடுத்துக் கூறத் துணிந்தனன். இதனுல் நம்மவர்களை அறியாமையென்னும் நித்திரையை விட்டெழுந்து சமய நூல்களில் மனதைச் செலுத்தவேண்டுமென்பதே எனது கருத்து. ஆதலால் பழைய குருட்டு நம்பிக்கையைச் சிறிது நேரம் ஒதுக்கிவைத்து மனதை ஒருமுகப்படுத்திக் கீழ்க் கூறுகின்ற பொருட்களை வாசித்தறியும்படி மன்ருடி வேண்டிக் கொள்ளுகிறேன். ஆராய்ச்சி இல்லாமல் ஒருவரையொருவர் ஆட்டு மந்தையைப்போல் பின்பற்றி நடக்கும் இயற்கையுள்ள நம்மவர்களுக்கு உண்மையை அறியவேண்டுமென்னும் விருப்பமும் அதற்குரிய ஆற்றலும் மேன்மேலும் பெருகி வளரும் பொருட்டு எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானுக.

உயிர்களுக்கு உயர்ந்த நிலையை அடையவேண்டும் என்ற விருப்பம் இயற்கையிலேயே ஏற்பட்டுள்ளது. இதன்பொருட்டே முயற்சியும் நடைபெற்று வருகின்றது. ஆனால் அதற்கு எதிர்மறையான பலனை அனுபவிக்க நேருவதும் உண்டு; ஆயினும் எல்லா உயிர்களும் மேன்மையைத்தான் விரும்புகின்றன. இந்த மேன்மையும், இம்மைக்குரியது மறுமைக்குரியது என இருவகைப் படும், மனிதன் தன்னால் பழகப்பட்ட எந்த விஷயத்திலும் நிறைந்த சுகத்தை அனுபவிக்காததனால் உயிர்களைப் பற்றிய ஆராய்ச்சிகள் முதன் முதலாக மனிதனது உள்ளத்தில் எழுந்தன. இவ்வாறு எழுந்ததன் பயனாகவே இப்போது பல வேற்றுமைப்பட்ட கொள்கைகளையுடைய பல்வேறு வகைச் சமயங்களைக் காண்கிறோம். அவைகளில் இவ்வேற்றுமையினால் சமூக முன்னேற்றத்தில் மாறுபாடிருந்தாலும் மெற்சொன்ன பிரிவினையானது எல்லா சமயத்தினராலும் பொதுவாக ஒப்புக்கொள்ளத் தக்கதேயாகும். இதில் சமுதாயத் துறை (Social) கல்வித் துறை (Educational) ஒழுக்கம் (Moral) அரசியல் (Political) ஆகிய நான்கு வகையான முன்னேற்றங்களையும் இம்மைக்குரியது என்கிற முதலாவது இனத்திலும்; தவம், போகம், ஞானம் இவைகளை மறுமைக்குரியது என்கிற இரண்டாவது இனத்திலும் சேர்க்கவேண்டும். இம்முன்னேற்றங்கள் எல்லாச் சமயங்களுள்ளும் ஒரே தன்மையாயிருப்பின் வேற்றுமைகளுக்கு வழியேயில்லை. ஆனால் உருவங்களுள் வேற்றுமை காணப்படுவது போல் சமுதாய விஷயங்களிலும் வேற்றுமை காணப்படுகின்றது. மேற்கூறிய வேற்றுமைகளால் தான் மத வேற்றுமைகளும் உண்டாயின.

## சமயங்களின் காலம்.

இந்துசமயம் உற்பத்தியாகி இன்றைக்கு (1960852976) நூற்றித் தொண்ணூற்று கோடி எட்டு லக்ஷத்து ஐம்பத்திராயிரத்துத் தொளாயிரத்தெழுபத்தாறு வருஷங்கள் ஆகின்றன வென்று ஆரிய சமாசத் தலைவரான "சுவாமி தயானந்த சரஸ்வதி" கணக்கிட்டுக் கூறுகின்றார். அதற்கு அவர் எழு மனுக்களையும் அவர்களின் அரசாட்சிக் காலத்தையும் ஆதாரமாகக் காட்டுகிறார். இவ்வளவு காலப் பழக்கமுள்ள இந்தச் சமயத்தைத் தங்கள் சமயமென ஒத்துக்கொள்வோர்களின் தொகை இருபத்தொன்றரைக் கோடியாகும். மகம்மதிய மதம் ஏற்பட்டு 1343-வருடங்களாகின்றன. மகம்மதியர்களின் தொகை முப்பத்தி மூன்றுகோடியாகும். கிறிஸ்து மதம் உண்டாகி 1927-வருடங்களாகின்றன. கிறிஸ்தவர்களின் தொகையோ ஐம்பது கோடியாகும். 2469-வருடமாக புத்தரையும் திரிபீடக நூலையும் நம்புகின்றவர்கள் அறுபது கோடி ஜனங்கள் இருக்கிறார்கள்.

இனி, இருபத்தொன்றரைக் கோடி இந்துக்களுள் ஒன்றரைக்கோடி மக்கள் பார்ப்பனர்களாவார்கள்; ஏனையோர்கள் பார்ப்பனரல்லாதாராவார்கள். இந்தக்கணக்கின்படி பார்ப்பனரல்லாதார்களுள் பதினெட்டு பேர்களுக்கு ஒரு பார்ப்பனப் புரோகிதன் ஆகின்றான் என்று கணக்கிடலாமன்றோ? மேற்கூறிய ஒன்றரைக் கோடி பார்ப்பனர்களும், பார்ப்பனரல்லாதாரின் இனத்திலிருந்து, ஒவ்வோர் காலங்களில் பார்ப்பனர்களாக மாற்றப் பெற்றவர்களும், தாங்களாகவே மாறினவர்களுமாவார்கள்.

குமாரிலபட்டர், சங்கராசாரியார், இராமானுசர், மத்வர் முதலிய மதாசாரியர்கள் அநேக தடவைகள் சூத்திரர்களைப் பார்ப்பனராக்கியதாக "சங்கரதிக்விஜயம்" முதலிய நூற்களாலும், தேச சரித்திரங்களாலும் அறியக் கிடக்கின்றது. உண்மையில் பாரப்பனரல்லாதார் இந்துக்களல்லவென்றும் பார்ப்பனர்கள் தங்கள் சுயநலத்தின் பொருட்டு இவர்களையும் இந்துக்களென்று கூறி ஏமாற்றியதாகவும் கொள்ளவேண்டும். இப்படியிருந்தால் உண்மை இந்துக்கள் (ஒன்றரைக் கோடி) எவ்வளவு குறைவு என்பதைக் காரணத்துடன் ஆராய்வோம்.

இந்துக்கள் தவிர மற்ற எல்லா மதத்தினருக்கும் தங்களுக்கென சொந்தமான ஒரு மதத்தலைவரும் அத்தலைவரால் பாம்பரையாக வெளியிடப்பட்ட மதக் கொள்கைகளும் இவைகளடங்கிய மத நூலும் அம்மதத்தைச் சார்ந்த அனைவருக்கும் பொதுவாக உண்டு. விளக்கமாகக் கூறுங்கால் மகம்மதியர்களுக்கு "மகம்மது நபி" என்ற சமயத் தலைவரும் "குரான்" என்ற மத நூலும் அம்மதத்தில் அனைவருக்கும் பொதுவாக இருக்கிறது. இவர்களுள் ஒவ்வொரு ஆண்மகனும் பெண் மகளும் தங்கள் குருவையும், மத நூலையும், மதக் கொள்கைகளையும் முறையே அன்புடன் வணங்கியும் போற்றியும் வருகிறார்கள். புத்த சமயிகளுக்கு "புத்தர்" என்னும் மதத்தலைவரும் "திரிபீடகம்" என்னும் மதநூலும் இருப்பது யாவரும் அறிந்ததே. இவ்வாறே கிறிஸ்தவர்களுக்கும் "கிறிஸ்து" வென்னும் மதத்தலைவரும் "பைபிள்" என்னும் மத நூலும் இருக்கின்றது. இந்துக்கள் நீங்கலாக மற்றச் சமயத்தினருள் ஆண் பெண் வேற்றுமையின்றி ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்கள் மத நூற்கள்

எந்த எந்தப் பாஷையில் எழுதப் பட்டிருக்கின்றனவோ அந்த அந்தப் பாஷையிலேயே அதைப் படிக்கவும் அதிற் சொன்னபடி ஒழுகவும் அதிகாரமுண்டு. இதில் உயர்வு தாழ்வு என்கிற வேற்றுமை காட்டப்படுவதே இல்லை. இவ்விதம் சமய நூற்களைக் கற்று, அதன்படி ஒழுகாத ஒருவனை ஏனையோர் நிந்திக்கவும் செய்கிறார்கள். ஒரு முகமதியன் தோட்டி வேலை செய்பவனாயிருந்தாலும் தான் முகம்மது மதத்தினன் என்கின்ற உரிமையால் "மவுல்வி" (மத போதகன்) ஆகவேண்டுமென்றாலும் ஆகலாம். பணம் திரட்டிப் பெரிய பிரபு (சாயபு) ஆக வேண்டுமென்றாலும் ஆகலாம். துறவியாக வேண்டு மென்றாலும் ஆகலாம். தேவாலயம், பாடசாலை முதலிய இடங்களிலும் இவனைக் குறித்து யாதொரு வேற்றுமையும் பாராட்டுவதில்லை; இவ்விதமே புத்த சமயிகளுக்குள்ளும் கிறிஸ்துவர்களுக்குள்ளும் எல்லோருக்கும் சமமான உரிமை இருப்பதை நன்கு உணர்தல்வேண்டும்.

இந்துக்களின் நிலைமையோ இவைகளினின்றும் எவ்வளவோ வேற்றுமை உள்ளதாகக் காணப்படுகின்றது. இந்து மதத்தினுடைய சாதிக் கோட்டையானது சமாதான காலங்களில் நல்லெண்ணத்துடன் பிரவேசிக்கின்ற நண்பனையும் பிரவேசிக்க வொட்டாமல் தடுக்கின்றது. முன் கூறப்பட்ட மகம்மதியர் முதலிய சமயத்தாரின் சமுதாயப் பெயர் அந்தந்தச் சமயத் தலைவனது திருநாமத்தைத் தலையில் சூடிக்கொண்டு விளங்குகின்றது. இந்துவென்னும் பொதுப்பெயரை அதன் உண்மை உணராமலேயே அதனை அநேகர் இன்றைக்கும் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். 'இந்து' என்றும் 'இந்தியா' என்றும்

வழங்கி வரும் சொற்கள் நமது நாட்டில் வழங்கிவரும் எந்த மொழியினின்றும் தோன்றினதல்ல. மற்று வேறு நாட்டாரால் நமக்கு அப்பெயர்கள் அளிக்கப் பெற்றன. இவ்வற்றை நமக்குத் தந்தவர்கள் பாரசிகர்கள். அவர் களின் மொழியில் இப்பதங்களுக்கு நாகரீகத் தன்மை இல்லாதவர்கள், கடவுள் நம்பிக்கையற்றவர்கள், திருடர் கள் என்பன முதலிய பல இழிந்த பொருட்கள் காணப் பெறலாம். இப்பெயரை நாம் மிகவும் வணக்கத்துடன் ஏற்றுக் கொண்டு மகிழ்ச்சியுறுகின்றோம். இதில் வியப் பிற்கு இடமில்லை. ஏனென்றால் முதலில் நமது நாட்டில் புகுந்த ஆரியர்களால் அளிக்கப் பெற்ற ॐ தஸ்யு (கொள் ளைக்காரன்) தாசன் (அடிமை) சூத்திரன் (திருடன்) முதலிய இழிவான பெயர்களை இங்குள்ள பழைய குடி களின் கால்வழிகளாகிய நாம் இன்றும் பொறுமையுடன் ஏற்றுக் கொள்ளுகிறோம். ஒருவனை வஞ்சித்த நம்மை மற்றொருவன் வஞ்சிக்கும்போது துக்கப்படுவது தகுதி யன்று. இம்மதத்தில் (இந்து) இருக்கிற பலதிறப் பட்ட கடவுளரின் தன்மைகளும் பலதிறப்பட்ட கொள் கைகளும் பெரும்பாலும் வெளிப்படையாகையால் ஈண்டு விரித்துக் கூறவில்லை. ஆனாலும் இந்துக்கள் எனப்படு வோரில் சிலர் தவிர ஏனையோருக்கு இந்து மதத்தின் உருவம் இன்னது; இதை உணர்த்தவல்ல நூற்கள் இன் னின்னவை; அந்நூற்களால் தெரிந்து கொள்ளவேண்டி யவை எவை என்பதைப்பற்றிய அறிவு சற்றேனுமில்லை. "ஸனாதன தர்மம்" (மிகப் பழைய தர்மம்) வருணாச்

---

ॐ தஸ்யு, தாஸன், சூத்திரன் என்னும் நாமங்களை வேதங் களிலும் ஸ்மிருதிகளிலும் பலவிடங்களில் பார்க்கலாம்.

சிரம தர்மம் என்பன முதலிய சில பெயர்களும் இதற்குக் கொடுத்துத் தூயதாகக் கருதுகின்றார்கள். ஆயினும் பெயருக்குத் தக்க பொருளைத் தருவதாக இல்லை. நாம் விரும்புகிற பொருள் மற்றொருவனிடம் இருக்கிறவரையில் நாம் அதை வைத்திருப்பவனுக்கு அடிமையாவோம். பணக்காரனது வாசலில் காத்து நிற்கிற பிச்சைக்காரனையும், தான் தான் காதலித்த கட்டழகியின் ஏவற்படிக்குப் பாவைபோல் கூத்தாடுகிற காதலனையும் இவ்வடிமைத் தொழிலில் நிலைக்கச் செய்தது. இவ்விருவராலும் விரும்பப்படுகிற செல்வத்திற்கும், அழகுக்கும் முறையே பிரபுவும் பெண்ணும் உடையவர்களாயிருப்பதேயாம்.

அவ்வாறே நமது உள்ளத்தில் இருந்துகொண்டே நம்மை அடிமையாக்குவது இந்த ஆசைதான் இதற்குரிய பொருளை அடைந்தவுடன் அதன்கண்ணிருந்த மேலான எண்ணமும் அத்துடன் அதைக்குறித்த ஆசையும் போய்விடுகிறது. இதனால்தான் ''அஸ்வாதீனே காம:" (விரும்பிய பொருள் வசப்படாதவரையில் ஆசை) என்று பெரியோர்கள் மொழிந்தார்கள். பயனற்ற பொருள்களைக் குறித்துஞ் சிலர் புகழ்ந்து கூறுவதைக் கேட்டு அத்தகைய பொருட்களிடத்தும் ஒவ்வொருவனோ விருப்பம் வைப்பதுண்டு. இது ஆராய்ச்சி செய்யாமையினாலேயே நிகழ்வது.

எல்லா மனிதர்களுடைய மனதும் ஃ ஞான விருப்பத்திற்கு அடிமையாயிருக்கிறது. இது சாஸ்திரங்களுக்

---

ஃ ஞானத்தில் பிறவித்துன்பம் அடியோடு தொலைந்து பேரின்பசித்தப் பெருவாழ்வை நல்குவதாக இருத்தலினென்க.

குள்ளிருக்கிறதென்றும், சாஸ்திரங்கள் ஞானரத்தினக் களஞ்சியங்களென்றும் பெரும்பான்மையாக எவ்லோருக்கும் தெரியும். ஆனல் உண்மையில் ஒன்றுக்கும் உதவாததாயினும் ஒருசுவடியைக் கையில் வைத்துக்கொண்டு நீங்கள் விரும்புகிற பொருளைச் சேமித்து வைத்திருக்கிற களஞ்சியம் இதுவே, மோக்ஷம் இதற்குள் அடங்கியிருக்கிறது என்றிவ்வாறு புகழ்ந்து கூறி மக்களை நம்பச் செய்யும் அந்தச் சுவடியைப் பொதுமக்களுக்குத் தெரியாத ஒரு மொழியில் எழுதியதாகவும் இருந்தால் அந்தச் சுவடியும் மொழியும் எவன்வசமிருக்கிறதோ அவனுக்கு மனிதர்கள் அடிமையாவது திண்ணமே. பொருளாக விருந்தால் கொள்ளையடித்தோ மற்றெவ்விதமாவோ கைப்பற்றி விடுவார்கள். கல்வியானது அதையுடையவன் விரும்பிக் கொடுக்காத வரையில் எங்ஙனம் அடைய முடியும். உண்மையாக அந்தச் சுவடியில் பொதுமக்களுக்கு நல்ல பயனைக் கொடாததும் தீய ஒழுக்கங்களைப் பழகுவதும் தீய வழியில் செலுத்துவதுமான கொள்கைகள் நிறைந்திருந்தாலும், எல்லோராலும் விரும்பத்தக்கது இது ஒன்றேயென்று புகழ்ந்து கூறி மக்களை ஏமாற்றிக்கொண்டிருக்கிற காலம் வரையில் அதை வைத்துக் கொண்டிருப்பவன் கழுதைக்குச் சமனாக இருந்தாலும் அவனை எல்லோரும் வணங்குவார்கள்.

இவ்வாறே தீய எண்ணங்களையுடைய பார்ப்பனர்கள் "வேதம்" எல்லா விருப்பங்களையும் தரவல்லது என்று கூறிக்கொண்டு அது யாருக்கும் பயன்படாத மொழியிலிருப்பதால் அதனைப் புகழ்ந்து கூறிக்காப்பாற்றி வருவதோடு நம்மவர்களைக் குறித்து,

(பத்யுஹ்ரவா எதத்ஸ்மசானம்சூத்ரஸ்தஸ்மாத் சூத்ர ஸமீபேநாத்யேதய்வம்)

(அதாஸ்ய வேதமுபஸ்ருண்வதஸ்த்ரபுஜதுப்யாம்ஸ் ரோத்ரபூரணம்)

வேதத்தைக் கேட்கிற சூத்திரனது காதுகளில் ஈயத்தையும் மெழுகையும் உருக்கிவிடவேண்டும்

1 சூத்திரன் நடமாடுகிற இடம் சுடலையானதால் அவன் பக்கத்தில் வேதமோதக்கூடாது.

"வேதாச்சாரணேஜிஹ்வாச்சே தோதாரணேசரீரபேத."

வேதத்தைச் சொல்லுகிற சூத்திரனது நாக்கை அறுத்தெறியவேண்டும் பொருளை யுணர்ந்து வைத்திருக்கிற நெஞ்சைப் பிளக்கவேண்டும்.

இவ்வாறு நல்லோர்கள் காதினுல் கேட்கவும் பொருத அநேக கொடிய விதிகளை ஏற்படுத்தி இந்த விதிகளும் வேதத்திலுள்ளது, வேதம் கடவுளால் பிராமணர்களாகிய எங்களுக்குச் சொந்தமாகத் தரப்பெற்றது என்று வாய்ப் பறைசாற்றித் திரிவதோடு தங்களது மோச வலையில் சிலரைச் சிக்கவைத்து அவர்கள் மூலமாகவும், சிலவிடங்களில் (தங்களுக்குச் சமூகபலமுள்ள விடங்களில்) தாங்களாகவும் தங்களுக்குக்கீழ்ப்படியாத நம்மவர்களைப்படுத்தியபாடு இவ்வளவெனச் சொல்லத்தரமன்று. மகாமேதாவிகளாகிய சிலரும் உயிருக்காகப் பயந்தோ, மற்றெத

---

1 பார்ப்பனர்கள் தங்கள் இனத்தாரைத் தவிர மற்ற யாவரையும் சூத்திரர் என்று சொல்லுகிறுர்கள். மனுஸ்மிருதி முதலிய நூற்களும் அவர்களுடைய கூற்றுக்கு அநுகூலமாகவே இருக்கின்றன.

ஞலோ, “நான் பிராம்மண தாஸன்” என்று சொல்லியி ருப்பது ‘போஜசம்பூ’ முதலிய நூற்களால் காணக்கிடக் கின்றது. மகா கவியும் பெரிய வள்ளலுமான போஜராஜர் பிராமணர்களைப் புகழ்ந்து கூறியிருப்பதை இரண்டாவது அத்தியாயத்தில் விபரமாகக் கூறுகிறேன். எத்தகைய பெரியாரையும் ஏமாற்றும்படியான இந்திரசால வித்தை யைக் கற்ற பார்ப்பனர்களின் மோசக் கருத்து எவ்வளவு தூரம் பலனைக் கொடுத்து வருகிறதென்பது எல்லோருக் கும் அநுபவமானதால் அதிகம் சொல்லத் தேவையில்லை. இக்காலத்தில் “ஹிந்து” வென்று வெட்கமின்றித் தங்க ளைக் குறித்துச் சொல்லித்திரிகின்ற பலரும் இம்மோச வலைக்குள் அகப்பட்டவர்களே.

ஆனால் மோசம் பண்ணுவதற்கு காலம் எப்பொழு தும் வாய்க்குமா? பட்டப்பகலில் பலர் சேர்ந்திருக்கும் போது களவாடுவது கடினமன்றோ? அதைப்போலவே பார்ப்பனர்களுக்கும் தங்களது ஜாலம் பலிக்கின்ற காலம் மலையேறிவிட்டது. இக்காலத்திலோ நமதுநாடு பிரிட் டிஷ் ஆட்சிக்குள்ளிருக்கின்றது. யார் யார் எதை எதைக் கற்றுக்கொள்ள விரும்புகிறார்களோ அவரவர் அதை யதைக் கற்றுக்கொள்ளலாம்.

(மந்திரத்தை மறைத்துவை) என்று எந்நூற்களைப் பற்றி பார்ப்பனர் கூவிக்கொண்டிருந்தனரோ, அவைகளை யெல்லாம் அச்சு வாகனத்தில் ஏற்றி அம்பலத்திற்குக் கொண்டுவந்துவிட்டார்கள். குறைந்த விலைக்கும் விற் கின்றனர். வேண்டுவோர் பெற்றுப் படிக்கலாம். அவை களில் சொல்லப்பட்டிருக்கிற வசனங்களைத் தெரிந்து கொள்ள விரும்புவோர் உயிருக்குக் கேடில்லாமல் தெரிந்

துகொள்ளலாம். இதுவே நமது நற்காலம். இத்தருணத்தை நன்றியறிதலுடன் பயன்படுத்திக் கொள்வோமாக. இல்லாவிடில் செய் நன்றி கொன்ற பாவத்திற்காளாவோம். ஆதலால் இந்துக்களின் சமய நூற்கள் யாவை? அவைகளில் கூறப்படும் பொருட்கள் எவை? தலைவர்கள் யாவர்? இவைகளைக் குறித்தாராய்வோம்.

இந்துக்களின் சமய நூற்கள் "சுருதம்" "ஸ்மிருதம்" என இருவகைப்படும். சம்ஹிதைகள், பிராம்மணங்கள், உபனிஷத்துக்கள் ஆகிய இவைகளடங்கிய நான்கு வேதங்களைச் 'சுருத' மென்பார்கள். இவ்வேதங்கள் முதலும் முடிவில்லாதனவும் எவராலும் உண்டுபண்ணுதவையுமானதால் இப்பெயர் பெற்றதென்று ஒரு சாரார் கூறுகின்றனர். மற்றொரு சாரார் வேதம் கடவுளால் உண்டுபண்ணப்பட்டது என்றும் கூறுகின்றனர். ஆனல் வேதம் ஒரு புருஷனல் உண்டுபண்ணப்பட்டது என்றால் மனித இயற்கைக் குணமாகிய மறதியினால் ஒன்றோடொன்று முரண்படக் கூறுதல் முதலிய குற்றங்கள் வேதத்திலும் இருப்பதாக ஏற்படும். இத்தகைய குற்றங்கள் வேதத்தில் இருப்பதாக, வேதத்திற்குத் தலைவனுளன் என்று ஒப்புக்கொள்ளுகின்றவர்கள், சொல்லவில்லையாதலால், புருஷனல் உண்டுபண்ணப்பட்டதன்று. இரண்டாவது, குற்றமில்லாத ஈசுவரனல் செய்யப்பட்ட வேதத்தில் குற்றமில்லை, என்று சொல்லுவோமானல் ஈசுவரன் ஒருவன் உளன் என்பதை .உறுதிப்படுத்துவதற்கு வேதம் தவிர வேறு பிராமண நூலில்லாததால் ஃ ஒன்றையொன்று பற்றிய குற்றம் உண்டாகும். ஆத

---

ஃ இதை வடநூலார் அன்யோன்யாஸ்ரய தோஷமென்பர். அல்லது பூர்வாபர விருத்தம் என்பர்.

லாலும் ஈசுவரனை வேதத்திற்குத் தலைவனாக ஒப்புக் கொள்ளமுடியாது. (இவைகளின் சிருஷ்டிக் கர்த்தாவா வாகிய ஈசுவரனை இவர்களின் வேதத்தினால் தான் நிலை பெறச் செய்யவேண்டும், என்பது உண்மையே) 'வேதம் நித்தியம்' என்பதை நிலை நாட்டுவதற்கு ஒரு அபிமானப் பிரமாணமும் கூறுகின்றனர். அதையும் ஈண்டு எடுத்துக் காட்டுவோம். அது வருமாறு:—

வேதாத்யயனம் ஸர்வம், குர்வத்யயனபூர்வகம்;
வேதாத்யயன ஸாமான்யாதாது னுத்யயனம்யதா.

வேதம் கற்றுக்கோடுப்போர் மற்றொருவனிடத்தி லிருந்து கற்றுக் கொண்டவர்களாதலால் வேதம் நித்யம். அப்படியானால் முதல் முதல் வேதத்தைக் கற்பிப்பதற்கு ஆசானாயிருந்த கடவுளுக்கு வேதம் கற்றுக் கொடுத்தவர் யார்? அவரே வேதத்தை உண்டாக்கிக் கற்றுக்கொடுத் தார் என்று கூறுவோமாயின் வேதத்தில் சொல்லப்பட் டிருக்கிற விஷயங்களைக்குறித்த முற்றறிவும் ஈசுவரனுக்கு இன்றியமையாது வேண்டப்படுவதால் அவையனைத்தும் படைப்புக் காலமுதல் இருந்தனவென்று ஒப்புக்கொள்ள வேண்டி வரும். அது பொருந்தாது. ஆதலால் ஈசுவ ரனுடைய முற்றறிவிற்கு விஷயமாகிய வேதத்தைப் படைப்புக்கால முதல் நினைத்துக் கற்பித்தார் என்று ஒப் புக்கொள்வதே யுக்திக்கு ஒத்ததாம்.

இந்த வாதத்தின் இனிமையும் இந்த வாதத் தலைவர் களின் அறியாமையையும் விளக்கும் பொருட்டே இவ்வ ளவு தூரம் சொல்ல நேர்ந்தது. இனி, ரிக்ஸம்ஹிதையும், ஐதரேயம், கௌஷீதகி என்கிற பிராம்மணங்களையும் ஐத

ரேயாரண்யகம் முதலிய உபநிஷத்துகளும் இருக்கு வேதத்தைச் சார்ந்தவை. யஜுர் வேதம் ஒன்றையே கிருஷ்ண யஜுஸ் சுக்கில யஜுஸ் என இரண்டாகப் பிரித்திருக்கிறார்கள். இவைகள் இரண்டிலுமுள்ள மந்திரங்கள் பெரும்பாலும் ஒரே விதந்தான்; ஆனால் அம் மந்திரங்களின் வைப்பு சற்று முறை பிறழ்ந்து காணப்படுறகிறது. நிற்க, வேதத்திற்கும் கருமை, வெண்மை முதலிய நிறங்கள்உண்டா? என்று ஐப்படுகின்றவர்களைப் பார்த்து பார்ப்பனர்கள் ஒரு கதை கூறுவது வழக்கம். அது வருமாறு:-

வேதத்தைப் பகுத்த வியாச முனிவரின் சிஷ்யர்களுள் ஒருவரான வைசம்பாயனரிடம் 'யாக்ஞவல்கியர்' வேதத்தை உணர்ந்தார். கடைசியாக ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு வைசம்பாயனர் இவரிடம் மனத்தாபம் கொண்டு தன்னிடம் கற்றறிந்த வேதங்களைத் திருப்பித் தரும்படி கேட்டனர் யாக்ஞவல்கியரும் தமது தவ வலிமையால் தாம் கற்றுணர்ந்த வேதத்தைக் கக்கிவிட்டார். இவ்விதம் வாந்தி பண்ணப்பட்ட வேதத்தைக் குருவின் ஆணைப்படி வைசம்பாயனருடைய மற்றைய மாணாக்கர்கள் விழுங்விட்டார்கள். அது சமயம் அவர்களது புத்தியானது தெளிவாக இல்லாமையால் இந்த யஜுஸ் கருமை நிறத்தை அடைந்தது. இது தான் "தைத்ரீய ஸம்ஹிதை" எனும் பெயரால் வழங்கி வருகின்றது. சதபதப் பிராமணம், "பிரகதாரண்ணிய கோபனிஷத்து" ஆகிய இரண்டும் இதைச் சார்ந்தவையே. சுக்கில யஜுர் வேதத்திற்கு 'வாஜஸனே யீஸம்ஹிதை" என்று மற்றொரு பெயரும் உண்டு. இதைச் சார்ந்தது ஈசாவாஸ் யோபனிஷத்தாகும். ஸாமம், அதர்

வனம் இவ்விரண்டிற்கும் கணக்கற்ற பிராம்மணங்கள் இருப்பதாகத் தெரிகிறது. உபனிஷத்துகள் ஏராளமாக இருந்தாலும் ஏறக்குறைய பத்து உபனிஷத்துக்களை ° வைதிகம் என்றும் மற்றவைகளை வேதத்திற்குப் புறம்பானவைகள் என்றும் சொல்லுகிறார்கள்.

உபனிஷத்துக்களில் ஆன்மாவைக் குறித்த விஷயங்கள் அ[illegible]திகமாகக் காணப்படுகின்றன. ஆனால் இவற்றில் பெரும் பகுதியும் பகவான் புத்தன் பிறந்தபிறகே ஏற்பட்டவை. [illegible]வல்லா உபனிஷத்தும் கிறிஸ்து உபனிஷத்தும் இருப்பதில்[illegible]ருந்தே இவைகள் பிற்காலத்தியவைகள் என்பது தெளிவா[illegible]ப் விளங்கும். சம்ஸ்கிருத இலக்கியத்துள் 1 "சந்தேச கா[illegible]வியம்" என்ற ஒரு பகுதி இடைக்காலத்தில் ஏற்பட்டிரு[illegible]ப்பது போல் உபனிஷத்து என்கிற ஒரு பகுதியும் ஏற்பட்டி[illegible]ருப்பது உண்மை, உபனிஷத்தை உண்டுபண்ணியவர்க[illegible], புத்த பகவானது உயர்ந்த கொள்கைகள் அனைத்தும் வே[illegible]முமாகுமென்று உறுதிப் படுத்துவதற்கு இந்த இந்திர ஜா[illegible]லத்தைக் காட்டி மக்களை மயக்கி இருக்கிறார்கள். இதைப்பற்[illegible]றி மற்றோரிடத்தில் விரிவாகக் கூறுவோம். இனி 'ஸ்மிரு[illegible]தம்' என்ற இரண்டாவது பிரிவில் ஆறு அங்கங்கள், பு[illegible]ராணங்கள், தரும சாஸ்திரங்கள் (மனு, யாக்ஞவல்கியர்[illegible] முதலியோரால் எழுதப்பெற்றவை) முதலிய நூல்களும், ஆகமங்களும் தரிசன கிரந்த (நியாய, வைசேஷிக, சாங்கி[illegible] யோக வேதாந்த)

---

° வேத சம்பந்தம்.

1 சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தஸ், ஜோதிஷம், இவை ஆறுமாம்.

ங்களும் அடங்கும். இவற்றுள் ஆறு அங்கங்களாவன. வேதத்தில் சொல்லப்படிருக்கிற கருமங்களைச் செய்யும் முறையை விரித்துக் கூறுவனவும் வேத மொழியிலுள்ள சில தனிப்பட்ட சொற்களுக்குப் பொருளையுணர்த்துவன வுமாகும் மேற் கூறப்பட்ட 1 தரிசன நூற்கள் ஆறும் கௌதம ஸ்மிருதி முதலிய சில தர்ம சாஸ்திரங்களும், 2 ப்ராதி சாக்யங்களும், 3 சூத்திர வடிவினதாக இருக் கின்றன.

தரிசனங்களுள் சாங்கியமும் வேதாந்தமும் தவிர ஏனைய பூர்வமீமாம்ஸை, நியாயம், வைசேஷிகம், யோகம் இவைகளைச் சமயக் கொள்கையுடன் பெரும்பாலர் ஏற் றுக்கொள்ளுவதில்லை. புராணங்கள் பதினெட்டு. அன் றியும் புராணங்கள் என்ற பெயருடன் அளவற்ற நூற்க ளும் காணக்கிடக்கின்றன. தருமமென்ற சொல்லிற்கு நான் முறைப்படி ஒவ்வொரு வருணத்தானும் கட்டாயம் செய்யத்தக்க தொழில் என்றே பொருள் கொள்ளக்கிடக் கின்றது. இதற்கு உதாரணமாக:—சோதனு லக்ஷணோர் த்தோ தர்மம்: (ஒவ்வொரு வருணத்தானையும் தத்தந் தொழிலில் ஏவுவதாகிய இலக்கணத்தை யுடையதே தருமம்) என்று 'ஜைமினி' பூர்வமீமாம்சையிற் கூறுகின் றார்; எனவே அவசியம் செய்யத்தக்க தொழில் என்பத

---

1 தரிசனம்-சாஸ்திரம்

2 இதர்குச் சரியான தமிழ்ப் பெயர் விளங்கவில்லை. ஆயி னும் வடமொழியிலும் வேறு பெயர் காணப்படவில்லை. இது வேத இலக்கியத்திற்கு இலக்கணமாகுமென்பர்.

3 சூத்திரம்-குறள்.

னுல் யாகம் முதலியவைகளைச் செய்தேதீரவேண்டுமென்பது பெறப்பட்டது.

வேதம் "அபௌருஷேயம்" (புருஷனுல் செய்யப்படாதது) ஆகையால் குற்றமற்றதும் மற்ருெரு பிரமாண நூலின் உதவியின்றிச் சுதந்தரமாகவும் இருப்பது என்பது வைதிகர்களது கொள்கை. மேலும் எல்லா நூற்களும், ஒழுக்கங்களும் இதற்குக் கிழ்ப்படிந்தே இருக்க வேண்டும் என்பதாகக் கௌதமஸ்மிருதியின் முதலில் (வேதோதர்ம மூலம்) என்ற சூத்திரத்தால் முடிவு கூறப்பட்டிருக்கின்றது. வேத வாக்கியத்திற்கு முரண்படாத ஸ்மிருதி வாக்கியமும் ஸ்மிருதிக்கு முரண்படாத ஒழுக்கங்களும் பிரமாணங்களாகும். "தத்விதாம்ச ஸ்மரண சீலே" என்னும் சூத்திரத்தால் இக்கருத்தைக் கோதமன் வெளியிட்டுள்ளார். ஆனுல் இரண்டு ஸ்மிருதி வாக்கியங்கள் ஒரு விஷயத்தைக் குறித்துக் கூறும்போது ஒன்றுக்கொன்று முரண்பட்டால் இரண்டும் பிரமாணங்களே. இத்தருணத்தில் 1 விகற்பமே கொள்ளத்தக்கது. சுருக்கமாகக் கூறுங்கால் மேற் சொன்ன ஸம்ஹிதை, பிராம்மணம், உபநிஷத்துகள் இவைகளடங்கிய வேதம்தானே பிரமாணமும், தரும நூல் வேதத்தைக் கருதிப் பிரமாணமும் இவைகளுக்கு முரண்படாத ஒழுக்கங்களும் பிரமாணங்களாகும். ஆனுல் வேத ஸ்மிருதிகளை ஒத்துக்கொள்ளாமல் இந்நூற்களுக்கு விரோதமான வேருெரு வசனம் யுக்திக்குப்பொருத்தமாய் இருந்தாலும் பிரமாணமென்று சொல்வது பெரிய குற்றமாகும் என்பது:—

(ஶ்ருதி ஸ்துவேதோவிஜ்ஞேயோ தர்ம சஸ்த்ரம்து வைஸ்ம்ருதி:
தேஸர் வார்த்தேஷ்வமீமாம் ஸ்யேதாப்யாம் தர்மோவிநிச்சித:

யோவமன்யேததேமூலே ஹேது சாஸ்தராஸ் ரயாங்ரா:;
ஸஸாது பிர்பஹிஷ்கார் யோநாஸ்திகோ வேதநிந்தக:) (மனு)

(பொருள்—) வேதங்களும், ஸ்மிருதிகளும் தருமத்திற்கு இருப்பிடங்களாதலால் இவைகளை யுக்திவாயிலாக எவனாவது கண்டிக்க முயன்றால் அத்தகைய வேத நிந்தகனான நாஸ்திகனை நல்லோர்கள் ஊரைவிட்டுத் துரத்திவிடவேண்டும்.) என்று இதனால் அறியக் கிடக்கின்றது.

இவ்வேதங்களிலும் ஸ்மிருதிகளிலும் சொல்லப்படுவதுதான் 'ஹிந்து சமயம்' இந்நூற்களில் சொல்லுகிறபடி ஒழுகுகின்ற மனிதன் எல்லாவகைகளிலும் முன்னேற்றமடைவான், என்று இந்துக்கள் நம்புகிறார்கள். ஆனால் வேதத்திற்கு அதிகாரமில்லாத தமிழ் மக்கள் தங்களை இந்துக்கள் என்று வெட்கமில்லாமல் கூறிக் கொண்டும் நினைத்துக்கொண்டும் இருந்தாலும் இவர்களுக்கு வேத ஸ்மிருதிகளில் சற்றேனும் உரிமையோ அதிகாரமோ இல்லை. ஆயினும் பார்ப்பனர்களும் இவர்களை (பார்ப்பனரல்லாதாரை) இந்துக்க்ள் என்று சொல்லுகிறார்களே எனின், இது தங்கள் சுயநலத்தைப் பாதுகாக்கும் பொருட்டுப் பார்ப்பனரல்லாதாரை என்றென்றைக்கும் அடிமைப் படுகுழியிலேயே அமிழ்த்தி வைக்கவேண்டுமென்ற மோசக் கருத்தை உள்ளடக்கிக் கொண்டு மயக்குகிற பசப்பு வார்த்தை என்றறிந்து கொள்ளுக.

சமய நூற்கள் இம்மைக்குரிய உயர்வுக்கும் மோக்ஷத்திற்கும் வழி காட்டிகளன்றோ? ஆனால் இந்துக்களின் மத நூல்களில் மிகப்பழமையான, இருக்கு வேதத்தில் மறுமையைப்பற்றிக் கூறுகிற பாகம் மிகக் குறைவே.

இயற்கைப் பொருள்களை மேன்மைப்படுத்தித் தேவர்களாகக் கூறுவதும், அங்ஙனம் புகழ்ந்து கூறப்பட்ட தேவர்களிடம் தங்கள் கோரிக்கைகளைத் தெரிப்பதும் இதிலடங்கியிருக்கின்றன. இத்தகைய தேவர்களுக்கு இருப்பிடம் சுவர்க்கமும் அதை ஆட்சி புரிபவன் இந்திரனுமாவான். இதை எழுதி வைத்தவர்கள் விரும்புகிற பொருள்களை தேவர்களும் விரும்புகிறுர்கள். இவர்களால் வெறுக்கிறவர்களைத் தேவர்களும் வெறுக்கிறுர்கள். (இதனுல் பார்ப்பனர்கள் தங்களையே தேவர்களாக நினைத்துள்ளார்களென்று எண்ண இடந்தருகிறது 'பூசுரர்' என்ற பெயரும் இதற்குச் சான்ருகும்.) அருந்தல் பொருந்தல் முதலியவைகளிலும், பொழுதைப் போக்கும் மற்ற விளையாட்டுகளிலும் இவர்களுக்கும் தேவர்களுக்கும் வேற்றுமையுமில்லை. இறந்துபோகிற புண்ணியவான்கள் உயிருடனிருக்கும்போது இங்கு தேவர்களுக்குக் கொடுத்த சோமம், மாமிசம், (கள்ளு இறைச்சி) இவைகளின் உயர்வு தாழ்வுக்கேற்றவாறு அங்கும் (சுவர்க்கத்திலும்) சோமம், அமிர்தம், அழகிய பெண்கள் இவைகளை அனுபவிப்பார்கள். புண்ணியம் முடிந்தவுடன் பழையபடியே பூமியில் பிறக்கின்ருர்கள். இதுவே இருக்கு வேதத்தில் சொல்லப்பட்ட இன்ப நிலையின் சுருக்கம். இத் தோத்திரங்களைப் பார்க்கிறவர்களுக்கு அக்காலத்தில் இருந்த கொடியவர்களின் எண்ணங்கள் நன்கு புலப்படும். இந்நாட்டின் பழைய குடிகளாகிய நம்மவர்களை இவர்கள் பல விதத்திலும் துன்புறுத்தி வந்ததும் தங்களுக்கு உதவி செய்யும்படி இந்திரனையும், ஏனைய தேவர்களையும் அழைத்திருப்பதும் ஆகிய செய்திகளே அத் தோத்திரங்களில் மலிந்து கிடக்கின்றன.

இருக்கு வேதங்களிலுள்ள மந்திரங்களையே வேள்வி புரியுங் காலங்களில் ஓதவேண்டிய முறைப்படிக்குக் கோவை செய்ததே யஜுர் வேதமாகும். அன்றியும் 'அத்வர்யு' என்கிற ஒரு இனத்தாரின் (யாகத்தில் சம்பந்தப்பட்ட புரோகிதர்களுள் ஒரு வகையினர்) உபயோகத்திற்குள்ள சில நியமங்களும் இதில் அடங்கி இருக்கின்றன. "ஸாம" என்ற சொல்லிற்கே பாட்டு என்று பொருள். இதில் 'உத்காதா' என்கிற புரோகிதக் கூட்டத்தாரால் யாக காலங்களில் பாடும் பொருட்டு, பல ரிக்கு மந்திரங்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

இருக்கு வேதம்போலவே பல தோத்திரங்களும் அடங்கிய ஃ அதர்வ ஸம்ஹிதையில் கர்ம சம்பந்தமில்லாததனால் மற்ற மூன்று வேதங்களோடும் சேராமல் தனித்து நிற்கிறது. வேதத்தின் பயன் சுவர்க்காதி சாதனங்களான யாகம் முதலியவைகளில் மனிதர்களை எவ்வுவதும் கருமங்களைச் செய்யுங்கால் பொருளை நினைப்பூட்டுவதைக் கொண்டு மந்திரங்கள் பயனையுடையன வென்றும் வைதிகர்கள் எண்ணுகின்றார்கள்.

பிராமணக்கிரந்தங்கள் அனைத்தும் கருமங்கள் செய்யும் முறைகளைக் கூறுகின்றன. புரோகிதர்களின் சொத்தாகிய இந்நூல் கருமங்களை விளக்கிக்காட்டுவதேயாகும். இத்துடன் முடிவடையாது. "அனந்தாவைவேதா" (வேதங்கள் எண்ணிறந்தன.) அவைகளில் இப்போது கிடைத்துள்ளவைகள் தவிர மற்றவை கற்றலும் கற்பித்

---

ஃ இது பிற்காலத்தியதெனக் கருதப்படுகின்றது. காரணம் வேதம்த்ரயீ' என்ற வசனத்தாலென்க.

தலும் இன்றி அறியப்படாமற் போயின. இவைகளில் (பல வேதங்களின்) பொருட்களை அறிந்த ரிஷிகள் பிறருக்கும் பயன்படுமாறு அவைகளை வெளியிட்டார்கள். அவைகளே "ஸ்மிருதிகள்" ஆதலால் ஸ்மிருதிகள் வேதத்தின் உரை நூற்களாம். ஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட எல்லா விதிகளும் வேதத்தில் இல்லை. ஆயினும் வேத சம்பந்தங்களும் பிரமாணங்களுமாகையால் அவைகளைப் பின்பற்றியே மனிதன் ஒழுகவேண்டுமென்பது வைதீகர் (ஆரியர்)ளின் முடிவு.

உரை நூற்களாகையால் இந்து மதத்தின் உண்மைக் கருத்துகள் ஸ்மிருதிகளால் தான் அறியமுடியும். இந் நூற்களின் கொள்கைகளை ஆசாரம், விவகாரம், என இரண்டாகப் பிரிக்கலாம் முதற்பிரிவில் வருணாச்சிரம தருமங்கள், உணவின் பாகுபாடுகள், பதார்த்தங்களைச் சுத்தி செய்யும் முறைகள், தானம், சிரார்த்தம், பிராயச்சித்தம், இவைகள் அடங்கியுள்ளன. வியவகாரமோ, அரசியல் முறையாதலால் சமய முறையில் ஆசாரத்தைப் போல அவ்வளவு பொறுப்பில்லை-

கௌதம, நாரத சங்க, பிரகஸ்பதி, யாக்ஞவல்கியர், ஸ்வாயம்பு, ஸ்வாயம்புவ முதலிய அநேக ரிஷிகள் தரும நூற்களை இயற்றியுள்ளார்கள். இவைகளில் மனு ஸ்மிருதிதான் சிறந்தது. சாந்தோக்கியப் பிராம்மணத்திலும் வேறு பல நூற்களிலும் இதை (மனு)ப் புகழ்ந்து கூறியிருக்கிறது. அவைகளில் சில வருமாறு:—

* "மனுர்வையத் கிஞ்சிதவதத் பேஷஜம்" (மனுவின் வாக்கு நோயாளிக்கு மருந்துபோல மனிதனுக்கு இதத்தைக் கொடுக்கும். ஆதலால் சிரேஷ்டமான பிரமாணமாம். இது சாந்தோக்கிய பிராம்மணத்தில் உள்ளது ) மற்றும்:—

"வேதார்த்தோப நிபத்ஸ்முருத்வாத் ப்ராதான்யம் ஹிமனோ: ஸ்ம்ருதம்;
மன்வர்த்த விபரீதாது யாஸ்மிருதி: ஸாநசஸ்யதே.
நானுசாஸ்த்ராணி சோபந்தே தர்க்கவ்யா கரணனிச;
தர்மார்த்த மோக்ஷோபதேஷ்டா மனுர்யாவந்த் ருஸ்யதே."

(பொருள்) மனுவின் வாக்கு வேதத்தின் உரையாதலால் வேதம் போலவே பிரமாணமாம். மனு ஸ்மிருதிக்கு முரண்பட்ட ஸ்மிருதிகள் எதேனுமுளதேல் அவை பிரமாணமாகா. தர்க்கம், வியாகரணம் முதலிய சாஸ்திரங்களும் இவ்வாறே. (பிரகஸ்பதி 1 யாகமத்தில் ** கிரவ்யாஹ வசனம்.)

இக்காரணங்களைக் கொண்டு இந்நூலில் பிரமாண வாக்கியங்கள் பெரும்பாலும் மனு ஸ்மிருதியிலிருந்தே எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

———)o(———

முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

* மனு— மந்திரம் வேதமென்பது இக்காலத்து ஆசிரியர்களின் உரை, இது முற்காலத்திய கருத்துக்கு ஒத்துவாராததலால் தள்ளத்தக்கதேயாகும்.

1 ஈண்டு ஆகமம் என்ற சொல் தரும நூலுக்காம்.

** கிரவ்யாகர் என்பார் ஒரு இருடி.

## இரண்டாவது அத்தியாயம்.

வைதிக கால (வேதம் எழுதிய கால) த்தில் விண்ணுலக வாழ்க்கையையே முக்தி என்று எண்ணப்பட்டிருந்தது. ஆயினும் அங்குள்ளவர்களாகிய தேவர்களுக்குள்ளும் உயர்வு தாழ்வுகளும், காமம், வெகுளி, மயக்கங்களும் இருந்தனவாக வேதத்திலேயே கூறப்பட்டுள்ளதால், சுவர்க்கத்தில் துக்கமில்லை என்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. அத்தகைய சுவர்க்கத்தை யாகத்தினால்தான் அடையமுடியும். சுவர்க்கத்தை யடைதற்குக் காரணமாகிய யாகத்தை நடத்துவிப்போர்கள் புரோகிதர்களாகிய பார்ப்பனர்களே. ஆதலால் சுவர்க்கத்தின் திறவுகோல் அவர்களிடத்தில் தான் இருக்கிறது என்று நம் மக்கள் பெரிதும் மயங்கினார்கள். அதுபற்றியே ஜாதி வேற்றுமையும் உண்டாயிற்று மேலும் புரோகிதர்களுக்குப் பூதேவரென்ற பட்டத்தைச் சாற்றிப் பொது மக்கள் வழிபட்டு வந்ததும், வருவதும் இவ்வுரிமை (சுவர்க்கம் அடைவிக்கும் உரிமை) பற்றியேயாகும்.

வரவர மக்களுக்கு அறிவு வளர்ந்துவரவே ஆத்மாவைப்பற்றிய கவலையும் அதிகரித்துக்கொண்டே வந்தது. இதன் பயனாகத்தான் உபநிடதங்கள் பல ஏற்பட்டன. அவற்றுள் பெரும் பகுதியும் பகவான் கௌதம புத்தருக்குப் பிறகே உண்டாயினவென்றும் முன்னரே கூறியுள்ளோம். ஏதோ ஒன்றிரண்டு கௌதம புத்தருக்கு முன்பே இருந்தனவென்று வைத்துக் கொள்வோமாயினும் அவைகளை எழுதியவர்களும் பார்ப்பனராகமாட்டார்கள். காரணம் யாதோவெனில் இவர்கள் தங்கள்

தேவத் தன்மையைப் போக்கடித்துக் கொள்ளமாட்டார்களன்றே? இதனால் மற்றைய வருணத்தாரில் உயர்ந்த நிலையிலிருந்த அறிவினால் முதிர்ந்த அரசர்களே க்ஷத்திரியர் உபநிடதங்களை இயற்றியவர்கள். அங்ஙனம் எழுதியவைகளை மிகவும் மறை பொருளாகக் காத்தும் வந்திருக்கின்றார்கள். உபநிஷத்து ஃ என்ற சொல்லிற்கே (ரகசியம்) மறைத்து வைக்கத்தக்கது என்று பொருள்.

(1) சாந்தோக்யோபநிஷத்தில் "பாலாகி" என்ற பிராம்மணனுக்கும் "அஜாத சத்துரு" என்னும் அரசனுக்கும் நடந்த வாக்குவாதத்தில் "இந்த வித்தை இதுவரையில் க்ஷத்திரியர்களே கையாண்டு வந்தார்கள். பிராம்மணர்களுக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் கருணையோடு உனக்குச் சொல்லுகிறேன்" என்ற வாக்கியங்கள் காணப்படுகின்றன இதன் பிறகே அரசர்களையும் ஏனையோரையும் பலவகையிலும் அடக்கியாளத் தலைப்பட்டார்கள். அடக்கிவந்த முடிவில் "பிரம்மவித்தை" என்று பெயரிட்டுச் சங்கராச்சாரியாருக்கு "ஜெகத்குரு"வென்று பெயரிட்டு யாவரையும் மயக்கிவருகின்றார்கள்

மேலும் பகவான் புத்தரிடமிருந்தும் பல உயர்ந்த தத்துவங்கள் (அத்துவைதம்) உலகத்தில் வெளிப்பட்டன. இவரும் வருண முறைப்படி அரச குடும்பத்தில் பிறந்தவரே யாவர். ஆயினும் இவருடைய கருத்துக்கள் பார்ப்பனர்களின் கருத்துக்கு ஒவ்வாதன. சாதியும் அந்தந்தச் சாதிக்கு எனப் பகுக்கப்பெற்ற வெவ்வேறு ஒழுக்க

---

ஃ உபநிஷத்களுக்கு "இராஜ வித்தை" என்று மற்றொரு பெயரும் உள்ளதே இதற்கு சான்று பகரும்.

ங்களும் பொய் யுரைகள் எனவும் மனிதராகப் பிறந்த எல்லோரும் மோக்ஷம் அடைய அதிகாரிகள் என்றும் இதற்குக்கொலை முதலிய பாதகங்கள் கூடாதென்றும் பஞ்சமகா பாதகங்களாகிய மேற்கூறிய சொர்க்க வாசல் திறவுகோற்காரர்களின் (Key to the heaven) தயவை எதிர்பார்க்கவேண்டியதில்லையென்றும் அவர் வெளிப்படுத்தியதனுல் பார்ப்பனரின் சுயநலம் நாசமடைந்தது. இவற்றோடு இவர்களது சுவர்க்கமும் இந்திரனும் பிரார்த்தனைகளும் கண்டிக்கப்பட்டுப் போயின. அத்தருணத்தில் பார்ப்பனர்களுக்கு உண்டான வருத்தம் இத்தன்மையது என எங்ஙனம் எடுத்துக் கூறவியலும்? "பௌத்தன்" என்கிற சொல் காதில் விழுந்தாலே இக்காலத்திய மக்களுக்குக் கூட வெறுப்பும் எடுத்துரைக்க முடியாத கோபமும் உண்டாகிறது. பௌத்தன் என்ற சொல்லிற்குப் புத்தனுடைய கொள்கையைப் பின்பற்றி ஒழுகுவோன் என்று மட்டுமே பொருளாயினும் பொது மக்கள் வெறுப்பானது அக்காலந்தொடங்கி, பார்ப்பனர்கள் செய்துவருகிற சூழ்ச்சியால் எழுந்த மதிமயக்கத்தினுலேயாம். கருணாமூர்த்தியான பகவான் புத்தர் மக்களின் தாழ்ந்த நிலையைக்கண்டு இரங்கி பேரின்ப நிலையைத் தன் அனுபவத்தாற் கண்டு வெளியிட்டார். அவ்வழியில் செல்ல விரும்பினவர்களையும் ஏமாற்றி பழைய நரகக்குழியிலே தள்ளிவிட்டவர்கள் பார்ப்பனர்களே. தங்கள் விருப்பத்திற்குக் கீழ்ப்படியாத பலரையும் கொன்றும், கொலை செய்வித்தும் ஒடுக்கினுர்கள். ஆயினும் பழைய பாட்டிக் கதைகளையே திருப்பித் திருப்பிப் பாடிவருவதைக் கேட்டு அமைதி அடையாத பொது மக்களை மகிழ்வுறச் செய்யவும் தங்கள் சுயநலம் கெட்டுப்போகாமற் பாதுகாக்கவும் எண்

ணிய போலிப் பார்ப்பனர்கள் புத்த தேவனுடைய தத்துவங்களை (பௌத்தர்களை அடிமைகளைப்போற் காட்டி) கிரஹித்துக்கொண்டு இவைகள் வேதத்தின் முடிவில் உள்ளது. இதுதான் முத்தி வழியை விளக்கிக் காட்டுவது என்பனவாகிய பொய்யுரைகளைப் பகர்ந்து "உபநிடதங்கள்" என்ற பெயருடன் புதிதாக வெழுதி வேதத்தில் சேர்த்துக் கொண்டார்கள். ஆனால் ஜாதி வருணாச்சிரமம், அதன் ஒழுக்கங்கள், யாகங்கள் இவை யாவும் மோக்ஷ வழிகளன்று எனக்கூறினால் தங்களுடைய வருமானமும் பெருமையும் போய்விடுமே, இதற்கு என்ன செய்வதென்று யோசித்துக் கடைசியில் ஓர் சூழ்ச்சியும் செய்யலாயினர். அத்தந்திர முறை பின் வருமாறு:—

> "த்வே வித்யே வேதிதவ்யே அபார பரா சேதி;
> தத்ரா பார ரிக்வேதா யஜுர் வேதோ: ஸிம்வேதோ,
> தர்வ வேத: சிக்ஷா, கல்போ வியாகரணம், நிருக்தம்,
> சந்தஸ், ஜ்யோதி ஷமிதி, அதபரா யயா ததக்ஷா
> மதிகம்யதே." (முண்டகோப நிஷத்து)

வித்தையாவன பரை, அபரையென இருவகைப் படும். இவற்றுள் மோக்ஷ மார்க்கத்தை உணர்த்துகிற ஆத்ம வித்தை, பரவித்தையும், வேதாகமங்கள் அபர வித்தையுமாம்.

இப்பிரமாணத்தால் அச்சூழ்ச்சியை அறிந்து
கொள்ளுக.

இவ்விரு வித்தைகளுள் ஜாதி தருமாதிகள் இல்லாத பரவித்தையை பின்பற்றுவோன் ஊரில் இருக்கலாகாது. உடனே காட்டிற்குச் சென்றுவிடவேண்டும். லௌகீகர்

கள் (உலகப் பற்றுடையவர்கள்) அபர வித்தையைப் பின்பற்றி அதன்படி வைதிக தருமமும் அதன்படி ஜாதியையும் கட்டாயம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். இம்முறையினால் பூதேவத் தன்மையும் பிராம்மணத் தன்மையும் கெடாமல் இருக்குமென்பதே கருத்து. ஆயினும் சூத்திரன் பரவித்தையைப் பின்பற்றி உயர்ந்த நிலையை அடையக் கூடாதென்ற கொள்கையோடு அதற்கு வேண்டிய பொய்யுரைகளை வேதத்திலும், ஸ்மிருதியிலும் எழுதிச் சேர்த்திருக்கிறார்கள். மேலும் அபர வித்தையை அனுசரித்து அதன்படிக்குள்ள கருமங்களைச் செய்யாதவனுக்குப் பாவித்தையில் அதிகாரமில்லை. உபநயனமில்லாதவனுக்குக் கல்வி கற்கவும் நல்லோர்களின் சேர்க்கைக்கும் உரிமையோ அதிகாரமோ இல்லை. ஆகையால் வியாவஹாரிகவித்தைக்கு உரியவன் யாவனோ அவனே பாரமார்த்திக வித்தைக்கும் அதிகாரியாவான் என்றும் கூறி இருக்கின்றது. சங்கராச்சாரியார் அபரவித்தையை வியாவஹாரிக வித்தையென்றும், பரவித்தையை பாரமார்த்திக வித்தை என்றும் கூறுகிறார். இக்காலம் வரையிலும் இந்துமதம் இதே நிலையில் தான் இருந்து வருகிறது. தமிழர்கள் இன்னும் இச்சூழ்ச்சியினை உணர்ந்து கொள்ளாதது விந்தையே.

இவ்விதமாகச் சுயநலத்தைக்காப்பாற்றும் பொருட்டு உண்மைக் கருத்துக்களைப் பொய்ப் பெட்டகத்துள் மூடி வைத்திருப்பதால் தான் வேதாந்தக் கருத்துகள் ॐ அனு

---

ॐ வேத முறையாக பதினாறு சம்ஸ்கார கருமங்களைச் செய்தவனே ஞானமுணர்ந்துக் குருமூலமாக வேதாந்தம் கேட்கவேண்டுமென்பது விதி. இவ்விதி பிராமணரல்லாதாருக்குக் கிடையாது.

பவத்திற்கு வராமல் சொல்லளவிலேயே இருக்கின்றன. இந்த வேதாந்த வாக்கியங்களைப் புத்தமத நூற்களோடு சேர்த்து ஆராய்ந்து பார்த்தால் குற்றமற்றதும் முன்னுக்குப் பின் முரணின்றிச் சகல சம்மதமுமான ஒரு தத்துவ சாஸ்திரத்திலிருந்து எடுத்து அதன் பழைய உருவத்தைச் சிதைத்து அனுஷ்டிக்க முடியாதபடி செய்துள்ளார்கள் என்பது 1 வெளிப்படும்.

அபர வித்தையில் இம்மைக்குரிய விஷயங்கள் மட்டுமே அடங்கியிருக்கின்றன வென்று முன்னரேயே கூறியுள்ளோம். அதனைச் சற்று ஆராய்வோம்.

சாதிப்பிரிவினை, அந்தந்தச் சாதியாரின் ஒழுக்க முறை அவரவர்களுக்குரிய சடங்குகள் முதலியன தரும சாஸ்திரங்களில் கூறப்பெற்றிருக்கின்றன. வேதங்கள் எல்லாம் யாகத்திற்கு உபயோகமுள்ள விஷயங்களையே அதிகமாகக் கூறுகின்றன.

ஜாதிப் பிரிவினைகளைச் சொல்லுமிடத்து அவ்வச் சாதியாரின் உயர்வு தாழ்வுகளை அனுசரித்து இம்மைக்கும் மறுமைக்குமுரிய எல்லாச் சடங்குகளும் சொல்லப்பட்டிருக்கிறது. இவையனைத்தையும் குறைவர அனுஷ்டிப்பவன் தேவலோகத்தை அடைவான். மோக்ஷம் என்ற ஒன்றிருப்பதாக அக்காலத்தார் உணர்ந்திருக்க

---

1 வைதீக தாந்திரீக சைவமென்ற பெயரிடுவதற்கு முன்னுள்ள தமிழ் நாட்டு முதியோர்களால் அனுஷ்டித்து வந்த சித்தர் கொள்கையும், புத்தமதக் கொள்கையும் ஒருவாறு ஒத்திருக்கும். அப்படியே சமண கொள்கையும் என்றறிக.

மாட்டாராகையால் அவ்வகையில் இவர்களின் அறிவு எவ்வளவு தூரம் முயற்சியடைந்திருந்தது என்பது சொல்லாமலே விளங்கும். இன்னும் இந்நூற்களின் உட்கருத்துக்களையும் ஆராய்வோம்.

பிரம்ம தேவனுடைய ஒவ்வொரு அங்கங்களினின்றும் பிராம்மணன் முதலிய ஜாதிகள் உண்டாயின. அல்லது தயானந்த சரஸ்வதியின் கொள்கைப்படி இவ்வங்கங்களோடு (முகம், தோள் முதலிய அங்கங்கள்) ஒற்றுமை அடைந்தன, என்றிவ்வாறு சொல்லுகிற பாகங்களை மற்றோரிடத்தில் கூறுகிறோம். இப்போது இந்து மதக் கொள்கைப்படிக்கு ஏற்பட்டிருப்பது ஜாதித் தொழிலினலா? பிறப்பினலா? என்பதைக் குறித்து ஆராய்வதே கடமை. இங்ஙனம் ஆராய்ச்சி செய்யப்புகுங்கால் நினைவிற்கு வருகிற பிரமாண வாக்கியங்களாவன·

சாதுர்வர்ணயம் மாயஸ்ருஷ்டம்: குணகர்மவிபாகச:

(பகவத்கிதை.)

நான்கு வர்ணங்களும் என்னல் உண்டாக்கப்பட்டவைகள். அதுவும் குணங்களினலும் கருமங்களினலுமே வேறுபாடன்றி, வேறு வேறுபாடு கிடையாது.

ஜன்மன ஜாயதே சூத்ரா: கர்மண ஜாயதே த்விஜ:

பிறக்கும்போது எல்லோரும் சூத்திரர்களாகவும் கர்மங்களாகிய கர்ப்பாதானம், உபநயனம் முதலியவைகளால் மறு பிறப்பினனுகவும் (விப்ரன்) ஆகிறுன்.

(சங்கர விஜயம்)

இக்கருத்தின்படி யாவனுயினும் நல்லொழுக்கத்துடன் இருப்பானேல் பிராம்மணனுகலா மென்ருய்விட்டது. பறையனுனுலும் யாகாதி கர்மங்களை அனுஷ்டித்தால் பிராம்மணன்தானே? பார்ப்பனியின் வயிற்றிற் பிறந்தவர்களாயினும் இழிதொழிலுடையவர் புலையருமாவர்.

ஆனுல் இத்தகைய பிரமாண வாக்கியங்கள் சிற்சிலவிடங்களிற் காணுவன நம்மவர்களை ஏமாற்றும்படிக்குள்ள அநேக தந்திரங்களுள் இது ஒருவகையேயாகும். இவ்வுண்மையானது இத்தகைய (சூத்திரனைப் பிராமணனுக்கத்தக்க) கருமங்கள்யாவை? என வினவி விடை தெரிந்துகொள்ளும்போது வெளிபாகும் அதாவது:—

கற்பாதானம் முதல் அந்தியேஷ்டி வரையிலும் உள்ள பதினுறு சம்ஸ்காரங்கள், வேதம் ஓதுதல், சாகை, கோத்திரம், சூத்திரம், ப்றவரான்ஹம், நித்திய கருமங்கள் இவைகள்தான் பிராம்மணத்தன்மையை உண்டு பண்ணுவதற்கு அடிப்படையாயிருக்கின்றன.

"அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணமுபனயீத, தமத்யாபயீத" எட்டாவதுவருஷத்தில் பிராம்மணனுக்கு உபநயனம்செய்து கல்விகற்பிக்க வேண்டும். எனத்தொடங்கிய இக்கருமங்களை விதிக்கின்ற வாக்கியங்களினுல் சாதிப்பிராமணனுக்கும் சாதிப் பிராமணத்திக்கும் பிறந்த பிள்ளைதான் அதிகாரி யென்பது வெளிப்படையாதலால் முன் சொன்ன "சாதுர்வர்ணியம்" முதலியவாக்கியங்களும் இதைப்போல் காணப்படும் வேறுசில வாக்கியங்களும் "மயக்கத்தகுந்த வாக்கியங்களே" என்பது புலப்படுகிறது. மற்றும் ஒவ்வொரு ஜாதியார்க்கும் தொழில்கள்

இன்னின்னவை என்று விதித்துக்கிதையில் கூறுவதையும் கேளுங்கள்.—

பகவத்கிதை அத்தியாயம் 3, பாட்டு 35.

ஸ்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்
ஸ்வநுஷ்டிதாத்
ஸ்வதர்மே நிதனம் ஸ்ரேய: பரதர்மோ பயாவஹ:

(பொருள்) ஒரு சாதியான் மற்றொரு சாதியானுடைய தருமத்தை எவ்வளவு ஒழுங்காக நடத்தினாலும் அது நன்மையைப் பயக்காது. ஆதலால் ஒவ்வொரு ஜாதியானும் தத்தந் தொழிலை இயன்றவாறு செய்து முடிப்பதே சிறந்தது, தன் தொழிலைச் செய்யாவிடினும் அவ்வளவாகக் குற்றமில்லை. பிறன் தொழில் பயத்தை உண்டுபண்ணக் கூடியது. ஆதலால் அதைச் செய்யலாகாது.

இத்தகைய வாக்கியங்களினால் நம்மவர்கள் பார்ப்பனருக்கு விதித்துள்ள தொழிற்களைச் செய்யக் கூடாதென்பதும், மீறிச் செய்பவனைக் கொலை செய்து விடுவோம் என்பதும் "பயத்தை உண்டுபண்ணக்கூடியது" என்ற கிதாவாக்கியத்தாலும், இதைப்போன்ற வேறு பல வாக்கியங்களாலும் இதுவரையில் நடந்து வந்ததும் இப்போது நடக்கிறதுமான ஒழுக்கமுறையாலும் வெளிப்படுகிறது. இது நிற்க,

மறுமைக்குரிய துறையில் முக்கியமான துறவிக்கு உரிமையுடையவன் யாவன்? என்று கீழ்க் காணும் வேத வாக்கியத்தையும் மனுவின் வசனத்தையும் கவனித்து அறிந்துகொள்ளுங்கள்.

"ப்ராஜாபத்யாம் மிஷ்டிம் நிருப்ய, தஸ்யா ஸர்வவேதசம்
ஹுத்வா ப்ராஹ்மண: ப்ரவ்ரஜேத்" (சதபதப்ராஹ்மணம்)
"ப்ராஜாபத்யாம் நிருப்யேஷ்டிம் ஸர்வவேத ஸதக்ஷிணம்;
ஆத்மன்யக்னீ, ஸமாரோப்ய, ப்ராஹ்மண: ப்ரவ்ர ஜேத்கர்
ஹாத் (மனு)

(பொருள்) தன் பொருளனைத்தும் தானம் செய்து நிறைவேற்றத் தக்க பிராஜாபத்ய யாகத்தைச் செய்து அதன் முடிவான அக்நியேஷ்டி ஹோமத்தில் குடுமி, பூணூல் இவைகளை நெருப்பிலிட்டும் பிறகு ஒன்றுமில்லாதவனாக ப்ராஹ்மணன் வீட்டைவிட்டு வெளியேறக் கடவன். இதற்கு ப்ராஹ்மணன் நீங்கலாக ஏனையோர் அதிகாரிகளல்லரே? இதோடும் நிற்கவில்லை. தன் தொழிலைச் செய்யாமல் வேறு தொழில் செய்தால் அரசன் கவனித்து அடக்கவேண்டும் என்ற மனுவின் வசனம் வருமாறு:—

"வைஸ்ய சூத்ரௌ ப்ரயத்நேந, ஸ்வானிகர்மாணி காரயேத்
தௌ ஹிச்யுதௌ ஸ்வகர்மப்ய: ப்லாவயே தாமிதம் ஜகத்
(மனு)

(பொருள்) வைசியனும் சூத்திரனும் தத்தந்தொழிலைச் செய்கிறார்களாவென்பதை அரசன் கவனித்துச் சரிவர ஒழுகச்செய்ய வேண்டும். அவர்கள் தத்தந் தொழிலைச் செய்யாவிட்டால் உலகம் வறுமையில் முழுகிப்போகுமன்றோ.

விப்ரத்வேனது சூத்ரஸ்ய ஜீவவதோஷ்—சதோதம:

(பொருள்—) விப்பிரன் (பார்ப்பனன்) என்று சொல்லிக் கொண்டு உயிர் வாழுகின்ற சூத்திரன் எண்

றூறு (800) நிஷ்கங்களை (ஒரு வகைப்பொன் நாணயம்) அபராதமாகச் செலுத்தக் கடவன். (யாக்ஞவல்கிய ஸ்மிருதியில்)

இவ்விதமாக வேலை செய்தும் கூலியேனும் அடைய முடியாதபடி கஷ்டப்பட்டுக் கொண்டு வந்த சூத்திரர்கள் எங்ஙனம் உயர்ந்து வரமுடியும்? இவர்கள் செய்கிற வேலையினால் பார்ப்பனர்கள் ஜீவனம் செய்து வந்ததாக மேற்கண்ட பிரமாண வாக்கியங்களாலும் விளங்குவதால் இவர்களின் முன்னேற்றத்தைப் பார்ப்பனர்கள் விரும்புவார்களா? மற்றும்

ந சூத்ராய மதிம் தத்யாத் கொச்சிரஷ்டம்
ந ஹவிஷ்க்ருதம்

நசாஸ்யோபதிசேத் தர்மம் ந சாஸ்ய வ்ரத மாதிசேத்

பொருள்— சூத்திரனுக்கு கல்வியைக் கற்பிக்கவும் யாகசேஷமாகிய அவிசை (எஞ்சிய உணவுப் பொருளை)க் கொடுக்கவும் கூடாது. தருமோபதேசத்தையும் பண்ணலாகாது. நோன்பு நோற்கும் முறையையும் சொல்லலாகாது.

இதைமீறிச் சூத்திரனுக்கு பௌரோஹித்யம் (சிரார்த்தம் முதலியன நடத்துவது) செய்துவந்த பார்ப்பனர்களை மலையாளத்திலும் தமிழ் நாட்டிலுங்கூட சில விடத்துப்பந்தியில் போசனத்தில் சேர்த்துக்கொள்ளுவதில்லை. இத்தகைய பார்ப்பனர்களுக்கு மலையாளத்தில் இளையது எவப் பெயர். இதைப் போன்ற உதாரணங்கள் பலவுள. அவற்றுள் சில ஜாதி தருமத்தைக் கூறுமிடத்து விரிவாகக் கூறுவோம்.

இக்காரணத்தால், கருமத்தினுல் பிராம்மணனுவ தற்கு இந்து மதம் இடக்தரமாட்டாது. இக்காலத்து பிரிட்டிஷ் அரசாட்சியின் கருணையால் கல்விக்கு இடம் ஏற்பட்டபோதிலும் "சங்கரலிங்கம் பிள்ளை, கிருஷ்ண சாமி முதலியார், கோவிந்தராஜுலு நாயுடு, சுப்பையா நாடார்" இவை முதலிய, பட்டப் பெயர்களை அணிந்து கொண்டிருக்கிற வகுப்பினர் எவ்வளவு வேதாந்தம்படித்த போதிலும் இந்த சங்கிலியால் பிணைக்கப்பட்டிருக்கிற வரையில் இவர்கள் இந்துக்களேயாகையால் சம்ஸ்காரத் திற்கு அதிகாரம் இல்லை. சம்ஸ்காரமில்லாததால் பிராமணத் தன்மையை அடையவும் மாட்டார்கள். யாவரும் சூத்திரர்களே (பிராமணனுக்கு அடிமையே) இதற்கும் மேற்கோள் காட்டுவோம்.

"அனுர்யமார்ய கர்மாணம் ஆர்யம் சானுர்யகர்மிணம்;
ஸம்ப்ரதார்யாப்ரவீத் தாதா, நஸமௌ நாஸமாவிதி
(மனுஸ்மிருதி)

பொருள்—ஆரியன் * (பார்ப்பனன்) தொழிலைச் செய்கிற அனுரியன் (தமிழன்) ஆரியனும் ஆகப் போவதில்லை. அனுரியன் தொழிலைச் செய்கிற ஆரியன் அனுரியனுமாகமாட்டான். (தொழிலினுல் இவ்விருவர்களுக்கும் சமத்துவம் தோன்றினும் ஒரு ஜாதியான் மற்றொரு ஜாதியானுக முடியாதென்பது கருத்து.)

---

* ஆரியன் என்ற சொல் முற்காலத்தில் ஆரியமொழி பேசுவோரைக் குறித்திருந்தும் பிறகு ஒரு நாட்டாரைக் குறித்தும் பிற்காலத்தில் ஒரு ஜாதியாருக்கே உரியதாக வழங்கிவருகின்றது; (ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்) எனத் தமிழ்மறை மிழற்றும்.

ஆனால் ஜாதி வேற்றுமைகள் தொழில் வேற்றுமை யால்தான் ஏற்பட்டன, என்று சொல்லுகின்றவர்களும் தாங்கள் பாம்பரையாகவே அடிமைகளாயிருப்பினும் சாணியில் புழுத்த புழுக்களில் சில தங்கள் இனத்தில் பலவற்றைத் தின்று தாங்கள் பலசாலிகள் என்று நடித் துக் கொண்டிருப்பது போல் இவர்களும் தங்களை உயர்ந்த ஜாதியாகச் சொல்லிக் கொண்டு பலரைத் தங்களினின் றும் தாழ்த்தி வந்ததோடு மனிதப் பிறவியானது எத்த கைய பெருமை வாய்ந்ததென்பதைக் குறித்துத் தாங்க ளும் ஆராயாமல் பிறரையும் ஆராயவொட்டாமல் தடுத் தும் வருகின்றார்கள். இதனால் இதுகாறும் யாதொரு நற்பயனும் அடையவில்லை. இனிமேலும் அடையவும் முடியாது. அன்றியும் நான்கு வேதங்களையும் படித்தவ னாயும், சிறந்த நல்லொழுக்கமுடையவனாக இருப்பினும் சூத்திரன் சூத்திரனே. எதிர்மறையாக; பார்ப்பனன்

எழுத்து வாசனை தெரியாதவனாயும் கொலை, களவு, கட் குடி, வியபிசாரம் பொய் பேசுதல் என்னும் இவைகளை யே தொழிலாக உடையவனாயிருப்பினும் அன்னான் "பார்ப்பனன்" என்கிற ஒரே காரணத்தை முன்னிட்டு பந்தியில் உண்ணவும், தானம் வாங்கவும் சுவாமி என்று பிறரால் அழைக்கவும் உரிமையுள்ளவனாக இருக்கிறான். இப்படியே இன்னும் வழக்கத்தில் இருந்து வருகிறதன் றோ? இக்காலத்தில் பிராமணனைப்போல் வேடம் போட் டுக் கொண்டு, தவம், சந்நியாசம், பலருக்கு உபதேசம் புரிதல் இவை முதலிய தொழிற்களை மேற்கொண்டு நடிப் பவரும் சிலர் உளர். இவர் அடையும்பயன் யாது? இங் குமங்குமில்லாமல் அந்தரத்திலிருப்பதேயாம். மனுவின்

கொள்கைக்கு விரோதமாக ஆரிய சமாஜத்தினரால் சூத்திரர்கள் அடைந்துவரும் தன்மையும் புராணங்களில் சொல்லப்படும் திரிசங்குவின் சுவர்க்கத்திற்கு ஒப்பிடலாம்.

தனக்கு ஏற்படுத்திய தொழிலை மீறி நடக்கிற சூத்திரனை அரசனானவன் ஆடுமாடுகளைப் போல் நினைத்து (1) சித்திரவதை செய்யவேண்டும். தங்கள் குலத் தொழிலை மீறுகிற வைசிய சூத்திரர்கள் இறந்தபின் மறுமையில் அடையவேண்டிய பயனை மனு கூறுவதையும் கேளுங்கள்:—

* மைத்ராக்ஷ ஜ்யோதிக: ப்ரேதோ வைஸயோ பவதிபூய புக்

சைலாச கஸ்ச பவதி சூத்ரோ தர்மாத்ஸவ காச்யுத:
(மனுஸ்மிருதி)

---

(1) சரீரத்திலுள்ள அவயவங்களைச் சிறிது சிறிதாக தறித்தெடுத்தும் உறுப்புக்களில் ஆங்காங்கு ஆணியடித்தோ மற்றெவ்விதமாகவோ பல நாட்கள் துன்புறுத்தி முடிவில் உயிர் போக்குவதைச் "சித்திரவதை" என்பார்கள். ரோமன் காலத்தில் இக்கொள்கை போல நடந்ததால்தான் இயேசு நாதரைச் சித்திரவதை செய்யப்பட்டது.

* காசி முதலிய வட நாடுகளுக்குச் சென்று அங்குள்ளவர்களிடம் தங்களை பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் என்று கூறிக்கொண்டு துறவு பெற்றுக்கொண்டு வரும் பலரையும் இக்காலத்தில் காணலாம். இவர்கள் அறிவிருந்தவாறென்னே? தமிழ் நாட்டிற் பிறந்தும் தமிழ் மக்களால் வளர்க்கப்பட்டும் தமிழின் நாகரீகத்தினை உணராமல் ஆரியர்களுக்கு அடிமையென நினைத்துக் கொண்டு ஏனையோரை வெறுக்கின்றனர். இவர்களுக்கு நல்லறிவுண்டாவதாக.

பொருள்—குலத் தொழிலை மீறி நடக்கிற வைசியன் இறந்தபின் மலத்துவாரத்தில் கண்களையுடையதும் மலத்தையே புசிக்கும் இயற்கையுடையதுமான "மைத்திராக்ஷ ஜோதிகன்" என்கிற பிசாசாகவும் இம்மாதிரியே சூத்திரன் வெள்ளைப்பேனைத் தின்கிற "சைலாசகன்" என்கிற பிசாசாகவும் பிறக்கின்றனர். இதைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர் இன்னும் பார்ப்பனருக்கே அடிமையாக இருக்க விரும்பினால் அவர்களையே வணங்கிக் கேட்டும், அடிமைத்தனத்தைத் தள்ளிச் சுதந்தரமாக இருக்க விரும்பினால் ஸ்மிருதிகளைப் பார்த்தும் தெரிந்துகொள்ளலாம். இவ்வளவு காரணங்களால் ஒவ்வொரு ஜாதியானும் தத்தம் தொழிலைச் செய்துகொண்டே உயிர்விட வேண்டியதல்லாமல் தருமமென்ற பெயருடைய இவ்வதர்மச் சங்கிலியால் பிணிக்கப்பட்டுக் கிடக்குமளவும், "சூத்திரன்" என்பான் ஒரு வகையிலும் உயர்ந்துவர முடியாதென்பது நிச்சயமாய் பெறப்பட்டது. இனி "இந்து" தருமத்திலுள்ள அதர்மங்களில் சில எடுத்துக்கூறுவோம்.

சனாதன * தரும முறைப்படி வருணங்கள் நான்கே உள்ளது. இதற்கு மனுவின் வசனம் வருமாறு:—

பிராஹ்மண: க்ஷத்திரியே வைஸ்த: த்ரயோவர்
ணாத்விஜாதய:

---

* சனாதன தருமம் வைதீகம், மனு தருமம், வருணாச்சிரம தருமம் ஆகிய சைவம், வைணவம், தருமம் என்பனவெல்லாம் பிராமண மதமென்றே கொள்ளவேண்டுமென்றிப் பெயர் மாற்றத்தால் மயங்கவேண்டாம்.

சதுர்த்த ஏகஜாதிஸ்து சூத்ரோ நாஸ்தி
து பஞ்சம: (மனு)

பொருள்:--பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் என்ற இம்மூவரும் துவிஜர்கள் ஃ நான்காவது ஜாதியான சூத்திரன் ஒரே ஜாதி. (இவனுக்கு உபநயனமில்லாததால் த்விஜாதியாகமாட்டான்) ஐந்தாவது ஜாதி கிடையாது.

ஆனல் இக்காலத்தில் காணப்படுகின்ற அளவற்ற ஜாதி வேற்றுமைகள் எங்ஙனம் உண்டாயின? என்றால் "எட்டு பார்ப்பனர்களுக்கும் ஒன்பது அடுக்களை" என்று வங்க தேசத்தில் ஒரு பழமொழி வழங்குவதுண்டு இதைப்போல் பல்வேறு ஒழுக்கங்களையுடைய வகுப்பினர்கள் அனைவரும் ஸ்மிருதி முறைப்படி சூத்திர ஜாதியைச் சேர்ந்தவர்களேயாவர். ஆதலால் எவ்வளவு உயர்ந்த ஜாதியென்று தன்னை மதித்துக் கொண்டாலும் வேத விதிப்படி உபநயனமில்லாதவர்கள் யாவரும் இந்த நான்காவது ஜாதியிலேயே கட்டுண்டு கிடக்கிறார்கள். புலையர் சான்றார், செட்டியார், பிள்ளை எனத் தங்களை உயர்வுபடுத்திக் கூறிக் கொண்டு ஒருவரோடொருவர் கலக்காமல் நூல்முறையும் தெரியாமல் நம்மவர்கள் சண்

---

ஃ பிறப்பினால் மனிதனாகவும் வைதீக ஸமஸ்காரத்தாலும், ஒழுக்கங்களினாலும் ஜாதிகள் உண்டாவதால் எம்மனிதனுக்கும் சம்ஸ்காரஞ் செய்து ஒழுக்கங்களைப் பழக்கினால் ஜாதியுண்டாமென்றது கருத்தாகவும் பிற்காலத்தில் பொறாமையால் எழுதிய சுவடிகளில் சம்ஸ்காரம் செய்யாதே என்று எழுதியும் நல்லொழுக்கத்தில் பழகினால் தண்டித்தும் வந்த மதமே பிராமண மதமென்றறியவேண்டும். மிற்க ஐந்தாவது ஜாதி கிடையாது என்று இதில் கூறவும் 180 ஜாதி எசுர் வேதத்தில் கூறியிருக்கிறது.

டை போட்டுக்கொண்டு வருவது பார்ப்பனருக்கு நன்மை யையும், நம்மவருக்குத் தீமையையும் தான் பயக்கும். தவிரவும் ஐரோப்பியர், அமெரிக்கர், ஜப்பானியர், அராபியர், சைனக்காரர் முதலிய பலதிறப்பட்ட மனிதர்களும் பார்ப்பனர் பார்வைக்குச் சூத்திரர்களாகவே காணப்படி னும் இந்துக்களல்லாத ஏனையோர் சூத்திரன் என்ற வார்த்தைக்கு இடங்கொடுப்பதில்லை. பார்ப்பனர் தங்களுக்கு இடையூறு நேராவண்ணம் ஒரு ஜாதியாருக்குள்ளேயே இவ்வளவு அதிகமான வேற்றுமையை உண்டாக்கி அதை அழியாமல் நிலை நிறுத்திக்கொண்டு வருவதால் அவர்களுக்கு மிகுந்த நன்மையுண்டு ஆனால் இந்த வேற்றுமைகளைப் பற்றி அவர்கள் ஒன்றும் கூறமாட்டார்கள். இப்போது பலவிடங்களிலும் நாடார்களுக்கும் நாயக்கர்களுக்கும் யுத்தம், புலையர்களுக்கும் ஏனையவகுப்பினருக்கும் சண்டை, மலையாளத்தில் வைக்கத்தில் நடந்த சத்தியாகிரகம், மற்றும் பலவிடங்களில் மண்டை உடைபடுதல் ஆகிய இவைகளெல்லாம் இவ்வேற்றுமையின் பயனென்று நம்மவர்கள் நன்கு யூகித்து உணரவேண்டும். இதனால் நம்மை வஞ்சிக்கிற பார்ப்பனர்கள் ஜெயமடைகிறார்களென்றும் நாம் தோல்வியடைகிறோமென்றும் நன்கு விளங்குகிறதன்றோ? வேத முறைப்படி சம்ஸ்காரமில்லாதவர்களைச் ''சூத்திரர்கள்'' என்று பார்ப்பனர்கள் கூறும் சொற்படியே நாமும் கூறுகிறோமேயல்லாது தாழ்மைப்படுத்திக் கூறுவது எமது கருத்தன்று

'' சம்ஸ்காரமில்லாதவர்களும் சூத்திரர்களே '' என்று பார்ப்பனரும் அவர்களின் சமய நூற்களும் கூறினும் பார்ப்பன சமயத்தைப் பின்பற்றி யொழுகுவோர் யாரோ அவர்களைத்தான் இதனல் ஏற்படும் தீமைகள்

சாரும். * அதில் மின்றும் ஒழிந்தவுடன் சாதிச் சங்கிலி அறுபட்டு போவதால் அத்தகைய தன்மதிப்புள்ள ஒரு மனிதனைப்பார்த்து "நீ சூத்திரனாகப் பிறந்தமையால் எங்களுக்கு அடிமை. வீட்டிற்கு வந்து எனது கட்டளைப் படி நடக்கவேண்டும்" என்று ஒரு பார்ப்பனன் கூறத் துணிவானோ? எவனேனும் இறுமாந்து மதிப்பைக் கெடுக்கக்கூடிய வார்த்தை யாதேனும் கூறுவானாயின் அக்கணமே பிறரால் கையப்புடைக்கப்படுவதோடு ஃ கிரிமினல் சட்டப்படி தண்டனையும் அடைவானென்பது திண்ணம். ஆனால் பார்ப்பனரல்லாத ஒரு இந்துவானவன் உயர் நிலையிலிருந்தாலும் முன்சொன்ன கட்டளைக்குக் கீழ்படியவேண்டியது தானே. அதனாலன்றோ வைக்கத்தில் பொது வழியில் நடக்க உரிமை வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டும் பயன்படாது ஒரு வருடகாலமாய் கடுந்தவம் புரிகின்ற பார்ப்பனரல்லாத இந்து சகோதரர்கள் கிறிஸ்துவையோ, முகமது நபியையோ சரணமடைந்தால் அடுத்த நிமிஷத்திலேயே இரத்தம் ஒழுகுகின்ற மாமிசத்தைக் கையில் தாங்கிக்கொண்டு எந்தப் பொது வழியிலும் தடையின்றிச் செல்லும் உரிமையுடைவர்களாகின்றார்கள். இது சாதிச்சங்கிலி அறுந்து போனதினாலென்றே உணரவேண்டும். இந்து சமயத்தைத் தங்கள் சமயமாக ஒப்புக்கொள்ளும் பார்ப்பனரல்லாதாரைப் பார்ப்பனர்கள் தஸ்யு, தாஸன், விருஷலன் (1) என்றும் மற்றும் இழிவாகக் கூறுவதிலும், இத

---

* கிருஸ்துக்கள், முகம்மதியர்கள், புத்தர்கள், முதலியோர்கள்.

ஃ கிரிமினல் சட்டம் யாவருக்கும் சமமாக ஆங்கிலேயர் எழுதிய காலத்தில் ஆரியர்கள் பலமான கண்டனங்கள் செய்தார்களென்றும் கேள்விப்படுகிறோம்;

(1) விருஷலன்—தருமத்தைக் கெடுப்பவன்.

னின்றும் விலகியவர்களை துரை (அரசன்) சாயபு (பிரபு) என்றும் அழைத்து உபரிப்பதிலும் என்ன ஆச்சரியமி ருக்கிறது.

இனி ஒவ்வொரு வருணங்களையும் அவர்களின் ஒழுக் கங்களையும் பற்றிக் கூறுவோம். பார்ப்பனன் யாவன்? என்னும் வினவிற்குப் பார்ப்பினியின் வயிற்றிற் பிறந்த வன் என்று மனுஸ்மிருதி முதலிய தரும சாஸ்திர முறைப்படி விடை, இப்படியே நடைபெறுவதையும் பார்க்கிறோம் அல்லவா? இஃதன்றி, வேறு வகையாக வுங் கூறப்பட்டுள்ளது. அது வருமாறு;—

சமோதமஸ்தப: சௌசம் க்ஷாந்திராஜவமேவச;
ஜ்ஞானம் விஜ்ஞானம் மாஸ்திக்யம் ப்ராஹ்மம்
கர்ம ஸ்வபாவஜம்

கீதை அத்தியாயம் 18,

பொருள்:— ஞானேந்திரியம் கருமேந்திரியங்களை அடக்குதல், சுத்தி, பொறுமை, நல்லொழுக்கம், சாஸ் திர ஞானம், அனுபவ ஞானம் இவை பிராமணனது இயற்கைக் குணங்களாம். முன்சொன்ன மனுஸ்மிரு திக்கும் இதற்கும் இருக்கிற வேற்றுமை வீட்டுச் சுரைக் காய்க்கும், ஏட்டுச் சுரைக்காய்க்கும் உள்ள வேற்றுமை போன்றதே? ஏட்டுச் சுரைக்காய் சமயலுக்கு உதவா தது போல, இந்த இலக்கணமும் கண்கூடாகப் பார்ப் பதற்கு இல்லை. எத்தகைய தீய ஒழுக்கமுடைய பார்ப் பினியின் பிள்ளையாயினும், தீய ஒழுக்கங்களில் தலை சிறந்து விளங்குவோனாயினும், ஒருவன் "ஜாதிமாத்ரோ

பஜீவீவா" என்று தொடங்கிய பிரமாண வாக்கியங்களும் கட்குடி முதல் ஐம்பெரும் பாதகங்களைச் செய்தாலும் பார்ப்பனன் பார்ப்பனனே என்பது முதலிய பிரமாணங் கள் சமயத்திற்கேற்றவாறு எடுத்துக் காட்டப்படும். ஆனால் மேற்குறித்த கீதாவாக்கியம் கிருஷ்ணனுடைய சொந்த வாக்கியம் என்று யாரும் நினைக்கவேண்டாம் இதே கருத்துடைய ஒரு சுலோகம் புத்த வகவான் பாலி பாஷையில் திருவாய் மலர்ந்தருளிய தர்மபதமென்னும் நூலில் 25-வது அத்தியாயத்தின் கண்ணும், காணப்படு கிறது * ஆனால் நல்லோர்களின் இலக்கணம் கீதைக்கு முன்னரேயே சொல்லப்பட்டிருப்பினும் பார்ப்பனர் மாத் திரமே நல்லோர்கள் என்ற தன் கொள்கையை நிலை நிறுத்த விரும்பி "பிராஹ்மணோமமதேவதா" பிராம் மணனே என் குல தெய்வம் என்று கூறிய பார்ப்பன தாஸ னாகிய கிருஷ்ணன் தன் சொந்த வாக்கியமாகத் திருத்திக் கூறியிருக்கலாம். சங்கராச்சாரியாரின் மதத்திற்கு இந் தக் கீதையே அடிப்படையான நீதி நூலாகும் (ஸ்மிருதி யாகும்) சங்கரர் மதம் பெரும் பகுதியும் பொறுமைக் களஞ்சியமாதலால் அதிற் சில விடங்களிற் காணப்படும் சில உயர்ந்த கருத்துக்களும் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவராமையால் குப்பைக்குள் புதைந்து கிடக்கும் மாணிக்கம்போல் மங்கி நிற்கின்றன. ஆகையால், இந்து மத முறைப்படிக்கு பார்ப்பனியின் வயிற்றிற் பிறந்த வனே பார்ப்பனன் என்று கருதப்படுகிறதென்பது மேற்

---

* தர்மபதம் எழுதினதற்குப் பிற்பாடு கீதை எழுதப்பட்டது என்பது புத்தக காலத்தையும் அதன் ஆசிரியர் காலத்தையும் ஆரா ய்ச்சி செய்தால் விளங்கும்.

கூறிய உதாரணங்களாலும் வழக்கத்திலும் பெறப் பட்டதன்றோ?

இத்தகைய பார்ப்பனனுக்குரிய தொழில்களாவன:—

அத்தியாபானம் சாத்தியனம் யஜனம் யாஜனம் ததா;
தானம் ப்ரதிக்ரஹம் சைவ ப்பிராஹ்மணுனு,
மகல்பயத (மனு)

பொருள்:— கற்றல், கற்பித்தல், யாகம் செய்தல், செய்வித்தல், தானம் கொடுத்தல் பெற்றுக் கொள்ளுதல், இவை கடவுளால் பிராமணனுடைய தருமங்களாக விதிக்கப்பட்டிருக்கின்றன.

இந்தத் தானமோ இப்பொழுது சம்பளமென்ற உருவத்துடன் விளங்குகிறது. ஆனல் தரும சாஸ்திர முறைப்படி சாதியைத் தெரிவிக்கிற 'சர்மா' என்ற பட்டப்பெயருக்கு உரியவர்களான அய்யர், அய்யங்கார், நம்பூரி, போற்றி முதலிய ஜாதிப் பிராமணர்களுக்கு மட்டும் தான் உத்தியோகம் கொடுப்பது என்று பிரிட்டிஷ் ஆட்சியில் வேற்றுமை காட்டாமல் இந்துக்கள் எல்லோரையும் சமமாகக் கருதி உத்தியோகம் வழங்குகிறார்கள். ஆயினும் பார்ப்பனர்கள் உத்தியோக விஷயத்தில் கண்ணும் கருத்துமாயிருப்பதோடு, தனக்குக் கீழ் உத்தியோகத்தில் பார்ப்பனரல்லாதார் ஒருவர் இருந்தால் அவரை மேலேற ஒட்டாமல் தடுப்பதும் மனுவின் சட்டப்படி ஒழுங்குதானே. அன்றியும் * ஆபத்துக்காலத்தில் வேறு

* ஆபத்காலம்— பார்ப்பனன் சொன்ன மனுவை அனுசரித்த ராஜன் ராச்சிய பரிபாலனம் செய்யாத காலம்.

சில சௌகரியங்களும் பார்ப்பனர்களுக்கு எற்பட்டிருக்கின்றன.

ரிதாம்ருதாப்யாம் ஜிவேத் ம்ரு தேனப்ராம்
ருதேனவா
ஸத்யான் ருதாப் யாமதவா ஙஸ்வய்ருத்யாகதாசன
(மனு)

இதன் பொருள்— அறுவடையான நிலத்தில் சிந்திக்கிடக்கிற தானியங்களைப் பொறுக்கியெடுத்து அதனுல் உயிர் வாழ்வதே ரீதம், பிச்சையேற்காமல், யாரேனும் கொடுக்கிற பொருளைப் பெற்றுக் கொண்டு சீவனம் செய்வது அமிருதம். பிச்சைசேற்றுண்ணுவது மிருதம். உழுது பயிரிட்டு அதனுல் வரும் பொருளை வைத்துக் கொண்டு உண்பது பிரமிருதம். வியாபாரம் செய்வது சத்தியான்ருதம். பிராமணன் இந்தத் தொழில்களைப் பின் பற்றிக்கொண்டு காலத்திற்கு ஏற்றவாறு சீவிக்கலாம். ஆனுல் அடிமையாகிய சூத்திரன் நாய்க்குச் சமானம். ஆகையால் அவனுடைய தொழிலினுல் எக்காலத்தும் சீவனம் செய்யலாகாது. என்னே மனுவின் தருமம்.

இக்காலம் தான் பிராமணர்களுக்கு ஆபத்துக்காலம் ஆகையால் அவர்களின் ஆணைப்படி "பிராம்மணோ மமதைவதம்" என்று நடக்கிற ஒரு அரசனை நியமிக்கும் பொருட்டு "ஹோம்ரூல்" என்ற பெயரைச் சொல்லிக் கொண்டு முயற்சி நடத்துகிறூர்கள். ஆயினும், கோரிய பலன் கைகூடவில்லை. இப்போது நேபாள தேசம் ஒன்று மட்டும் மனுஸ்மிருதி முறைப்படிப் பிராமணன் ஆணைக்கு முழுவதும் கட்டுப்பட்டு நடக்கிறது. ஏனைய இ

றிய நாட்டுச் சிற்றரசர்களும் சிற்சில காரியங்களில் இன்றும் கட்டுப்பட்டே, ஒழுகிவருகின்றார்கள். முற் கூறிய பிரமாணத்தைத் தெரிந்துகொண்டவர்கள் பிராமணன் தோற் கடை, செருப்புக் கடை, சோற்றுக்கடை முதலியன வைத்து, வியாபாரம் செய்யலாமோ என்று கேட்பார்களோ.

மற்றும் பார்ப்பனனுடைய அதிகாரங்களும் உரிமைகளும் இன்னின்னவைகள் என்று மனு சொல்லுவதையுங் கவனியுங்கள்.

(1) பிராஹ்மனோ ஜாயமானோ ஹிப்ருதில்யாம் அபியாஜதே; ஈஸ்வர: ஸர்வபூதானும் ப்ரஹ்ம கோசஸ்ய குப்தயே (2) ஸர்வஸ்வம்ப்ராஹ்மணஸ்யேதம், யத்கிஞ்சிஜ்ஜகதிகதம்; ஸ்ரைஷ்டைனுபிஜனேனேதம் ஸர்வம் வைப்பிராஹ்மனோர்ஹறதி. (3) ஸ்வமேவப்ராஹ்மனோ புங்க்தேஸ்வம்ததாதிச; ஆன்ருமிம்ஸ்பாத் பிராஹ்மணஸ்யபுஞ்ஸதே ஹீதரேஜனு.

இதன் பொருள்— சகல பிராணிகளுக்கும் தலைவனையும், வேதமாகிய களஞ்சியத்தின் காவலனையும் பிராம்மணன் படைக்கப்பட்டிருப்பதால் இப்பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் பிராமணன் உரிமையுள்ளவனுவான் பிராமணன் பிச்சை எடுத்துண்பவனுயினும்; உண்பதும், உடுப்பதும், கொடுப்பதும், அவன் பொருளேயாம்.

ஏனையோர் பிராமணனுடைய கருணையால் அவனுற் கொடுக்கப்பட்ட சிற்சில பொருட்களைப்பெற்றுக்கொண்டு உயிர் வாழ்கின்றார்கள்.

பிரம்மதேவன் இந்த உலகத்தைப்படைத்துப் பிரா மணர்களுக்குத் தான் வழங்கினன் என்னும் புராண வாக்கியமும், இதற்குச் சான்ரும். இதே கருத்துடைய வாக்கியங்களை "யாக்ஞவல்கியரும்" கூறுகின்ருர்.

தபஸ்தப்த்வாஸ்ருஜத் ப்ரஹ்மா ப்ராஹ்மணே
கோசஸ்யேதகுப்தயே

த்ருபத்யர்த்தம் பித்ருதேவானும் தர்மஸம் ரக்ஷணயச.
ஸார்வஸ்ய ப்ரபவோவிப்ரா: ஸ்ருதாத் யயனசீலின:

இதன் பொருள்—தேவர்களையும் பிதிர்க்களையும், மகிழ்விக்கவும், தருமத்தைக் காக்கவும், எண்ணிய பிரம்மதேவன் கடுந்தவமியற்றிப் பிராம்மணர்களைச் சிருஷ்டித்தான். இப்பிராமணர்கள் வேதம் படித்தலே ஒழுக்கமாகவுடையவர்களும் (அசையும் பொருள், அசையாப் பொருள் என இருவகைப்பட்ட) இவ்வுலகிற்கெல்லாம் தலைவர்களுமாவார்கள்.

"பிரம்ஹஸ்ருஷ்டி" என்பது பிராமண சிருஷ்டி, பிராமண மதம், சிரவுத ஸ்மார்த்த தருமம், வைஷம்மியவாதம் என்ற பல பெயர்களையுடைய ஒரே சொல்லையே உணர்த்தும் "ப்ரஹ்மம்வைப்ராஹ்மண:" (பிரமனே பிராம்மணன்) என்கிற சதபத ப்ராம்மண (வேதம்) வாக்கியமும், " ஸமானர்த்தாவேதென ப்ரஹ்ம சப்தோ ப்ராஹ்மண சப்தஸ்ச" (பிரமன் பிராமணன் இவ்விரண்டு சொற்களும் ஒரே பொருளையே உணர்த்தும் என்கிற வியாகரண மஹா பாஷிய வசனமும், இவைபோன்ற வேறு பல வசனங்களும் இதற்கு உதாணங்களாம். இவ்

விதம் இருக்க, இவர்களுக்கு அடிமைகளாயிருக்கும் 19 கோடி மனிதர்கள் எங்ஙனம் முன்னேற முடியும். இந்த பிர்ம்ம சிருஷ்டி வலையினின்றும் தப்பித்துக் கொண்டு, பலரும் முன்னேற்றத்தை அடைந்து சுகமாக வாழ்ந்து வருவதையும் பார்க்கின்றோம். ஆகையால் பார்ப்பனச் சமயவலையை அறுத்தெறிந்து சுகமாக வாழ்ந்து வர விரும்புவீர்களானல், ஓ சகோதரர்களே! இக்கணமுதலே சம உரிமை பெற்று வாழக்கூடிய நமது சாமியவாதத்தில் வாழ முயற்சி செய்யுங்கள்.

பிராமணனுடைய உயிர் வாழ்க்கைக்குச் சிறந்தவழி தானம் வாங்குவதே என்று முன்னரே கூறியுள்ளோம். இதற்கொப்பாக வேறு நல்வழி இருக்கிறதா? ஏனையோர் இவர்களை வலிய அழைத்துக்கொடுக்க வேண்டும். அங்ஙனங் கொடுக்காதவர்கள் பாவிகளுமாவார்கள்.

தாதவ்யம் ப்ரத்யஹம் பாத்ரே நிமித்தேஷு
[விசேஷத;
யாசிதேனு பிதாதவ்யம், ஸ்ரத்தா பூதந்து சக்தித்;
(யாஜ்ஞுவல்கியர்)

இதன் பொருள்-பிராமணனுக்கு நித்தியமும் தானங் கொடுக்க வேண்டும். (கிரகணம், சிரார்த்தம் முதலிய) புண்ணிய காலங்களில் விசேஷ (பசு முதலியவைகளைத்) தானங்களைக் கொடுக்கவேண்டும். கையில் ஒன்றுமில்லாவிடில் பிச்சையேற்றோ, மற்றெவ்விதமாகவோ கொடுத்தே தீரவேண்டும். இதே கருத்தை "அஹாஹர்தம் யாதுத பாத்ராதி" என்ற வாக்கியத்தினல் வேதத்திலும் பார்க்கலாம். பிராம்மணனுக்குப் பசுத்தானம்

வழங்கியவன் அப்பசுவிற்கு எத்தனை மயிர்கள் இருக்கின்றனவோ, அவ்வளவு காலம் சுகத்தை அனுபவிப்பான்.

"அதாகருணமதனம வராருத்வாயோததாநித
[தர்த்தினே;
ஸவைமோஷண ஜாத்பாபாத் முக்தோ பவதி
[தத்க்ஷணம்"

இதன் பொருள்-ஈயாத லோபியின் பொருளைக் கொள்ளையிட்டுப் பிராமணனுக்குக் கொடுக்கிறவன் அக்கணமே திருட்டினுலுண்டான பாபத்தினின்றும் விடுபடுகிறான்.

பின்னும்

"ச்ராந்தஸம்வாஹனம் ரோகி பரிசர்யா சுரார்ச்சனம்,
பாதசௌசம் த்விஜோச்சிஷ்டமார்ஜனம்
[கோப்ரதானவத்" (யாஜ்ஞவல்கியர்)

இதன் பொருள்-களைப்புற்ற பிராம்மணனது உடலைத் தடவுதல், நோய்வாய்ப்பட்ட பிராமணனுக்குத் தொண்டு செய்தல், பிராமணன் வந்தவுடன் அவனது கால்களை அலம்பிவிடுதல், பிராமணன் உண்டயிடத்தைச் சுத்தம் பண்ணுதல், இவைகளுக்கும் பசுவைக் கொடுத்த பலன் உண்டு.

என்னே! மனிதரை மயக்க உண்டுபண்ணின தர்ம சாஸ்த்திரங்களின் நேர்மை. அன்றியும், கோதம ஸ்மிருதியில்,

"தேன சோத்தரஸ்ததர்த்தோஹ்ஸ்ய நிசய.

இதன் பொருள்—சூத்திரன் ஏதேனும் வகையிற் பொருளீட்டினுல் அது பிராமணனுக்கே உரியது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மற்றும் அரசனது தர்மத்தை யாக்ஞவல்கியர்
[கூறுமிடத்து,
"தர்மேணலப் துமீஹேத, லப்தம்யத்நேன பாலயேத்;
பாலிதம் வர்த்தயேந் நித்யம், வ்ருத்தம் பாத்ரேஷு
[நிக்ஷிபேத்" (யாக்ஞவல்கியர்)

இதன் பொருள்—தரும முறைப்படி (தன் குலத்திற்குரிய நெறிப்படியே) பொருளை ஈட்டுக. ஈட்டியதைக் காத்து மேன் மேலும் பெருக்குக. அங்ஙனம் பெருக்கிய பொருளைப் பிராமணனுக்குக் கொடுத்துவிடுக.

மேலும்,

"நாத: பரதரம் தர்மோ ந்ருபாணும் யத் ரணர்ஜிதம்,
விப்ரேப் யோதீயதே த்ரவ்யம்"
(யாக்ஞவல்கியர்)

இதன் பொருள்-சண்டையில் பகைவர்களைக்கொன்று பொருட்களைக் கைப்பற்றி அவைகளை அரசன் பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டும். இதற்கொப்பான தருமம் வேறில்லை.

குடிகளின் சரீர உழைப்பினல்உண்டான வியர்வைத் துளிகளின் பெருக்கன்றோ? அரசனது பொருட் குவியல். உழைக்கிறவன் சூத்திரனும், இந்தப் பொக்கிஷத்தை அடைவதனல் மட்டுந் திருப்தியடையாத பார்ப்பனர்கள் "லோபம் நைவபரித்யஜேத்" (பணம் சேர்க்க

வேண்டுமென்ற ஆசையை விட்டுவிடாதே) என்கிற வெட்கக்கேடான வாக்கியத்தை அனுசரித்து, * தமது நாட்டு அரசனுக்கும், அயல் நாட்டு அரசனுக்கும் ஃ பகையை உண்டுபண்ணி இருக்கிறார்கள். தன் நாட்டு அரசன் வெற்றி பெற்றால் அயல் நாட்டுப் பொருள் தங்களுக்கு வந்து சேரும். அயல் நாட்டான் வெற்றி பெற்றால் இவ்வூர்ப் பொருள் அங்குள்ள தம்மினத்தவரையே அடையும். தங்களுக்கு இதனால் உடலுக்கோ பொருளுக்கோ ஒரு குறைவும் எற்படமாட்டாது வேதத்திலும் இன்னனம் கூறப்பட்டிருக்கிறது.

"பிராம்மணோ நஹிம் ஸிதவ்ய:"

(பிராமணன் எத்தகைய குற்றம் புரிந்தாலும் அவனது உடலை வருத்தலாகாது.)

மற்றும்,

"நவிஷம் விஷமித்யாஹுர் ப்ரஹ்மஸ்வம்
[விஷமுச்யதே;

* மலையாளத்தில் இடைக் காலத்தில் அந்நாட்டிலுள்ள சிற்றரசர்கள் அடிக்கடி சண்டை போட்டுக்கொண்டிருந்ததனாலும், அக்காலத்திய அரசர்கள் பிராமணன் பொருள் நீங்கலாக எனையோர் பொருள்களைக் கொள்ளையிட்டு வந்ததனாலும், கொள்ளைக்காரர்களுக்குப் பயந்து நாயர்கள் பிராமணர்களிடம் ஒப்படைக்க இடமாயிற்றென்றும், அதன் காரணமாகவே, நம்பூரிகள் பிரபுக்களானதாகவும் சிலர் கூறுகின்றனர்.

ஃ இந்த முறையினைக் கையாண்ட ஆரியர்களுடைய சூழ்ச்சியினாலேயே தமிழ் நாடு முடியுடைய மூவேந்தர்களையும் இழந்ததென்று அறியவேண்டும்,

விஷமேகாகினம் ஹந்தி ப்ரஹ்மஸ்வம் புத்ர
(பௌத்ரகம்''.

(பொருள்)—விஷயமானது அதையுட்கொண்ட ஒருவனைமட்டும் கொல்லுவதால் இது விஷமன்று. பிராமணனுடைய பொருளே விஷம். ஏனென்றால், (பிரஹ்மஸ்வம்) பிராமணனுடைய பொருள் கைப்பற்றியவனுடைய கால்வழிகளையும் வேரோடு நாசம் பண்ணிவிடுகிறது.

## பிராமணனும் கொலைக்குற்றமும்.



கொலைபுரிந்த பார்ப்பனன் அடையத்தக்க தண்டனையைப்பற்றி மனு இங்ஙனம் கூறுகின்றார்.

* "மௌண்ட்யம் ப்ராணாந்தி கோதண்டா
ப்ராஹ்மணானாம் விதீயதே

இதரேஷாம்து, வர்ணாமதண்ட: ப்ராணாந்தி
கோபவேத."

(பொருள்)—கொலைத் தொழில் புரிந்த மற்ற வருணத்தார்களைத் தூக்கிவிடவேண்டும். பிராமணன் இத்தகைய குற்றம் புரிவானாயின், அவனது தலை மயிரை மொட்டையடித்தலே தண்டனையாகும். என்னே! மனுவின் நீதி. இதை உணர்ந்தவர்களுக்கு "சூத்திரன் செத்தால் மயிர் போச்சு" என்ற பார்ப்பனக்கூற்று வியப்பைத்

* கிரிமினல் சட்டத்தை ஆக்டாகச் செய்தபோது ஆங்கிலேயரையும் மயக்குமாறு பல உபாயங்கள் செய்தும் பலிக்கவில்லை. அதனால் இக்காலத்தில் சம தண்டனை நடக்கிறது.

தரமாட்டாது. இத்தகைய வாக்கியங்கள் பலவுள. விரிக்கிற் பெருகும்.

## க்ஷத்திரியன் முதலிய
## மூன்று வருணத்தினரின் தர்மம்.

——)o(——

"பசூனும் ரக்ஷணம் தானமிஜ்யாத்யயன மேவச;
வணிக்பதம் குஸீதஞ்ச வைஸ்ய ஸ்ய க்ருஷீமேவச".
(மனு)

(பொருள்)—யாகம் செய்தல், கற்றல் தானம் கொடுத்தல் இம்மூன்றும் இதோடு வட்டிக்குப் பணங் கொடுத்தல், பசுக்களைக் காத்தல், பயிரிடுதல் வியாபாரம் செய்தல், இவைகளும் வைசியனது தருமமாம். இந்தக் கருத்தையே இரண்டு சுலோகங்களால் யாக்ஞவல்கியர் கூறுகிறார்.

"இஜ்யாத்யயனதானனி வைஸ்யஸ்ய
க்ஷத்திரியஸ்யச:

ப்ரதிக்ரஹோதிகோ விப்ரேயாஜனத்யாபனேததா,

ப்ரதானம் க்ஷத்திரியே கர்ம, ப்ரஜானும்
பரிபாலனம்:
குஸீதக்ருஷி வாணிஜ்யம் பசுபால்யம் விச:
ஸ்ம்ருதம்".

(பொருள்)— இதனல் மக்கள் முன்னேற்ற வழியில் க்ஷத்திரிய வைசியர்களுக்கும் சிற்சில உதவிகளைச் செய்

திருக்கிறதாக எண்ணப்படுகிறது. இக்காலத்து இந்நாட்டில் வசிப்பவர்களை ஐரோப்பியர், ஆங்கிலோ இந்தியர், நாட்டுக்கிறிஸ்தவர், இந்தியர் என நான்கு வகையாகப் பிரிக்கலாம். இவர்களுள் ஐரோப்பியன் முதன்மையானவனுவன். இரண்டாவது படியிலிருக்கிற ஆங்கிலோ இந்தியன் ஐரோப்பியனைவிடத் தாழ்ந்தவன் ஆயினும், தந்தைக்கும் மகனுக்கும் இருக்கிற சம்பந்தம் இவ்விருவர்களுக்குள்ளிருப்பதால் அடுத்த படியில் எண்ணப் படுகிறுன். நாட்டுக் கிறிஸ்தவனுக்கும், ஐரோப்பியனுக்கும் இத்தகைய சம்பந்தம் எதுவும் இல்லாதிருந்தாலும், ஒரே சமயத்தைத் தழுவி நடப்பவர்களாதலால், சகோதரத்தன்மை ஏற்பட்டு மூன்ருவதாக நடத்தப்படுகிறுன் நான்காவதாகச் சொன்ன இந்தியனுக்கும், இம்மூவர்களுக்கும், ஒரு வகையிலும் சம்பந்தமில்லை ஆனதால், இந்துக்களின் பிராமண நூற்படி பூமிதேவ குலத்திலுதித்த வேதியனையுங்கூட, கடவுள் நம்பிக்கை இல்லாதவன் என்றும், பாவியென்றுங்கூறி நாயினுந் தாழ்ந்த நிலையில் எண்ணுகிறுர்கள். இந்துக்களின் சாதிப்பிரிவினையும் இவ்வாறேயாகும். மூன்று வர்ணத்தாருக்குள்ளும் சிற்சில வேற்றுமைகள் காணப்படினும், ஒரே சமயத்தினராதலால் ஒரே சாதியைச் சார்ந்தவர்களேயாவர். இதனுலேயே இம்மூன்று வர்ணத்தினருக்கும், பொதுவாகவும், பிராமணனுக்கு மட்டும் பொதுவிலும் சிறப்பிலும் ("த்விஜாதி") இரு பிறப்பாளர் என்கிற பட்டப் பெயர் உண்டாயின. நான்காவது வருணத்தினர் என்று இவர்களால் அழைக்கப்பட்ட ஒரு பெருங்கூட்டத்தினருக்கும் இவர்களுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லாததனுல் அவர்களைத் தாழ்வாக நடத்திவந்தார்கள்; நடத்தி

யும் வருகிறார்கள். ஆனால், ஆங்கிலேயனால் தாழ்ந்தவனாகக் கருதப்படும் ஒரு பார்ப்பனன் தன்னைப்பற்றி எங்ஙனம் 'நான் உயர் குலத்தோன், பெருந்தன்மை வாய்ந்தவன்' என்று எண்ணிக் கொள்ளுகிறானோ, அதைப்போல் வஞ்சகப் பார்ப்பனர்களால் நான்காவது வருணத்தினர் என்று இழிவாகக் கருதப்படும் நம்மவர்களும் உயர்ந்த எண்ணத்துடன் தங்களை எண்ணிக்கொள்ளவும், தன் மதிப்பைக் காத்துக் கொள்ளவும், உரிமையுள்ளவர்களே யாவார். இத்தகைய நன்காவது வருணத்தினரின் தொகை பத்தொன்பது கோடி என்று முன்னரே கூறியுள்ளோம். இவர்களில் தமிழ் நாட்டினர் தவிர, ஏனைய நாட்டினர் இன்றும் அடிமைகளாகவே காலங்கழிக்கிறார்கள். அந்தோ!

தமிழ் நாடோவென்றால் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் இன்னும் சில பாஷைகள் வழங்குகின்ற தென்னாடு என்று அறியவேண்டும். இந்நாடுகளை ஆரியர் "திராவிடநாடு" என்று சொல்லுகிறார்கள்.

இங்கு பிராமணர்களைத் தவிர்த்து,* த்விஜாதிகள் இல்லாதிருப்பதே இந்த நன்மைக்குக் காரணம். வடநாட்டில் மூன்று வருணத்தாரும் சேர்ந்து சூத்திரர் என்கிற நான்காவது வருணத்தினரை எக்காலத்தும் துன்புறுத்தி வருவதால், அவர்கள் இதுகாறும் எத்துறை

---

* தென்னாட்டிலும் க்ஷத்திரியர், வைசியர் என்ற சில வகுப்பார் இருந்தபோதிலும் சாஸ்திர திருஷ்டியிலும், பிராமண திருஷ்டியிலும், இங்கு பிராமணன், சூத்திரன் என்ற இரண்டு வருணத்தினர் மட்டும் இருக்கிறார்கள் என்பது மனு வசனம்.

யிலும், முன்னேற்றம் அடையமுடியாது வருந்துகின்றனர். நான்காவது வருணத்தினருக்கு இக்காலத்தில் ஏதேனும் நன்மை ஏற்பட்டிருக்குமானுல், அது ஆங்கில அரசரின் கருணையினுல் என்றறியவேண்டும். தென்னுட்டில் சூத்திரர்களுக்குண்டான அபிவிருத்தி போல் வடநாட்டுச் சூத்திரர்களுக்கு நூற்றிலொரு பங்காவதுண்டாகவில்லை. இந்த ஆங்கில அரசாட்சியிலும் கூட இதற்குக் காரணம் ஆங்கு நான்கு ஜாதி முறையாக உள்ளதினுலேயே.

இதற்குமுன் எல்லோருக்கும் முதல்வனுன பிராமணன் எல்லா உரிமைகளையும் தன்வசப்படுத்திக் கொண்டு, சில உரிமைகளை க்ஷத்திரியர்களுக்கும், அதைவிடக்குறைவாக வைசியர்களுக்கும் உதவினுன். சூத்திரர்களுக்கு ஒரு வகையிலும் உதவி செய்யாமலும், ஏதேனும் ஒரு காலத்தில் அவர்கள் சொந்த நன்மைக்காக முயற்சித்தால் அக்கணமே கொலை முதலிய தண்டனைகளை விதித்து நசுக்கியும் வந்தார்கள். இவ்வுண்மை இதுவரைக் கூறிவந்த பிராமண வாக்கியங்களினுல் நன்கு விளங்கும். ஐரோப்பியர்களும் சுய நன்மையைப் பார்க்கின்றவர்களே; எனினும், “இந்தியர்” என்று முற்கூறிய வகுப்பினர் முன்னேற்றமடைய முயற்சிப்பதைத் தடுப்பதில்லை. ஆனுல் சுயநலத்திற்குக் கேடு விளையாவண்ணம் பார்த்துக்கொள்ளுகிறுர்கள். இதை மறுப்பவர்கள் “நேபாள” தேசத்தின் ஆட்சிமுறையை நேரிற் போய்ப் பார்த்துத்தெரிந்துகொள்ளலாம். அல்லது அங்கு சென்று பார்த்தவர்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டால் உண்மை புலப்படும். நேபாளம் சுதந்திர நாடு. பிரிட்டிஷ் அதிகாரத்துக்குக் கீழ்ப்படியவில்லை. இக்காலத்திலும், மனுஸ்மிருதியின்

கொடுங்கோலே அங்கேதான் காணலாம், அங்கு சூத்திரர்கள் கல்வி கற்கவும் பொருளீட்டவும் உரிமை கிடையாது. நல்லுணவு, நல்லணி, நல்லாடை, நல்ல வீடு, இவைகளும் இவர்களுக்கு ஆகாது. அதுவோ பனி மிகுந்த நாடு. ஆயினும் குடிசையில்தான் வசிக்கவேண்டும். பால் குடித்த சூத்திரனை மனுதர்ம நூல்வழியாக இன்றைக்குத் தண்டிக்கிறார்கள். சூத்திர ஜாதியில் எங்காவது அழகிய பெண் ஒருத்தி தோன்றுவாளாயின், அவள் பிராமணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும் சொந்தம். * இத்தகைய பெண்ணை அவளது தாய் தந்தயர்கள் க்ஷத்திரியனிடத்தில் ஒப்புவித்துவிட வேண்டும் இவ்விதமாகச் சூத்திரர்களைச் சார்ந்தவரையில் மிகவும் பயங்கரமானது. இடைக் காலத்தில் ஃ ஆரியர்கள் ஆதிக்கம் பெற்றிருந்த நம் நாட்டிலும் இவ்வகையான கொடுங்கோலரசுதான் நடைபெற்றதோவென நினைந்து வருந்தவும் இடம் ஏற்படுகிறது. தேச சரித்திரமும், சிற்சில வகுப்பார்களின் ஒழுக்கங்களும் இதற்குச் சான்றாம். இத்தகைய அரசாட்சியை வெறுக்க எந்த இந்துவுக்கும் உரிமையில்லை. திலகர், மாளவியா முதலிய இந்துமதத் தலைவர்களின் சுய ஆட்சித் திட்டமும் இத்தகையதே.

---

* மலையாளம் இதற்குச் சார்ந்ததாக இருந்தது.

ஃ சங்க இலக்கியங்களும் நிகண்டும் புகலும் தென்னாட்டில் சூத்திரர் என்ற சொல் பிராமண மதத்திற்குப் புறம்பானவர்களையென்க. தங்கள் மதத்துக்குப் புறம்பானவர்களை கிறிஸ்தவர் அஞ்ஞானியென்றும், மூகம்மதியர் காபர் (பாவி) என்பது போலுமென்க.

சூத்திரன் எலும்பு நொறுங்க வேலை செய்தால், வருமானத்தைப் பெற்றுக்கொண்டு பிராமணர்கள் க்ஷத்திரியர்கள் நன்றாய்த் தின்பார்களாம். சூத்திரன் வேலை செய்யாவிட்டால் உலகம் அழிந்து விடுமாம். என்னே! மனுவின் நீதி. இத்தகைய மனுவுக்கும் குருக்களாயிருந்து விளங்கிய பிராமணர்களின் கருணைதான் என்னே! "ராமாயணசம்பூ" என்கிற நூலையியற்றிய போஜராஜன் கூறுவதைக் கேளுங்கள்.

"உச்சைர் கதிர் ஜகதி சித்யதி தர்மதஸ்சேத்
தஸ்ய ப்ரமா சமரணை க்ருதகேத ரைஸ்சேத்;
தேஷாம் ப்ரகாசனதசாச மஹீசுவாஸ்சேத்
தானந்த ராக்வ நிபதேந்கனு மத் பராணும்.!"

பொருள்—உலகத்தில் தருமத்தைப் பின்பற்றுவதனாலேயே நற்கதியடைய முடியும். தரும நெறிகளை விளங்க வைப்பன வேதங்களாம். வேதங்களை வெளிப்படுத்தியவர்கள் பிராமணர்கள். ஆகையால் பிராமணர்களைத் தவிர வேறு யாரை வணங்குவேன்?

இந்தப் போஜராஜன் பெரிய வித்வான். அடுத்தோர்களை ஆதரிக்கும் பெருங்கொடையாளி. அத்தகைய பெரியாரைக்கூட இந்தப்பார்ப்பனர்கள் ஏமாற்றினர்களே! இதனாலே அரசன் செய்யவேண்டிய நீதியாவன:- சூத்திரர்கள் முன்னேற்றமடையாமல் தடுத்தல், அவர்களை இரவும் பகலும் வேலை வாங்கி அதனால் வரும் வருமானத்தால், அன்ன சத்திரங்களும், வேத பாடசாலைகளும், கோயில்களுங் கட்டிப் பிராமணர்களுக்கு எல்லாத்துறைகளிலும் உதவிபுரிதல் என்று ஏற்படுகிற

தன்றோ? இங்ஙனஞ் செய்தால் சொர்க்கமும், மீறினல் நரகமும் வருமாம். "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்னும் பழமொழிக் கிணங்கக் குழந்தைப் பருவமுதற்கொண்டே இங்ஙனம் உபதேசிக்கப்பெற்ற க்ஷத்திரியர்களின் ஆட்சி வேறெவ்விதம்தான் மாற்ற முடியும்?

## இராமாயணம்.

இராமாயணம் என்ற சொல்லைக் கேட்டவுடன், நம்மவர்கள் பக்தியினல் மெய்மறந்து கூத்தாடுகிருர்கள். இதுவும் அறியாமையே யாகும். இராமன் பார்ப்பனர் சொன்னபடியே பார்ப்பனரல்லாதாரைத் துன்புறுத்தி வந்தவனுதலால், அவரை விஷ்ணுவின் அவதாரமென்று புகழ்ந்து, ஒவ்வொரு புராணங்களிலும் பாடி வைத்ததோடு அவருக்கென்றே தனியாக "இராமாயணம்" என்னும் ஒரு பெருங் காவியத்தையும், பாடி வைத்திருக்கிருர்கள். இந்த இராமன் இராட்சதர்களைக் கொன்ருன். என்று சொல்லும் இடங்கள் எல்லாம் தமிழ் மக்களையே கொன்றதாகச் சரித்திர ஆராய்ச்சியால் ஏற்படுகிற உண்மையை நம்மவர்கள் உணராமல் பொருள் நஷ்டமும் அவமானமும் அடைந்துவருகிருர்கள். அந்தோ! கொடுமை! கொடுமை! பார்ப்பனருடைய தீய ஒழுக்கங்களைக் கண்டு மனம் பொருமல் அவர்களை வெறுத்தவர்களையும், சிவனை வழிபடுகின்றவர்களையும், இராட்சதர், அசுரர், நிசிசரர், இவை முதலிய பல இழிவுப் பெயர்களால் வேதத்திலும் ஸ்மிருதியிலும் எழுதிவைத்துக்கொண்டு ஏமாற்றிவருகிருர்கள்.

ஆனால் உதவிபுரிந்தோர்களையாவது தங்களுடன் சேர்த்துக்கொண்டார்களா? இல்லை, அவர்களையும் *குரங்குகள்; ஆயினும் பக்தியுள்ளவைகள் என்று இழிவாகவே பேசினார்கள். இராமனால் செய்யப்பட்ட ஒவ்வொரு காரியங்களும் மனிதர்கள் தெரிந்துகொண்டிருப்பார்கள்; ஆயினும் இத்தருணத்திற்கேற்ற ஒரு கதையை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். இது இராமாயணம் உத்தரகாண்டத்தில் சீதையைக் காட்டில் கொண்டுபோய் விட்டபிறகு அஸ்வமேதயாகஞ் செய்யப்போகும் தருணத்தில் நடந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது.

ஒருநாள் ஒரு பிராமணன் இறந்துபோன தனது பிள்ளையினுடைய உடலைத் தாங்கிக்கொண்டு அரச சபைக்கு வந்து உனது கொடுங்கோலாட்சியில் நடந்த கதியைப் பார் என்று பலவிதமான வசை மொழிகளைப் பொழிந்து கதறினான். அரசன் ஒன்றும் தோன்றாமல் திகைத்திருக்கும்பொழுது, "சம்பூகன் என்கிற ஒரு சூத்திரன் காட்டில் தவம் பண்ணுகிறான். அவனைக் கொல்லாமலிருந்த குற்றத்தால் இக்குழவியின் உயிர் நீங்கிற்று. ஆயினுங் காலங் கடவாமல் சென்று அவனைக் கொன்றால், குழந்தை திரும்பவும் உயிர்பெற்றெழும்" என்று அசரீரி வார்த்தை மொழிந்ததாம். உடனே கோடை

---

*குரங்குகள் இப்போது பேசுவதாகத் தெரிந்தால் அப்போதும் பேசியிருந்திருக்கும். ஆனதால் தென்னாட்டிலுள்ளாரை இழிவுபடுத்தவே இப்படிக் கூறியதென்க. அனுமான் 9 வியாகரணம் வாசித்த குரங்காம். அவர் தோளில் இராமனும் இலக்ஷ்மணனும் சவாரி செய்ய யிடம் கண்டது.

காலத்தில் காட்டுத்தீயின் நடுவில் அகப்பட்டவன் மழையினால், எங்ஙனம் மகிழ்ச்சி யுறுவானோ அத்தகைய மகிழ்ச்சியோடு காட்டிற் சென்று அந்தத் துறவியைப் பார்த்து ''நீ எதன் பொருட்டுத் தவம் பண்ணுகிறாய்'' என வினவ, அதற்கு அவர் இவ்வுலகப் பொருள் எதையும் நான் விரும்பவில்லை; உண்மை நிலை ஒன்றினையே விரும்புகிறேன் என்று விடை பகர, இந்த இராமன் சற்றுத் தயங்கியும், உடனே சூத்திரன் தவம் பண்ணலாமா? இதனாலன்றோ பிராமணச்சிறுவன் இறந்தான். ஆதலால் துறவியாயினும், இந்தச் சூத்திரனைக் கொல்லுவது பாவமாகாது. எதிர்மறையாக இவனைக் கொல்லுவதால், இறந்துபோன பிராமணச் சிறுவன் உயிர்பெற்றெழுந்து அதனால் பெரும் புண்ணியத்தை அடைவோமே என்று எண்ணினவனாய்த் தன் கையைப் பார்த்து இங்ஙனங் கூறுகிறான்.

''ஹே! ஹஸ்த தக்ஷிண மருதஸ்ய சி சோர்த்விஜஸ்ய
ஜீவாதவே விஸ்ருஜ சூத்ர முனௌக்ருபாணம்;
ராமஸ்ய காத்ரமஸி...........''.

(பொருள்)—ஓ! வலது கையே, இறந்துபோன *பிராமணச் சிறுவன் மறுபடியும் உயிர் பெற்றெழுவதற்கு இந்தச் சூத்திரத் துறவியைக் கொல்லுவதே மருந்தாகையால், கூசாமல் இவனை வெட்டி விடு. நீ இராமனது அங்கங்களில் ஒன்றன்றோ?

---

*பிராமணரல்லாதாருடைய நாசம் பார்ப்பனரின் முன்னேற்றம் என்று பொருள்.

இவ்வாறு அந்தத் துறவியைக் கொன்றவுடனேயே சிறுவன் உயிர்த்தெழுந்துவிட்டதாயும் இராமாயணத்தில் எழுதியிருப்பதை யாவரும் வெளிப்படையாயறிந்ததே. என்னே! இராமனின் கருணையிருந்தவாறு. இவ்வரும்பெரும் காரியஞ்செய்த அவ்விராமன் சாட்சாத் விஷ்ணுவின் அவதாரமாம். இக்காலத்திலும் இராமனைப்போன்ற அரசன் இருந்தால் சூத்திரர்களின் கதி என்ன?

இராமாயணம் கதை எழுதியதன் முக்கிய கருத்து இக்கதைக்குள் அடங்கியிருக்கிறது. தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி விஷ்ணு இராமனாக அவதரித்து, * இராவணன் முதலிய இராட்சதர்களை ஒடுக்கி உலகத்திற்கு எண்ணிறந்த நன்மைகளைச் செய்தாரென்றுங் குடிகளை மகிழ்விக்கும் பொருட்டுப் பதிவிரதையான தன்

---

ஃ அழகுடைய மகளிரையும், இரத்தினத்தையும், ஞானத்தையும் சண்டாளனிடத்திலிருந்தாலும் பெறலாமென்ற ஸ்மிருதி வசனத்துக்கு முற்றும் மாறுபட்டதோடு, வேதத்தில் 'ரைக்வர்' என்ற இருடி தோல்பதனிடுஞ் சாதியன்றோ? சங்கராசாரியரை எதிரே நின்று கேட்டவன் புலையனன்றோ? இவைகளைக் கவனித்தால் இராமாயணம் முழுப்பொய் என்பது விளங்கும்.

* திருநாவுக்கரசரால் புகழ்ந்தோதப்பெற்ற சிவபக்தன்; இவன் ராவணன் மனைவி மண்டோதரியை மணிவாசகர் புகழ்ந்துள்ளார். இவன் தாய் சிவநேசமுடைய மாது, இவன் தங்கை தாடகையின் அன்பினால், அணியும் பூமாலைக்காகத் திருப்பனந்தாளில் எழுந்தருளிய சிவக்கொழுந்து தலைசாய்த்ததும், அதனை நிமிரச்செய்வதற்குக் குங்கிலியக்கலய நாயனார் வந்து தலைசிறந்து விளங்கிய பத்திமையினால் நிமிரச்செய்தவருமாவர். விபீஷணன் விஷ்ணுப்பத்தன். இத்தகைய குடும்பத்தைக் கொடியரென்றது குதே.

மனைவியையும் காட்டிற்கு ஓட்டிவிட்டார் என்றும்; மற்றும் பலவிதமாகப் புகழ்ந்துகூறி நம்மவர்களுக்கு அவரிடம் ஒருவிதமான அன்பை உண்டுபண்ணிய பிறகு மேற்சொன்னவாறு சூத்திரத் துறவியைக் கொன்ற கதையையும் சொல்லிவிடுகிறார்கள். இதைப்பற்றி யாரேனும் கேள்விகள் கேட்டால், அது திரேதாயுகம். அக்காலத்தில் சூத்திரன் தவம் பண்ணக்கூடாது. இது கலியுகம். இக்காலத்திற் பிராமணர்கள் கெட்டுப்போனார்கள், சூத்திரர்கள் தவம் பண்ணுகிறார்கள். இது யுகதருமம் என்று சொல்லி ஏமாற்றிவிடுகிறார்கள். உண்மையாகச் சொல்லுமிடத்து, இவ்வஞ்சகர்கள் சொல்லும் கலியுகமாவது, கிருதயுகமாவது கிடையாது. இந்த உண்மையை

> "ஸதாம் ஸத்யுக; ஸாக்ஷாத் ஸர்வதை
> வாஸதாம் கலி"

(பொருள்)—நல்லோர்களுக்கு எக்காலத்தும் கிருதயுகமும் தீயவர்களுக்கு எப்போதும் கலியுகமுமாம், என்கிற வாக்கியத்தினால் அறியக்கிடக்கின்றது.

இந்த இராமயணக் கதையானது, சூத்திரர்கள் ஒரு குற்றமுமில்லாமல், மறுமையிலேனும் நற்கதி யடையலாமென்று காட்டில் சென்று தவம் பண்ணிக்கொண்டிருந்தாலும், அத்தவத்திற்கு ஆதாரமாகிய உடலை ஒழித்துவிடவேண்டும். என்று ஏனைய அரசர்களுக்கும் போதிப்பதா யிருக்கிறதன்றோ? இதனால், சூத்திரர்கள் என்று ஆரியர்களால் அழைக்கப்படுகிற மற்ற சுயமான சாதியார்கள் என்றென்றைக்கும் எவ்வழியினும் முன்னேறவொட்டாமல் தடுக்கவேண்டுமென்ற தீய எண்ணம் பார்ப்

பன ஜனங்களுக்கு இருந்து வருகிறதை வெள்ளிடை மலை போலக் காணக் கிடக்கிறதன்றோ? உண்ட வீட்டுக்கே இரண்டகம் புரியும் வஞ்சக ஜனங்களின் சுயநலத்தை மட்டுங்கோரி அவர்கள் சொல்லுகிற வழியே ஒத்துக் கொண்டு நடக்கிற அரசனே க்ஷத்திரியன் என்று சொல்லியிருக்கிறார்கள்.

இந்த ஸ்ரீராமன் ஏனைய அரசர்களைப்போல ஒருவனாகவேயிருந்திருப்பான். ஆயினும் பார்ப்பனர்களின் சொற்களைக் கொஞ்சமேனும் அலட்சியம் செய்யாமல் இவர் நடந்துகொண்டு வந்திருப்பவர். * "புத்தருடைய கொள்கைகளைப்பற்றி உலகத்துக்கு நன்மையே செய்து வந்த, அசோகச் சக்கிரவர்த்தியை உலகமெல்லாம் புகழ்ந்து கூறுவதைக்கேட்டு மனம் பொறுத பார்ப்பனர்கள்", எங்களுக்கும் ஒரு அரசனிருந்தான்; அவன் பெயர் இராமன்; அவனும் உலக உபகாரியென்று பலவித கற்பனாலங்காரங்களுடன் புகழ்ந்து இராமாயணக்கதையைப் பாடி இப்போது சக்திவாய்ந்த சாமர்த்தியப் புலவர்கள் பொய்யாகக் கதைகளைப் புனைந்து இனிமை வாய்ந்த நவீன நாவல்களில் கற்பித்துக் கூறுவதுபோல, இராமாயணத்தை அரங்கேற்றி இந்தியா முழுவதும் நம்மவர்களை ஏமாற்றிவிட்டார்கள். புத்த பகவானிடத்தும், அவரைப் பின்பற்றி ஒழுகிவந்த நம் ஆன்றோர்களிடத்

---

* எப்பவோ ஒப்புவிக்க இயலாத ஒரு காலத்தில் நடந்ததாகச் சொல்லும் ராமாயணத்தில், சரித்திர வரலாறுபடிக் கணக்கிடப்பட்ட கொஞ்சகாலத்திற்கு முன்னேயிருந்த புத்தருடைய பெயர் வருவதால், புத்தருடைய காலத்திற்குப் பிறகு கற்பிக்கப்பட்ட நூலே அது என்றறியவும். அப்படியே யோகவாஸிஷ்டமும். (ஞானவாசிஷ்டம்)

தும், இவர்களுக்கு இருந்த பொருமையை இராமாயணத்தினின்று அறியலாம். ஆனால் இராமாயணம் பாஷா ஞானத்திற்கு மிக உபகாரமுள்ளது.

''யதாஹி சௌர: ஸ்யததாஹிபுத்த: ததாகதம்
நாஸ்திகமத்ரவித்தி''

வால்மீகி ராமாயணம், பொருள்—திருடனும் புத்தனும் ஒப்பாவார்; இங்கு ததாகதனே (புத்தனை) நாஸ்திகன் என்று அறியற்பாலது. என்ற வசனங்களால் கண்டு கொள்க.

கேளுங்கள்! மனமொழி மெய்களால் எவ்வுயிருக்கும் தீங்கு நேரா முறையைக் கற்பித்து, அதன்படி ஒழுகிக் காட்டிய பெரியாரும் தனுவித்ய சூத்திரத்தில் மோட்சத்தைப்பற்றிக் கூறுமிடத்து ''ப்ராஹ்ம ஸஹவ்யத்தய'' (பிரமத்தில் இரண்டறக் கலத்தல்) என்று கூறியவருமான் பகவான் புத்தரைத் திருடனுக்கொப்பாகவும், அவரது கொள்கைகளை நாஸ்திகக் கொள்கையாகவும் கூறிய பார்ப்பனர்கள் வேறு என்னதான் கூறவும், செய்யவும் துணியமாட்டார்கள். அவரை அப்படி சொன்னதினால் அல்லவோ இன்றைக்கு இக்நாவலன் தீவிலிருக்கும் ஜனக்கள் சேற்றில் புகுந்த பசுவைப்போலுள்ள தன்மையை அடைந்தது.

## சூத்திரனும் அவன் பொருளும்.

———)o(———

பிராமணன் சூத்திரன் பொருளைக் கொள்ளையடிக்குமாறு அரசனுக்குக்கட்டளையிடுவதோடு, கொள்ளையிடத் தங்களுக்கும் உரிமையுண்டு. என்று "பர்த்ரு ஹார்யத னோஹிஸ:" (சூத்திரன் அடிமையானதால் அவனது பொருளைத் தலைவனாகிய பிராமணன் எடுத்துக்கொள்ளலாம்.) என்ற வாக்கியத்தினால் உறுதிப்படுத்தினார்கள். இதுதான் சனாதன தர்மம். (மனுமுறையாட்சி) இத்தகைய வசனங்களால் பார்ப்பனர்களே அரசர்களாகவும், க்ஷத்திரியர்கள் அவர்களின் ஏவலாட்களாகவும் இருந்து வந்தார்கள் என்பது வெளிப்படை. இவர்களின் கருத்துக்கு இசையாதவர்களை எவ்வகையிலும் அரசு இழக்கும்படியே செய்வது * வழக்கம்.

இன்னும் இச்சட்டத்திற்குக் கீழ்ப்படிந்திருக்கிற 19 கோடி மக்களும் உருவத்தில் மனிதர்களாயிருந்தாலும், சமய விஷயத்தில் ஒரு வகையான உரிமையும் இல்லாதவர்களாய் விலங்கினங்கள் போல வருந்தி வாட்டமுறுகின்றார்கள்.

கடவுள் இங்ஙனம் ஒர வஞ்சனையாக நடத்துவாரா? சூத்திரனுக்கு ஒரு அதிகாரமும் இல்லையே. இது நியாயமா? என்று கேட்டால் இதற்குச் சில பார்ப்பனர்கள்

---

* மைசூரில் நவாப்புக்கு மந்திரியாகயிருந்த பூரணையன் சரித்திரமே சான்று பகரும், தமிழ்நாடும் இத்தொல்லைக்குட்பட்டதே!.

ஈசுவரன் கருணாமூர்த்தி; அவருக்குச் சூத்திரர்களிடத்திலும் கருணை அதிகம். ஏனெனில், பிராமணனுக்குப் பணிவிடை செய்வது ஒன்றினாலேயே சூத்திரர்கள் முன்னேற்றம் அடைவார்கள், என்று தருமநூல் கூறுகிறதே? என்ன சுகம்? பிராமணனுக்கு சமஸ்காரம், கல்வி, ஞானம் பொருளீட்டல், ஜபம், தவம், ஈசுவர பூசை, கவர்ன்மெண்டு, உத்தியோகம், முதலிய எவ்வளவு தொல்லைகள் இருக்கின்றன. என்னே, பிராமணக் கடவுளின் அருள் திறம்! மனுவின் வாக்கியமும் இதே கருத்தில் இருக்கிறது.

"ஏகமேவது சூத்ரஸ்ய ப்ரபு: கர்மஸமாதிசத்?
ஏதேஷாமேவ வர்ணாநம் சுஸ்ருஷா மனஸூயயா"

(பொருள்)—பொறாமையின்றி மூன்று வருணத்தாருக்கும் பணிவிடை செய்தலே சூத்திரனுக்குத்தொழில் என்று கடவுள் கட்டளையிட்டிருக்கிறார். பின்னும்,

"விஸ்ரப்தம் ப்ராஹ்மண: சூத்ராத் த்ரவ்யோ
பாதானமாசரேத்:
நஹிதஸ்யாஸ்தி கிஞ்சித் ஸ்வம் பர்த்ருஹார்யத
னேஹிச,"

பொருள்— சூத்திரனிடத்தில் ஏதேனும் பொருளிருந்தால், அதைப் பிராமணன் எடுத்துக்கொள்ளலாம், ஏனெனில், அவன் அடிமையாதலால் அவனுக்கென்று பொருள் சிறிதேனுமில்லை.

இத்தகைய வாக்கியங்களை ஒரு சிறிதுகூட மீறாமல் "நேபாளத்தில்" இப்போதும் அரசியல் நடைபெற்று

வருகிறதென்று முன்னரே கூறியுள்ளோம். இதற்கு முன் அரசு புரிந்துவந்த க்ஷத்திரியன் ஆளுகையும் இத்தன்மையதேயாகும் என்று அறியத்தக்கது.

## அரசும், அமைச்சும்.

---

இக்காலத்தில் சுயராஜ்ஜியம் கேட்கிற நமது பார்ப்பனத் தலைவர்கள் அருவருக்கத் தகுந்த தங்கள் சமயத்தை பட்டிற் பொதிந்து, "நமது வேதத்தில் அரசுமுறையைக் குறித்து வெகுவாகக் கூறியிருக்கிறது. "கௌடில்யர்" தனது அர்த்த சாஸ்திரத்தில் குடிகளுக்கு இணங்கியே அரசன் நடந்துகொள்ளவேண்டும் என்று சொல்லியிருக்கிறார். முற்காலத்திய அரசர்களும் குடிகளின் கருத்திற்கிணங்கியே ஆட்சி புரிந்து வந்தார்கள். "கௌடில்ய ராஜ்யம்" அல்லது "இராம ராஜ்ஜியம்" தான் நமக்குத் தேவை" என்று கூறுகிறார்களே. நம்மவர்களிற் சிலரும் இவர்களின் பாட்டிற்கு இசைந்து கூத்தாடுகிறார்களே! இது முறையன்று. நமது நிலைமை * சீர்படாதவரையில் (பிறப்பினுல் உயர்வு தாழ்வு என்கிற வேற்றுமை ஒழிந்துபோமளவும்) பிரிட்டிஷ் ஆட்சியே தேவை. கௌடில்ய ராஜ்ஜியமும் இராம ராஜ்ஜியமும் பார்ப்பனர்களுக்கே இருக்கட்டும்.

---

* கல்வியிலும், மக்கள் சமூகத்திலும், சமயத்திலும், (கொள்கையிலும்) கோவில்களிலும், சமத்துவமாகிய சீர்திருத்தம் ஏற்படாதவரையிலும், ராஜாங்கச் சீர்திருத்தம் மெல்ல மெல்லவே பெறுவதற்காகவேண்டிய வேலை செய்வதே ஜஸ்டிஸ் கட்சியாகும். (தமிழர் கக்ஷிசாம்மியவாத கக்ஷி) கேட்டுக்கொள்ளுகிறது.

அமைச்சத் தன்மைக்கு உரியவன் பார்ப்பனனே என்பதற்கு மனுவின் கூற்று வருமாறு:—

“ஜாதிமாத்ரோபஜீவீவா காமம்ஸ்யாத் ப்ராஹ்
மணப்ருவ;
தர்மப்ரவக்தா, ந்ருபதேர் நது சூத்ர: கதாசன,”
(மனு)

பொருள்—(பஞ்சமா பாதகங்களுக்கு விளை நிலமா யிருந்தாலும்) பிறவியினாலேனும் பிராமண குலத்தில் பிறந்த ஒருவனை அரசன் மந்திரியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அறிவில் மிகுந்தவனாயினும் சூத்திரன் ஒரு போதும் அரச சபைக்கு உரியவனாகமாட்டான்.

இதை மீறி சூத்திரன் மந்திரியாயிருந்தால் அந்நாடு சீர்கெடுமென்பதற்கு மனு கூறியதாவது:—

“யஸ்ய சூத்ரஸ்து குருதே ராஜ்யே தர்ம விவேசனம்
தஸ்ய ஸீததிதத் ராஷ்ட்ரம் பங்கே கௌரிவ பஸ்யத;
யத்ராஜ்யம் சூத்ரபூயிஷ்டம் நாஸ்திகாக்ராந்தமத்விஜம்;
வினஸ்யத்யாசு தத்க்ரித்ஸ்னம் துர்ப்பிக்ஷம்வ்யாதி
[பீடிதம்.”

பொருள்—எந்த நாட்டில் சூத்திரன் மந்திரியாயிருக்கிறானோ அந்த நாடு சேற்றில் முழுகின பசுவைப்போலப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அழிந்துபோம். எந்த இடம் சூத்திரர்களாலும் வேதத்தை நம்பாதவர்களாலும் நிறைந்து * வேதியர்கள் இன்றியதாகவும் இருக்கிறதோ அந்த நாடு பஞ்சம், நோய் முதலிய கேடுகளால்

* பார்பனர்களாகிய ஆரியர்களையென்க.

விரைவில் அழிந்துபோம். கல்வியை விரும்புகிற சூத்திரன் மனுவின் சட்டப்படி தண்டிக்கத்தக்கவனாவான். இத்தகைய சட்டம் அமுலில் இருக்குமிடத்து, எங்ஙனம் முன்னேற்றம் அடையமுடியும்? சூத்திரன் என்கிற சொல்லிலேயே தாழ்ந்தோன், அடிமை, முன்னேற்றத்திற்கு உரிமையில்லாதவன் இவை முதலிய பல இழிவு பொருட்களும் மற்றும் அடங்கியிருக்கின்றன.

> "நசூத்திர ராஜயே நிவஸேந் நதார்மிகஜனாவ்ருதே;
> ந பாஷண்டி ஜனாக்ராந்தே நாபஸ்ருஷடேக்த்ய
> ஜேந்ருபே," (மனு)

பொருள்—சூத்திரன் ஆட்சி புரிகிற நாட்டிலும் குடியிருக்கலாகாது.

இக்கருத்தின்படிப் பார்ப்பனரல்லாதார் ஆட்சி புரியும் நாட்டில் பார்ப்பனர்கள் குடியிருக்கலாகாதே? இக்குறைதீர்க்கும்பொருட்டு அரசர்களை ᵒ⁄ₒ "ஹிரண்ய கருப்பம்" என்ற விதியினால் க்ஷத்திரியர்களாகச் செய்துகொள்ளவேண்டியது என்கிற தந்திரத்தையும் செய்தார்கள்; செய்துகொண்டும் வருகிறார்கள். இது திருவாங்கூர் சமஸ்தானத்தில் இப்போதும் நடைபெற்று வருகிறது. இவ்விதம் க்ஷத்திரியத் தன்மையை அடைந்த அரசனைத்

---

ᵒ⁄ₒ தங்கத்தால் பசுவின் உருவைச் செய்து, அதன் வயிற்றுட் புகுந்து வெளிப்படுதல் இரணிய கருப்பம். இத்தங்கப் பசுவை பார்ப்பனர்களுக்குத் தானங் கொடுக்கவேண்டுமாம். (திருவனந்தபுரம்) முதலிய சில ராஜாக்களை! பட்டத்துக்கு வருமளவும் சூத்திர ஜாதியாகவேயிருந்து, பட்டத்திற்கு வந்தவுடன் க்ஷத்திரிய ஜன்மமெடுக்கச் செய்கிறது என்பது பொருள்.

தங்கள் சுயநலத்தைச் சாதிக்க ஒரு கருவியாகவும் வைத்துக்கொள்ளுகிறார்கள். "ஓணான் பெருத்தது உடும்பு; உடும்பு பெருத்தது முதலை" என்று மலையாளத்தில் ஒரு பழமொழியுண்டு. அதைப்போலச் செய்கை, க்ஷத்திரியர்களும் தங்களை உயர்ந்தோர்களென்றும், சூத்திரர்கள் இயற்கையாகவே தாழ்ந்தவர்களாகையால், மனுஸ்மிருதிப்படி அவர்களை முன்னுக்கு வரவொட்டாமல் ஒடுக்குவதே தங்கள் கடமை என்றும் நினைக்கிறார்கள். இத்தகைய செயற்கைச்சனியன்கள் இல்லாவிடில் "நம்மினத்தவர்" என்கின்ற அபிமானத்திலேனும் சற்று இரக்கங் காட்டுவார்களல்லவா?

இவ்வாறு க்ஷத்திரியர்கள் என்றுசொல்லி அவர்களையும் ஏமாற்றிப்பணத்தையும் பறித்து வருகின்றார்கள். இச்சூதினை இன்னும் உணராமலிருப்பதே பெரும்வியப்பு!

ஆனால் இங்கு ஒரு ஐயம் நிகழுகின்றது. இவர்களின் நீதி அனுபவத்திற்குப் பொருந்தவில்லை. ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான், சைனா முதலிய பிறநாடுகளில் பிராமணர்களும் அவர்களின் சமயமுங்கிடையாது. அங்ஙனமிருந்தும், அந்நாடுகள் முன்னேற்றமடைந்தும், பிராமணர்கள் இருக்கிற இந்நாட்டின் குடிகளும், செல்வமும், அறிவும் வரவரத் தாழ்வடைந்தும் வருவது என்ன காரணம் பற்றியோ? இதைப்பற்றிப் பிராமணக் கடவுளையோ? மனுவையோ? நேரிற்கண்டுதான்கேட்கவேண்டும்!

பார்ப்பனரல்லாதார் முன்னேற்றமடைய விரும்புவார்களாயின் முதன்முதல் பார்ப்பனர்கள் நம்மைக்காட்

டினும் உயர்ந்தவர்கள் என்கிற எண்ணத்தையும் அவர்களின் சமயத்தையும் உதறித்தள்ளவேண்டும். தங்களது முன்னேற்ற வழியை மறித்து வைத்திருக்கிற இப்பெருங் கற்பாறைகளைப் பார்ப்பனரல்லாதார் ஒன்றுசேர்ந்து உடைத்துப் பொடி பண்ணிவிடவேண்டும். (இதற்காகவே சாம்மியவாதம் தோன்றினது)

முற்காலங்களில் பார்ப்பனரல்லாதார் பார்ப்பனர் செய்யும் கொடுமைக்கு ஏதேனும் திருப்பிச் செய்தால் தண்டனை விதித்துவந்த வேடிக்கையையுங் கேளுங்கள்.

"சதம் ப்ராஹ்மணமாக்ருச்ய, க்ஷத்ரியோ
தண்டமர்ஹதி:
வைச்ய: ஸார்த்தசதம் சைவ சூத்ரஸ்து
வதமர்ஹதி." (மனு)

இதன் பொருள்— பிராமணனது மனம் நோகும்படி க்ஷத்திரியன் ஏதேனும் மொழிந்தால், அவனுக்கு நூறு பொன்னும், வைசியன் அங்ஙனம் செய்தால், அவனுக்கு நூற்றைம்பது பொன்னும், அபராதம் விதிக்கவேண்டும்; பிராமணனைத் திட்டுகிற சூத்திரனைக்கொன்றுவிடவேண்டும். மற்றும்,

":ஆர்யஸ்த்ர்யபிகமனே லிங்கோத்தார: ஸ்வஹரணஞ்ச" (கோதமதர்ம சூத்திரம்.)

பொருள்—மூன்று வருணத்தாருடைய பெண்களில் எவளையேனும் சூத்திரன் கைப்பற்றினால் அவனது பொருளைக் கொள்ளையிடுவதோடு ஆண்குறியையும் அறுத்துவிடவேண்டும்.

எதிர்மறையாக, ''ஸ்த்ரீரத்னம் துஷ்குலாதபி''

சூத்திரனது அழகிய பெண்ணை த்விஜர்கள் கைப் பற்றிக்கொள்ளலாம் என்றும் பிரமாணமுண்டு. மற்றும்,

''ஏகஜாதிர் த்விஜாதிம்ஸ்து வாசா தாருணயாக்ஷிபன்
ஜிஹ்வாயா:ப்ராப்நுயாச்சேதம் ஜகன்யப்ரபவோ
ஹிஸ:'' (மனு)

பொருள்—மூன்று வருணத்தினரில் யாரையேனும் சூத்திரன் திட்டினால் அவனது நாக்கை அறுத்துவிட வேண்டும். ஏனெனில் அவன் தாழ்ந்த அங்கத்தினின்றும் பிறந்தவனன்றோ?

முற்காலங்களில் இந்த சட்டத்தின்படி பலரையும் கொன்றும், நாக்கறுத்தும் பயமுறுத்தியதன் வாயிலாகவே இன்னும் இவர்களைப் பார்த்தவுடன் பயந்து எழுந்து நின்று ''சுவாமி!'' என வணங்குவது * ''பிராஹ்மணயமகாதக'' என்ற பழமொழியும் இதற்குச்சான்றாம். பார்ப்பனர்கள் மலையாளத்தில் செய்த தீச்செயல்கள் அளவிறந்தன. மனுஸ்மிருதியின்படிக்குள்ள உரிமைபோதாதென்ற பேராசையினால் ''சாங்கரஸ்மிருதி'' எனத் தங்களுக்குமட்டும் ஒரு ஸ்மிருதி எழுதி வைத்துக்கொண்டு அங்குள்ள நாயர் பிரபுக்களை மயக்கி அவர்களைத் தங்களின் துணைக்கருவியாக வைத்துக்கொண்டு ஏழைகளைத் துன்புறுத்தி வருகின்றார்கள். ஆனால் இந்நாயர் பிர

---

* எமனைப்போல் உயிர்களை வதைக்கிறவர்கள்.

புக்களையாவது ஒழுங்காக வாழச்செய்தார்களா? * ஊரா ண்மை முதலிய ஐந்து ஆண்மைகளும் கோன்மையும் எங் களுக்குச் சொந்தம். இந்த நாட்டிற்கே நாங்கள்தான் தலை வர்கள் என்று வீரம்பேசுகிற இப்பிரபுக்களின் குடும்ப ஒழுக்கங்களைப்பற்றிக் கேட்கிற மறு நாட்டார் யார்தான் அருவருப்படையமாட்டார்கள்.

இக்காலத்தில் நம்மவர்கள் அடைந்து வருகிற கஷ் டங்களுக்கெல்லாம் முதற் காரணம் புத்த பகவானுடைய கொள்கைகளைக் கைநழுவ விட்டதோடு கருணையே உரு வாய் விளங்கிய அம்மதத் துறவிகளையும் இரக்கமின்றிக் கொலை புரிந்ததுவேயாகும். புத்தமதக் கொள்கைகளை யும் துறவிகளையும் நாசம் பண்ணின பல பார்ப்பனர் களுள் "சங்கராசாரியர்" ஃ முதன்மையானவராவர். இவர்களின் சூழ்ச்சியாகிய வஞ்சகச் செய்கையினால் நம் மைச் செய்த கொடும் பாதகங்களை நினைந்து வருந்தும் இக்காலமே நமது நற்காலமென்றறியவேண்டும்.

கும்பகோணேக் கிருதம் பாபம் கும்பகோணே வின ஸ்யதி; (கும்பகோணத்தில் செய்த பாவம் கும்பகோணத் திலேயே ஒழியும்) என்றவாறு நமது நாட்டில் நடந்த இத்தீச்செயலுக்கு நமது நாட்டிலேயே பிராயச்சித்தம்

---

* ஊராண்மை, காராண்மை, வேளாண்மை, ஆசாண்மை, நாட்டாண்மை என்பதுடன் கோன்மை என்பது அரசுரிமையாம்.

ஃ குமாரிலபட்டும், திருஞானசம்பந்தரும், மாணிக்கவாசகரு மாமென்ற ஏட்டில் காணப்படுகிறது. (இவர்கள் சமண புத்தரைச் சொல்லும் கெடுதிகளைக் கேட்டால் இக்கெடுதிக்காக அப்புத்தர்களை யும் சமணர்களையும் கொலை புரிந்தது பெரும் பிசகென்று சொல் லத்தகும்.)

செய்தாகவேண்டும். (பார்ப்பனச் சமயத்தை அறவே ஒழித்து, விடுதலையடைவதே தக்க பிராயச்சித்தமாம்)

## சூத்திரனும் தண்டனையும்.

———)o(———

நாமஜாதிக்ரஹம் த்வேஷாமபித்ரோ ஹேணகுர்வத:
நிக்ஷேப்யோ யோமய:சங்கு:ஜ்வலன்னுஸ்யே தசாங்குலம்:
தர்மோபதேசம் தர்ப்பேண விப்ராணு மஸ்யகுர்வத:
தப்தமாஸே சயேத்தைலம் வக்த்ரே ஸ்ரோத்ரே
சபார்த்திவ: (மனு)

பொருள்—பிராமணனுடைய பெயரோ அவனது குலப் பெயரோ கேட்கிற சூத்திரனுடைய வாயில் பத்து அங்குல அளவுள்ள இரும்பாணியை பழுக்கக் காய்ச்சிச் செலுத்தவேண்டும். பிராம்மணனுக்கு ஒழுக்கத்தைப் போதிக்கிற சூத்திரனுடைய காதுகளில் எண்ணெயைக் காய்ச்சிவிடவேண்டும்.

இத்தகைய தண்டனைகள் முற்காலத்தில் ஆங்காங்கு நடந்திருக்கின்றன. மகாராஷ்டிர தேசத்தை சிவாஜிக்கு முன் துலுக்கர்கள் ஆட்சிபுரிந்து வந்தார்கள். அக்காலத்து வேத சாஸ்திரங்களைக் கற்றறிந்த அவ்வூர் பண்டிதர்களுள் நாற்பதுபேர் பிராமணரல்லாதவர்கள். துலுக்க ஆட்சி சிவாஜியின் ஆட்சியாக மாறினதும் பார்ப்பனர்கள் மனுவின் சட்டத்தைச் சிவாஜிக்கு எடுத்துக் காட்டி மேற்சொன்ன நாற்பதின்மரையும் கொல்வித்தனர். இந்தத்துன்பத்தைப் பொறுக்கமுடியாத அவர்களின் குடும்பத்தைச் சார்ந்த எழுநூறு பேர்கள் அரசனாகிய சிவாஜியிடம் போய் முறையிடவே அந்த எழு

நூறு பேர்களையும் இரக்கங் காட்டாமல் * வெட்டி எறியச் செய்தனர்.

அன்றியும் மதுரையில் "திருமலை நாயகர்" ஆட்சி புரிந்து வருங்கால் "ஸஹஸ்ரசிர்ஷா புருஷ:" என்ற வேத வாக்கியத்திற்குப் பொருள் தெரிவிக்கும்படி பார்ப்பனரல்லாதாரொருவன் அரசனது குருவைக் கேட்கவும் இரக்கமென்பது சிறிதுமில்லாத பார்ப்பனராகிய அக்குருவானவர் அரசனிடம் சென்று ஒரு முகூர்த்த காலத்திற்கு ஃ செங்கோலைத் தன்னிடம் ஒப்புவிக்கும்படி கேட்டு பெற்றுக்கொண்டு தன்னிடம் வேதத்திற்குப் பொருள் கேட்டவனை வரவழைத்து அவனது ஆசனத் துவார வழியாக ஒரு கழுமுளையை உச்சிக்குமேல் பத்து அங்குலம் எழும்பி இருக்கும்படி ஏற்றி இந்த சூத்திரப்பயல் வேதத்திற்குப் பொருள் கேட்டான்; சூத்திரர்களுக்கு வேதத்தின் பொருள் இத்தன்மையதேயாகும் என்று கூறியதையும் இதைப்போல் நிகழ்ந்த பற்பல கொடுமைகளையும் பரம்பரையாகத் தெரிந்து வைத்திருக்கிற அந்தந்த நாட்டுக் குடிகள் இன்னும் நினைந்து வருந்துகின்றார்கள்.

இவ்விதமாகப் பார்ப்பனர்களின் கொடுஞ் செயல்களில் சிலவற்றையும் நாதர்ஷா, மஹமதுகசனி, டைமர் முதலிய துலுக்க அரசர்களின் கொடுஞ் செய்கைகளை

---

* இத்தகைய உத்தம நீதி மனு அதருமச் சட்டத்தை நிலைநாட்டவேண்டுமென்று பேராசையை மனதில் வைத்துக்கொண்டல்லவா ஹோம் ரூல் வேண்டுமென்று கதறுகின்றார்கள். இச்சூதினை ஒரு சிறிதும் உணராத நம்மவர்களும் சேர்ந்துகொண்டு கூத்தாடுகின்றார்களே.

ஃ அரசுரிமை, அதாவது அரசனது அதிகாரம்.

யும் ஒப்பிட்டுப்பார்த்தால் பார்ப்பனக் கொடுமையின் முன்னுல் துலுக்கக் கொடுமைகள் சூரியனுக்குமுன் சிறு மின்மினிபோல் தெரியுமென்பதில் சந்தேகமில்லை. சிறிது காலத்திற்குமுன் நம் நாட்டில் பிரிட்டிஷார் ஏற்படுத்திய "ரவுலட் சட்டமும்" இதற்குமுன் எம்மாத்திரம்? சூத்திரர்களை * ஒடுக்கும் பொருட்டுப் பார்ப்பனர்கள் கையாண்டுவந்த "ரவுலட் சட்டத்தை" சனுதன தருமம் என்ற பெயரால் மறைத்துவைத்துத் தருணத்திற் கேற்றவாறு கையாண்டுவந்தார்கள். பிரிட்டிஷ் ஆட்சியாகிய இக்காலத்தில் உண்மை சிறிது சிறிதாக வெளியிட்டுவரவே தயானந்த சரஸ்வதி யென்கிற பிராமணத் துறவி வெளியில் வந்து ஐய! முன்னேர்கள் வேதங்களினுடையவும் ஸ்மிருதிகளினுடையவும் உண்மைக் கருத்துக்களை உணரத்தக்க ஆற்றலைப் படைத்தவர்களன்று. அவைகளை உணர்ந்தவன் நான் ஒருவனே என்று கூறி ஜனங்களை ஏமாற்றும்படியான பொருள்களை வேதத்திற்குக் கற்பித்து ஆரிய சமாஜம் என்கிற பெயரால் பிரசாரம் நடந்து

---

* கிரிமினல் சட்டமில்லாமலே இக்காலத்திலும் ஆரியர்களுக்கு மக்கள் பயப்படுவதற்குக் காரணம் பழய கொடுஞ்செயலன்றே? இப்படிப்பட்ட கொடும் செயல்கள் பார்ப்பனர் பார்ப்பனரல்லாதவர்களுக்கு செய்ததை நாவலர் தீவு முற்றும் நடந்து விசாரித்தெழுதத் தொடங்கினுல், "இன்ஸைக்லோப்பீடியா" முதலிய நூற்களைக் காட்டிலும் பெருந்தொகையான புத்தகங்கள் உண்டுபண்ணலாம். அப்பிராமணர்களை அடக்க என்னென்ன செய்யவேண்டும்; அவைகள் எவ்வெவ் வகையால் செய்யவேண்டும்; எச்சமயங்களில் என்பதை சொல்லும் நூற்களாகும் வேதங்கள். அதில் முக்கியமானது அதர்வண வேதம்.

வருகிறது. சகோதரர்களே! அன்னோரின் உபதேச மொழிகளைக் கேட்டு மோசம் போகவேண்டாம்.

பின்னும்,

யேனகேனசிதங்கேன ஹிம்ஸ்யாச்சேச்ரேஷ்ட மந்த்யஜ:;
சேத்தவ்யம் தத்ததேவாஸ்பதன் மனோரனுசாஸனம்
பாணிமுத்தமய தண்டம்வா பாணிச்சேதனமர்ஹதி;
பாதேன ப்ரஹரன் கோபத் பாதஸ்பச் சேதமர்ஹதி.

ஸஹாஸனமபிப்ரேப்ஸு ருத்க்ரிஷ்டஸ்யா பக்ரிஷ்டஜ:;
கட்யாம் க்ருதாங்கோ நிர்வாஸ்ய: ஸ்பிசம்வாஸ்யா
பகர்த்தயேத்.
அவநிஷ்டீபதோ தர்ப்பாத் த்வா வோஷ்டௌ
சேதயேக்ருப:;
அவமூத்ரயதோ மேட்ரமவமர்சயதோ குதம்.

கேசேஷுக்ருஹ்ணதோ ஹஸ்தௌ சேதயேதவிசாரயன்;
பாதயோர் தாடிகாயாம்ச க்ரீவாயாம் வ்ருஷணேஷுச.
த்வக்பேதக: சதம்தண்ட்யோ லோஹிதஸ்ய சதர்சக;
மாமஸபேத்தாது ஷண்ணிஷ்கான் ப்ரவாஸ்யஸைத்
வஸதி பேதக: (மனு)

(பொருள்)—சூத்திரன் உயர் குலத்தோனை எந்தெந்த அவயவங்களினால் துன்புறுத்துகிறானோ அவனது அந்தந்த அவயவங்களை வெட்டி எறிந்துவிடவேண்டும். இது மனுவின் * கட்டளையாகும். எப்படியென்றால்,

* நீதியானதால் அதனையே தருமச் சட்டம் என்று கூறுகின்றனர். ஆ! கொடுமை ஷே சூத்திரனை எவ்வித துன்பங்களும் செய்யலாம். அதைப்பார்த்தும், கேட்டும் பொறுக்கமுடியாத சூத்

அடிப்பதற்கு கையேனும் கோலேனும் ஓங்கினால் கையை வெட்டுதல், காலால் உதைக்க முயன்றால் காலை வாங்குதல், ஒரே ஆசனத்தில் இருக்க விரும்பினால் பிருஷ்ட பாகத்தை அறுத்துவிடவோ அல்லது சூடு போட்டு நாட்டை விட்டுத் துரத்தி விடவோ செய்தல், எச்சில் உமிழ்ந்தால் உதடுகளைத் துண்டித்து விடுதல், பிராமணன் அருகிலிருக்க மலத்தையோ, மூத்திரத்தையோ விட்டால் அந்தந்த அங்கங்களைத் துண்டித்து விடுதல், தலைமயிர், தாடி, கழுத்து விருஷணம் (விரைக்கொட்டை) இந்த அங்கங்களைப் பற்றி இழுத்தால் கையை வெட்டுதல், இவ்வகையான தண்டனைகள் விதிப்பதோடு சூத்திரனை பிராமணன் துன்புறுத்தினால், சூத்திரனை சரீரத்தில் தோல் பிளந்தால் நூறு பொன் அபராதமும், சதைக்குக்கேடு சேர்ந்தால் ஆறு நிஷ்கம் (ஒரு வகை நாணயம்) அபராதமும் விதித்தல், எலும்புக்குக் கேடு வரின் நாட்டைவிட்டுத் துரத்துதல் முதலியன செய்யத்தக்கன.

"இந்தியாவின் பழைய நற்காலம் நமக்கு ஏற்பட வேண்டும். அதன் பொருட்டு ஹோம் ரூல் வேண்டும்; என்கிற திலகர் முதலிய தலைவர்களை ஆதரிக்கிற நம்மவர்

---

திரர்கள் யாதாகிலும் சொல்லவோ தடுக்கவோ செய்தால் அதற்குள்ள தண்டனைகள் ஜனங்களுக்குத் தெரியும்பொருட்டு இங்கு கூறினேன். இவ்வாறே ரோம் அரசாட்சி புரிந்தபோது யெஹூதிகளும் ரோமன் ஜனங்களும் கலந்து அந்நாட்டுக் குடிகளை வதைத்து வந்தது. அத்தருணத்தில் 'யேசு' என்பவர் இந்தியாவில் கல்வி கற்று திரும்பி சென்று ஆங்கு புத்தமதம் போதித்த காரணத்தால் அவரையும் இக்கொடுங்கோல் சட்டம், கொல்லப்பட்டது. ஆதலால் அவராலேயே இக்கொடுங்கோல் சட்டமும் இச்சட்டத்தாருடைய மதமும் வேரோடழியவேண்டியது.

கள் மேற்குறித்த விஷயங்களை ஞாபகப்படுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஹோம்ரூல் வாதிகளின் அரசாட்சி மனுவின் அரசாட்சியே. மனுவின் ஆட்சியில் சூத்திர னுடைய நிலைமையை இன்னும் கேளுங்கள்.

சூத்ரந் து காரயேத் தாஸ்யம் க்ரீதமக்ரீ தமேவவா;
தாஸ்யாயைவ ஹி ஸ்ருஷ்டோஸௌப்ராஹ்
மணஸ்ய ஸ்வயம்புவா. (மனு)

(பொருள்)—கூலி கொடுத்தாகிலும் இல்லாவிடி னும் சூத்திரனை வேலை வாங்கலாம். ஏனென்றால் பிரா மணனுக்குப் பணிவிடை செய்யும் பொருட்டே இவன் ஸ்வயம்பூ (பிரம்மன்)னால் சிருஷ்டிக்கப்பட்டான்.

பின்னும்

நஸ்வாமினா நிஸ்ருஷ்டோபி சூத்ரோ தாஸ்யாத்
விமுச்யதே;
நிஸர்க்கஜம் ஹிதத்தஸ்ய கஸ்மாத்தஸ்மாத
போஹதி. (மனு)

(பொருள்) எஜமான் விட்டுவிட்டாலும் சூத்திர னின் அடிமைத்தனம் அவனை விட்டொழியாது. இது * இயற்கையானதால் எங்ஙனம் ஒழியும். ∴

---

* இயற்கையென்று நூல் கூறினும் அடையாளமொன்றும் காணாததினால் எல்லோரும் ஒரேவித உரிமையைப் பெறத்தக்க மனிதர்களேயன்றி சூத்திரனென்று தனிப்பட்ட ஒரு வகையினர் இல்லையென்பது திண்ணம். சமஸ்காரம் செய்துகொண்டால் யாவரும் துவிஜரே. இது சூத்திரனுக்குக் கூடாதாம்.

∴ ஹே! பார்ப்பனரே இன்னும் சிலகாலம் போக ஆங்கில அரசாட்சியார், கிறிஸ்துவர்கள் ஆனால் மட்டும், உத்தியோகமும்,

சக்தேனுபிஹி ஶூத்ரேண நகார்யோதன ஸஞ்சய;
ஶூத்ரேண தனமாஸாத்ய ப்ராஹ்மணனேவ பாததே.

(பொருள்)—பொருளீட்டத் திறமை யிருந்தாலும் சூத்திரன் அங்ஙனம் செய்யலாகாது. சூத்திரனுக்குப் பொருள் சேர்ந்தால் பிராம்மணன் துன்புறுவான்.

உச்சிஷ்ட மன்னன் தாதவ்யம், ஜீர்ணனி வஸனனிச;
புலாகாஸ் சைவதான்யானும் ஜீர்ணஸ்சைவ பரிச்சதா.
(மனு)

(பொருள்)—சூத்திரனுக்கு; எச்சலும் கிழிந்து போன பழைய ஆடையும் நல்ல தானியங்களை எடுத்துக் கொண்டு பதரும் வைக்கோலும் கொடுக்கவேண்டும். இதோடு நில்லாமல்

ஶூத்ரஸ்யது ஜுகுப்ஸிதம் (மனு)

(காதில் விழும்போதே அருவருப்பை உண்டுபண்ணத்தக்க பெயர்தான் சூத்திரனுக்கு இடவேண்டும்)

ஒருவருக்கொருவர் க்ஷேமம் விசாரிப்பதிலும் வேற்றுமையுண்டு.

---

இங்கிலீஷ் படிப்பும் கொடுக்கப்படும் என்று விதி வெளிப்படுத்தி, 7 கோடி ஜனங்கள் அவ்விதிப்படி உத்தியோகத்திற்கும் படிப்புக்கும் ஆசைப்பட்டு கிறிஸ்து மதத்தில் சேர்ந்தபின் கிறிஸ்து மதத்திற்கு இனிமேல் இந்துக்களை சேர்ப்பதில்லை யென்று மற்றொரு ஆக்டை பாஸ் பண்ணினால் இந்த மனு உன்னையும் அப்படியே செய்துவிடும். யூரோப்பியன், பிராம்மணனும், யூரோஷியன் க்ஷத்திரியனும், நேட்டிவ் கிறிஸ்தியன் வைசியனும், இந்தியன் சூத்திரனுமாய்விடும்.

ப்ராஹ்மணம் குசலம்ப்ருச்சேத் க்ஷத்ரபந்து
மனுமயம்;
வைச்ய க்ஷேமம் ஸமாகம்ய சூத்ரமா
ரோக்யமேவச. (மனு)

(பொருள்)—குசலமா? அனுமயமா? க்ஷேமமா? ஆரோக்கியமா? * (நோயில்லாமலிருக்கிறாயா?) என்று முறையே பிராமணன் முதலிய வருணத்தினரை விசாரிக்கவேண்டும்.

ஆசிர்வாதத்திலும் வேற்றுமை பாராட்ட வேண்டுமென்று "பிரத்தியபிவாதே சூத்ரே" என்ற சூத்திரத்தினால் வடமொழி இலக்கண ஆசிரியராகிய பாணினி என்பவர் விதித்திருக்கிறார். பரவித்தையைப் போதிக்கிற பகவத்கீதையிலும் இவ்வேற்றுமை காணப்படுகிறது. "யேபிஸ்யு பாபயோனய" (கீதை அத்தியாயம் 9, சுலோகம் 32) என்று தொடங்கிய வாக்கியங்களாலும் மற்றும் சூத்திரர்களைப் பாவிகள் என்று சொல்லுகிற இடங்களைப் பாருங்கள்.

வேதாந்த சூத்திரத்திற்கு பாஷியம் செய்யவந்த சங்கராச்சாரியர் சூத்திரன் சன்னியாசத்திற்கும் சிரவணத்திற்கும் ஞானத்திற்கும் உரியவனன்று என்கிற தனது பொருமைக் கொள்கையை நிலைநிறுத்தும் பொருட்டு அபசூத்ராதிக்ரணத்தில்,

---

* சூத்திரனிடத்தில் பிராம்மணன் க்ஷேமம் விசாரிப்பது நீ "நோயில்லாமல் இருக்கிறாயா" யென்றுமட்டுமே, வேறு குசலம், அனுமயமா, க்ஷேமமா என்று கேழ்க்கக்கூடாது. "நோயில்லாமல் யிருந்தாலல்லவோ தினாத்திரி பார்ப்பனர்கட்கு வேலை செய்யலாம், இதுவே கருத்து.

பர்ஹுமசூத்திர—ச்ரவணாத்ப யனர்த்த ப்ரதிஷேதாத் ஸ்ம்ருதேஸ்ச. (அ. 1 பாதம் 3 ஸூத்ரம் 38)

இந்த சூத்திரங்களின் பாஷியத்தில் மேற்கோளாக எடுத்துக்காட்டிய ஸ்மிருதி வாக்கியங்கள் வருமாறு.

* அதஹாஸ்ய வேதமுபஸ்ருண்வத:
ஸ்ரோத்ரௌத்ரபுஜதுப்யாம்
பூரயேத பூரயேத (கோதமதர்ம சூத்திரம்.)

(பொருள்)—வேதம் ஓதுங்கால் அதைக் காதால் கேட்கிற சூத்திரனது காதுகளில் ஈயத்தையும் மெழுகையும் உருக்கிவிட வேண்டும்.

பத்புஹவா ஏதத் ஸ்மசானம் வை சூத்ரஸ்த
ஸ்மாத் சூத்ரஸ் மீபே நாத்யேதவ்யம்.

பொருள்—சூத்திரன் நடமாடுகிற இடம் சுடுகாடானதால் அவன் பக்கத்தில் வேதமோதலாகாது. (1)

உச்சாரணே ஜிஹ்வாச்சேதோ தாரணே சரீரபேத:

---

* சூத்திரத்தில் அதஹ என்றும் பூரயேத பூரயேத என்றும் மீண்டும் மீண்டும் கூறியிருப்பது கோதமனுக்கு சூத்திரர்களிடத்திலிருக்கிற பகையை வெளிப்படுத்துகிறது. இவ்விதம் பார்ப்பனன் இங்கிலீஷாவது பைபிலாவது வாசித்தால் இவ்வித தண்டனையுண்டு என்று சொல்லுவதுடன் இந்திய நாட்டிலுள்ள எந்தப் பாஷையும் வாசிக்க வசதியும் இந்த கிருஸ்து கவர்மெண்டு கொடாவிடில் இப்பார்ப்பனர்கட்கு எவ்வளவு வருத்தம் உண்டாகுமோ அவ்வளவு வருத்தம் பாக்கியுள்ள அப்பிராஹ்மண சமூகத்திற்கு உண்டென்று நினைத்துக்கொள்ள அறிவுறுத்துகிறேன்.

(1) ஆதலால்தான் ஐயங்கார் வீட்டுக்கு ஐயர் போனாலும் ஐயர் வீட்டுக்கு அப்பிராமணன் போனாலும், இவர்கள் குடியிருக்

பொருள்—சூத்திரன் வேதத்தை வாயினுல் சொன்னுல் நாக்கை அறுக்க வேண்டும். உணர்ந்து வைத்திருந்தால் நெஞ்சைப் பிளக்க வேண்டும்.

நசூத்ராய மதிம் தத்யாத்.

பொருள்—சூத்திரனுக்கு பகுத்தறிவுண்டாகும்படி யாதுஞ் செய்யலாகாது. (யாது ஞான நூலும் கற்பிக்கலாகாது) இவை முதலியன.

பிரமாண வசனங்கள் இப்படியிருக்க இக்காலத்தில் பார்ப்பனரல்லாதாரில் (2) சிலர் சன்னியாசி வேஷம் போட்டுக்கொண்டவர்களும் ஏனையோரும் பகுத்தறிவில்லாது சங்கராச்சாரியார் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லி திரிகின்ருர்களே யெனின் இது இவர்களின் அறியாமையையும் இதனுல் இவர்கள் உயிருக்கு ஆபத்தில்லாமல் வாழ்ந்து வருவது பிரிட்டிஷ் ஆட்சியின் கருணையையும் விளக்குகிறது. தங்களின் கட்டளைப்படி நடக்காத பார்ப்பனரல்லாதாரைத் தண்டிக்க மனுவின்

---

கும் தெருவுக்கு நாடார்கள் பறயர்கள் வந்தாலும், மயானத்துக்கொப்பிட்டு சாணித்தண்ணீர் கொட்டுகிருர்கள். இது ஓர் பரம்பரை வழக்கம்.

(2) தென்னுட்டில் காவி கட்டியிருந்தாலும், வெள்ளைகட்டி இருந்தாலும், சூத்திரனை பரதேசி பண்டாரம் என்பர். இல்லறத்திலுள்ள பார்ப்பானைச் சாமியென்று அழைப்பது சகசமாகிவிட்டது. வேதத்தில் கருமம், பக்தி, ஞானம் என்னும் முக்காண்டங்களுள்ளன. கரும காண்டத்தில் ஒரு சிறிதும் அதிகாரமில்லாதவர்கள் ஞானகாண்டத்தைப் படிக்கவோ சந்நியாசம் செய்துகொள்ளவோ உரிமை கிடையாதென்பதை மறந்து கதறுகின்ருர்கள். இவர்களுக்கு நல்லுணர்வு இறைவன் அருள்புரிவானுக.

சட்டப்படி பார்ப்பனருக்கு உரிமையிருந்தாலும் பிரிட்டிஷ் ஆட்சியின் பீரங்கி முனையிலும், கத்தி முனையிலும் அது செல்லாது.

பார்ப்பனன் ஒருவன் எதிர்ப்பட்டதும் பார்ப்பனரல்லாதவர்கள் எழுந்து வணங்குவதை இப்போதும் பார்க்கிறோம். இது பார்ப்பனரிடத்தில் தங்களுக்கிருக்கிற பேரன்பைப் பொறுத்ததல்லவென்றும் வெகு காட்களாகப்பார்ப்பனரால் துன்புறுத்தப்பட்டு வழிவழியாக வந்த பயமே இதற்குக் காரணம் என்றும் அறியவேண்டும். இதைப்போலவே பார்ப்பனரல்லாதாருக்குள்ளேயே உயர்ந்த ஜாதியானொருவனைக் கண்ட தாழ்ந்த ஜாதியானும் எழுந்து வணங்குவதும் பயத்தினாலேயாம்.

இறந்துபோய் * பிரேதங்களான பிறகுகூட இவ்வேற்றுமைகள் ஒழிந்தபாடில்லை. சூத்திரப் பிரேதத்தால் உண்டான துன்பம் வைசியப் பிரேதத்திற்குப் பூசை போடுவதாலும் வைசியப் பிரேதத்தின் உபத்திரவம் க்ஷத்திரியப் பிரேதத்திற்குப் பூசை போடுவதாலும் க்ஷத்திரியப் பிரேதத்தின் துன்பம் பிரம்மரக்ஷசுக்குப் பூசை போடுவதாலும் நீங்குவதைக் கண்கூடாகக் காணலாம்.

பாலக்காட்டிற்கு அருகாமையில் ஒரு கோயில் இருக்கிறது. இங்கு ஜாதி வேற்றுமை கிடையாது. 'கண்டத்து இராமன்' என்னும் பெயரையுடைய மந்திரவாதி ஒருவன் இருந்ததாகவும் அவன் பார்ப்பனருக்கு

---

* ஈண்டுப் பிரேதங்களென்றது பிசாசுகளையென்க. விண்ணுலகத்துக்கும் மண்ணுலகத்துக்கும் இடையிலுள்ள வுலகினை அந்தரிட்சமென்பர்;—இவ்விடங்களில் வாஸம் செய்வோர்.

இயற்கைப் பகைவனாக இருந்ததனால், வஞ்சனையினால் பார்ப்பனர்கள் அந்த இராமனைக் கொன்றுவிட்டார்களென்றும் பரோபகாரியாக இருந்த இராமனிடத்தில் பொது மக்களுக்கிருந்த அன்பினால் அவனுக்கு ஒரு கோயில் ஒன்றமைத்து அதில் குடிவைத்து பூசித்து வருவதாகவும் சொல்லுகிறார்கள். எவ்வளவு கொடிய பிரம்ம ரக்ஷஸ் (பிராமணப் பிசாசு) ஆனாலும் இந்த இராமனுடைய சன்னிதியில் போய் பிரார்த்தித்தால் அது அக்கணமே ஒழிந்துபோம்.

ஆனால் இந்த இராமன் உயிரோடிருக்கும்போது ஒரு பிராமணக்குடும்பத்துக்கு அடிமையாயிருந்தமையால் இப்போதும் அக்குடும்பத்தாரில் யாரேனும் ஒரு சீட்டெழுதி அனுப்பினால் அந்தக் கட்டளையை மீறி இராமனுடைய சன்னிதியில் ஒன்றும் நடைபெறாது. இது எனது அனுபவம். இதனால் அடிமைத் தனமும் அதனிடத்திலுள்ள நம்பிக்கையும் எவ்வளவு வன்மையுடையது என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

நான் வேண்டிக்கொள்வது யாதெனில் பார்ப்பனரால் ஏற்படுத்தப்பட்ட நான்கு வருணங்களுக்கும் மனு முதலியோரின் சட்டத்திற்கும் நாம் கீழ்ப்படிய வேண்டியதில்லை. பார்ப்பனருக்கும், வெள்ளைக்காரர்களுக்கும் இருக்கிற சம்மந்தம் கூட நமக்கும் பார்ப்பனர்களுக்கும் கிடையாது. * இவ்விரு வகுப்பார்களின் மூதாதைகள்

---

* ஆனால் வெள்ளைக்காரர்களுக்கும் நமக்கும் மத ஒற்றுமை உண்டு. இதின்து மதம், பண்டைக்காலத்து புத்தர் மதமாகும். புத்தர் பண்டைக் காலத்து தமிழர்களாகிய சாம்மியவாதிளாகிய (தமிழ்த் தலைவருடைய) மதத்தைக் கையாண்டவர். (இது சித்த மார்க்கம் ஞான மார்க்கம் என்று இருவகைப்படும்.) தலைவர்கள், விஸ்வாமித்திரன், புத்தர், அர்ஹந்த முனிவர்களாவார்கள். முக்கியர்கள்.

முற்காலத்தில் ஒரே இனத்தைச் சார்ந்தவர்களும் மத்திய ஆசியாவில் குடியிருந்தவர்களும் என்று சரித்திரம் கூறுவதால் இவ்விரு இனத்தாரும் இரத்த சம்பந்தம் உள்ளவர்களென்பது மறுக்கமுடியாது. ஆனால் இச்சம்பந்தம் இவர்களுடைய சிநேகத்தால் குரங்குப் பட்டத்தையும் பகையால் இராட்சதப் பட்டத்தையும் அடைந்த நம்மவர்களுக்கில்லை. சில காலமாக நமது குரங்குப்பட்டத்தை எடுத்துவிட்டுச் சூத்திரப்பட்டத்தைத்தந்தார்கள். அதை ஏற்றுக்கொண்டதனால் இக்கதியை அடைந்தோம். ஆதலால் இந்த பார்ப்பனருடைய யாகம் உயிர்களைப் பதைக்கக் கொல்லுகிற ஒரு சடங்கு முதலிய யாகங்களுக்குத் தடையாகிய ஜீவகாருண்ய ஒழுக்கத்தைப் போதித்து வந்த நமது மூதாதைகளின் கொள்கைளைப் பின்பற்றி ஒழுகுவோம். இவர்களின் தீச்செயல்களுக்கு உடந்தையாயிராத நம்மூதாதைகளை இராட்சதர் என்றும் பச்சை மாமிசமும் இரத்தமும்தான் அன்னோர்களின் உணவு என்றும் இவர்களது ஆபாசச் சுவடிகளில் எழுதி வைத்திருப்பது நமக்கு நம் மூதாதையரிடத்தில் வெறுப்பு உண்டு பண்ணும்படியான தந்திரமென்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நமது பகைவர்களாகிய பார்ப்பனர்களின் வேதத்தால் நமக்கு ஒரு பயனும் இல்லாவிடினும் இவர்கள் நம்மைத் தடை பண்ணின ஒரே குற்றத்திற்காகவும் இத்தகைய வேதத்தின் கருத்து இன்னதென்பதைத் தெரிந்துகொள்ளும் பொருட்டும் அதை நமது பிள்ளைகள் அவசியம் கற்கவேண்டும். எத்தகைய தடை நேரினும் அதை எதிர்த்து நாம் கொண்ட கருமத்தை நிறைவேற்றுவோம். பயனற்ற விஷயங்களில் கூட இந்த பார்ப்பனரை எதிர்த்தும் நமது மூதாதைகளின்

பழைய நல்லொழுக்கங்களைக் கைப்பற்றியும் ஒழுகினாலன்றி நாம் ஈடேறப்போவதில்லை.

இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஞான சூரியன் 1, அத்தியாயம் 3.

———)o(———

சுருதி ஸ்மிருதிகளில் தருமம் என்ற பெயரால் சொல்லப்பட்டவைகளுள் வருணதருமம் கூறி முடித்தோம். ஏனைய தருமங்களைப் பற்றியும் சில கூறுகிறோம். அவற்றுள் விவாஹமாவது:—

லோகேவ்ய வாயாமிஷமத்ய ஸேவா
நித்யாஸ்து ஜந்தோர் நஹிதத்ரசோதனா.''

(பாகவதம்)

(பொருள்) மைதுனம், (பெண்போகம்) மாமிச பக்ஷணம், கள் குடித்தல், இவை மனிதர்களுக்கு இயற்கைக் குணங்களாகையால் இவைகளைக் குறித்து விதி அவசியமில்லை.

தினந்தோறும் உண்ணவேண்டும் என்று விதித்தாலும் விதிக்காவிடினும் இயற்கையாகவே புசிப்பார்களன்றோ? ஆயினும் சில ஒழுங்குகள் செய்து ஒருவரம்பிற்குள் கட்டுப்படுத்த வேண்டுமென்பதைக் கருதி மணவினையானது எட்டுவிதமென்று ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டிருக்கிறது.

அவைகளைப் பிரமாணத்துடன் ஈண்டு கூறுவாம்.

## 1. பிராம்மண விவாகமும் அதன் இலக்கணமும்.



ப்ராஹ்மே விவாஹ அஹூய தீயதே
சக்த்யலங்க்ருதா;
தஜ்ஜ: புனாத்யுபதய: புருஷானேகவிம்ச திம்.

(பொருள்) தகுந்த வரனைத் தேடி அவனுக்குத் தன் பெண்ணைத் தன்னாலியன்றவாறு அணிகளால் அலங் கரித்து விதிப்படி விவாகம் செய்துகொடுத்தல் பிராம் மண விவாகம இந்த பெண் வயிற்றிற் பிறக்கிற புத்தி ரன் இருபத்தோரு தலைமுறையைப் பரிசுத்தம் பண்ணு வன்.

## 2. தெய்வ விவாகம், 3. ஆர்ஷ விவாகம் இரண்டின் இலக்கணங்கள்.

யஜ்ஞஸ்த ரித்விஜே தைல ஆதாயார்ஷஸ்து
கோத்வயம்:
சதுர்க்த சப்ரதமஜ: புனாத்யுத்தாஜஸ் சஷட்.
(யாஜ்ஞவல்கியர்)

(பொருள்) யாகம் செய்விக்கிற ருத்விக்களுக்குள். (புரோகிதர்களுள் ஒருவன்) கன்னிகையைக் கொடுப்பது தெய்வ விவாகம். வரனிடத்தில் இரண்டு பசுக்களைப் பெற் றுக்கொண்டு கன்னிகையைக் கொடுப்பது ஆர்ஷ விவா கம். "இந்த விவாகங்களிலிருந்து பிறக்கிற புத்திரர்கள் முறையே பதினான்கு அல்லது ஆறுதலை முறையைப் பரி சுத்தம் பண்ணுவார்கள்.

4. பிராஜாபத்ய விவாகமும் அதன் இலக்கணமும்.

ஸஹதர்மஸ்சர்யதாமித் யுக்த்வா யாதிய
தேர்த்திஸே;

ஸகாய: பாவயத்யாத்ய;ஷட்ஷட்வம்ஸ்யான்
ஸஹாத்மனு. (யாஜ்ஞவல்கியர்)

(பொருள்) பெண்ணை விரும்பிக் கேட்கிற வரனுக்குப் பெண்ணைக் கொடுப்பது பிராஜாபத்தியம். இதினுண்டாகும் புதல்வன் ஏழு தலைமுறையைப் பரிசுத்தமாக்குவான்.

5. ஆஸுர விவாகமும் அதன் இலக்கணமும்.

ஜ்ஞாதிப் யோத்ரவிணம் தத்வா கன்யாயாஸ்சைவ
சக்தித:;

கன்யாதானம் துஸ்வாச்சந்த் யாதாஸுரோதர்ம
. உச்யதே:— (யாக்ஞவல்கியர்)

(பொருள்) சுற்றத்தார்களுக்குப் பணம் கொடுத்து கன்னிகையைப் பெற்றுக்கொள்ளுதல் ஆசுர விவாகம்.

6. காந்தர்வ விவாகமும் அதன் இலக்கணமும்.

இச்சயான்யோன் யஸம்பந்த: கன்யாயாஸ்ச
வாஸ்யச;

காந்தர்வ: ஸவிதிர் ஜ்ஞேயோ மைதுன்ய:
காமஸம்பவ:.

(பொருள்) ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் விருப்பத்தினுல் கலந்துகொள்ளுதலே காந்தர்வ விவாகம்.

7. இராக்ஷஸ விவாகமும் அதன் இலக்கணமும்.

ஹத்வா, சித்வாச பித்வாச க்ரோசந்தீம் ருதநீம்
க்ருஹாத்;
ப்ரஸஹ்ய கன்யாஹரணம் ராக்ஷஸோ
விதிருச்யதே. (மனு)

(பொருள்) வீட்டிற்குள் புகுந்து அங்குள்ளவர்களைக் கொன்றும் பயமுறுத்தியும் பெண்ணைத் தூக்கிக்கொண்டு போவதே இராட்சத விவாகம்.

8. பைசாச விவாகமும் அதன் இலக்கணமும்,

ஸுப்தாம் மத்தாம் ப்ரமத்தாம் வா ரஹோ
யத்ரோபகச் சதி;
..................பைசாச: ப்ரதிகோஷ்டம. (மனு)

(பொருள்) தனிப்பட்ட விடத்தில் உறங்கிக்கொண்டிருக்கும்போதோ! மூர்ச்சித்து விழுந்திருக்கும்போதோ! புணர்ச்சி செய்தல் பைசாச விவாகம்.

இத்தகைய எண்வகை * மணங்களுள் விரும்பியவாறு ஏதேனும் ஒன்றின் முறையைப் பின்பற்றி நடந்து கொள்ளலாம். இதனால் அக்காலத்தில் நடந்துவந்த விவாக முறையை ஊகித்து உணருவதே நலம். இம் முறைகளைக் கண்டிக்க இந்துக்களுக்கு உரிமையில்லை. ''போதாயன'' னுடைய விதியையும் கேளுங்கள்.

---

* தமிழ் நூற்களில் களவியல் எனவும் கற்பியல் எனவும் இரண்டே.

த்ரீணி வர்ஷாண்யருதுமதீ காங்க்ஷேத பிதிர் சாஸனம்,
ததஸ் சதுர்த்தே மாஸேத் விந்தேத ஸத்ருசம் பதிம்,
அலப்ய மானே ஸத்ருசே குணஹீனம் ஸமாச்ரயேத்-
(போதாயனர்)

(பொருள்) ருதுமதியான கன்னிகையானவள் ஃ மூன்று வருஷங்கள் வரையிலும் பிதாவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். பிறகு தானாகவே தக்க வரனைத் தேடியடையலாம். தன் மனதிற்கேற்ற வாறு வரன் கிடைக்காதவிடத்து எத்தகைய புருஷனையேனும் மணந்துகொள்ளலாம்.

உதவையாசன் தாதாரம் லபத ஏவ,
அதேச பர்த்தா பார்யாம்.

என்பன முதலிய வேத வாக்கியங்களிலும் இதே கருத்து அடங்கியிருக்கிறது. இக்காலத்திய பெண்மக்கள் இத்தகைய விதிகளை அறியாதவர்களாயிருப்பதும் "ஸ்த்ரீ சூத்ரௌ நாதீயேதாம்" என்ற விதியில் கல்வி பயில பெண்களுக்கு அதிகாரமில்லையென்று சொல்லியிருப்பதும் இந்த ஆண் மக்களின் அதிர்ஷ்டவசமென்றறியவேண்டும் இக்காலத்தில் நடைபெற்று வருகிற விவாஹ கருமங்களையும் அவைகளுக்குரிய மந்திர தந்திரங்களைக் குறித்தும் நன்றாக ஆராய்ச்சி செய்யவேண்டும். விரிக்கிற் பெருகும்.

---

ஃ இம்முறை உடற்கூறும் உடற்றொழிலும் நன்குணர்ந்தவர்களால் வகுத்தது. இதனால் உடல் வலிவு புத்தி கூர்மை முதலிய புதல்வரைப் பெறலாம். இல்லையேல் பலவகையிலும் கெடுதலே. (பிஞ்சில் பழுத்தது.)

நான்கு வருணத்தினரின் பெண்களையும் பிராம்ம ணன் விரும்பியவாறு மணமுடித்துக்கொள்ளலாம் என்று ஸ்மிருதிகளிலும் அங்ஙனமே நடந்து வந்திருப்பதைப் புராணங்களிலும் மலையாளத்தில் இப்போது நடந்து வருவதையும் பார்க்கலாம். மணப்பெண்ணால் அனுஷ் டிக்கத் தகுந்த கருமங்களுள் ஒன்று *"ஸபத்நீ பாத னம்" என்பதாகும். பதினாறாயிரத்தெட்டு பெண்களுக் குக் கணவனான கடவுளை ஃ அவனை வழிபடுகிற ஒரு வனை மணந்துகொள்ள நினைக்கிற கன்னிகை "ஆபிசா ரத்தி (சூனியம் முதலிய மந்திர வித்தையி)னாலேனும் தனது சக்களத்திகளை எதிர்த்து நிற்பதில் குற்றம் ஒன் றுமில்லை. * "ஆரோஹோரும்" துடைமீது ஏறு முதலிய வேத மந்திரங்களைக் கற்றுக்கொள்ளுகிற மாணாக் கன் குருவினிடத்தில் பணிவுடன் நடந்துகொள்ளுவானா னால் அது இக்காலத்திய அர்த்த ஞானமில்லாத (பொரு ளையுணராத) அத்தியயனத்தினால் உண்டான நன்மையே யாம். இத்தகைய மந்திரங்களும் அவைகளின் பொரு ளும் மற்றோரிடத்தில் தெளிவாக கூறப்படும்.

விவாஹேஷ்வன்ருதம் ப்ரூயாத்;

விவாக காலங்களில் பொய் சொல்லலாம் என்றும் விதியுள்ளது. புத்திரப் பேறில்லாமல் கணவன் இறந்து போன ஸ்திரீயானவள் புத்திரனை விரும்பினவளாய்த்

---

* இச்சொல்லிற்கு சக்களத்தியைத் துன்புறுத்தல் என்பது பொருளாகின்றது.

ஃ கிருஷ்ணன்.

* முதலாவது. இடையிலாவது ஆண் தன்மையிலதாயின்.

திருதாட்டிரனுடையவும் பாண்டுவினுடையவும் தாய்களைப் போல் நடந்துகொள்ளலாமென்றும் விதியிருக்கிறது.

அபுத்ரா குர்வனுஜ்ஞாதாதேவரம் புத்ரகாம்யயா;
ஸபிண்டம்வா ஸகோத்ரம் வாக்ருதாப்யக்தம்
ருதாவியாத் (யாக்ஞவல்கியர்)

(பொருள்)—தனது நாயகன் இறந்து விட்டால் அல்லது புத்திரனை உண்டுபண்ணத் தகுதியில்லாவிட்டால் புத்திரப்பேற்றை விரும்புகிற ஸ்திரீயானவள் பெரியோர்களின் * அனுமதியைப் பெற்று ருது காலத்தில் உடம்பில் நெய்யைப் பூசித் தன் கணவனது சகோதரன் அல்லது அந்தக்குலத்தில் யாரையேனும் புணர்ந்து கொள்ளலாம். இவ்விதம் "ஆகர்ப்பஸம்பவாத்" கருத்தரிக்கிறவரைக்கும் செய்துகொள்ளலாம். இதனால் கற்புக்கழிவில்லையென்றும் ஸ்மிருதி கூறுகின்றது. நாகரீகத்தின் முன்னணியில் நிற்கிற வகுப்பார்களுள் முதன்மையானவர்கள் என்று தங்கள் மூதாதைகளைப் புகழ்ந்து பேசுகிற பார்ப்பனரின் கூற்றையும், மேற்குறித்த பிராமண வாக்கியங்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள். இங்ஙனமிருக்க "வியபிசாரம்" என்று இவர்கள் கூறுவது எத்தகைய தீய ஒழுக்கத்தையோ? நாமறியோம். வியபிசாரத்திற்கும் பிராயச்சித்தம் விதித்திருக்கிறார்கள்.

---

* தமிழர்கள் இதனை முற்றும் அருவருப்பார்கள்- இதற்காகவே திண்டுக்கல்லையடுத்த சிறுமலையில் அவிசாரிக் கணவாயென்று ஒன்றுளது. அதில் அவிசாரியாய் போனவளை நிற்கவைத்துத் தள்ளிவிடுவது வழக்கம். இன்னும் அப்பெயர் வழங்கிவருகிறது.

ஹ்ருதாதிகாராம் மலிநாம் பிண்டமாத்ரோப
ஜிவினீம்;
பரிபூதாமத: சய்யாம் வாஸயேத் வ்யபிசாரிணீம்.
(யாக்ஞவல்கியர்)

(பொருள்)— வியபிசாரம் பண்ணினவளின் உரிமையை எடுத்துவிட்டு ஒரு உருண்டைச் சோறு மட்டும் கொடுத்து வெறுந்தரையில் படுக்கச் செய்யவேண்டும். இவ்விதம் ஒரு வருஷம் வரையில் செய்தால் குற்றமற்றவளாவாள். (இத்தகைய பிராயச்சித்தத்தினால் வியபிசார தோஷம் நீங்கும் என்ற நம்பிக்கையுள்ளவர்கள் கற்பைக் குறித்துக் கவலைப்படவேண்டியதில்லை)

அன்றியும் சுலபமான பிராயச்சித்தத்தினால் எத்தகைய குற்றமும் நீங்கிவிடுமென்று விதிக்கிற சமய நூற்கள் மனிதர்களுக்குத் தீமையையே பயப்பனவாம். இந்தப் பிரமாணங்களை நம்பி எண்ணிறந்த தீமைகளை ஒவ்வொருநாளும் செய்து வருகிறார்கள் என்பது நிச்சயம். கீதை மஹாத்மியம், பிரதோஷ மஹாத்மியம், ஏகாதசி மஹாத்மியம், காயத்திரீமஹாத்மியம் முதலிய புண்ணிய கருமங்களை விரித்துரைக்கிற புராணங்களில் எதைப்பார்த்தாலும் அவைகளில் ஒவ்வொன்றிலும் பார்ப்பனக்கொலை குருமனைவியைப் புணர்தல் முதலிய கொடும் பாவங்களைக் கூடப் போக்கடிக்க வல்லமையுள்ளதாகச் சொல்லப்படுகிறது. சில பண்டிதர்கள் இதை 'அர்த்தவாத' மென்று சொல்லுகிறார்கள். (பொய் என்பதற்கு அர்த்தவாத மென்ற பரிபாஷைச் சொல்லை உபயோகிக்கிறார்கள் போலும்.)

* நாள்தோறும் காயத்திரி மந்திரம் ஜபிக்கிறவன் எத்தகைய இழிதொழிற்களைச் செய்தாலும் அப்பாவங்கள் அவனை யணுகாது, முத்தியானது அவன் கைக்குள்ளிருக்கிறது. திருமால் கோயில் திருப்பணி செய்வோன் அளவிறந்தகாலம் விண்ணாட்டில் சுகமனுபவிப்பன். ௸ திருமால் திருவடிகளில் அர்ச்சிக்கிற ஒவ்வொரு பூவும் அர்ச்சகனைப் பத்தாயிர வருஷங்கள் விண்ணாட்டில் இருக்கச் செய்யும். ஆனால் மக்களின் பெருக்கத்தால் அங்கு இடமில்லாமற் போகாதது ஒன்றே பெருவியப்பிற்கு இடந்தருகின்றது. எல்லாப்பாவங்களையும்நாசம் பண்ணுகிற இத்தகைய பிரமாணங்களை நம்புவோர்கள் வியபிசாரம் பண்ணலாகாதா? கள் குடிக்கலாகாதா? எல்லாம் செய்யலாம் ஆனால் இவைகளை நம்பாத அறிவாளிகள்

---

* காயத்திரி ஜபம் செய்கின்றவன் எத்தகைய கெடுதியும் செய்யமாட்டான் என்று பொருள்; செய்தால் அதன் பயனை அனுபவிப்பான். ஆனால் அந்த மந்திரம் சூத்திரன் ஜபம் பண்ணலாகாதாம், காயத்திரியை உண்டுபண்ணினவன் அனாரியன். (சாம்மிய வாதி விசுவாமித்திரன்) இது எல்லோருக்கும் ஜபம் பண்ண உரிமையுள்ளது. இது அனாரியனது சொத்தம்.

௸ இப்படிப்பட்ட விஷயங்கள் புத்தக ரூபமாக எழுதியதாலல்லவோ சிவன், விஷ்ணு முதலிய ஆலயங்கள் பஞ்சமகாபாதகத்திற்கு மூலஸ்தானமானது, விபசாரங்களும் பொய்ப்புரட்டும் ஜயமடைவதற்கு கோவிலல்லவோ முக்கிய விடம். இவ்விடங்களை முஸல்மான் இடித்ததைப்பற்றி துக்கிக்கலாமா? கோவிலையும், கோவிலிலுள்ள கடவுளையும் துலுக்கன் அடிப்பதற்கு, கோவிலும், கோவில் கடவுளும் என்னகர்மம் செய்தது. கர்மபலன் தானே அனுபவிக்கும். காரணம்; கோவில் பார்ப்பனர்களுக்கும் அவர்களுடைய அன்பர்களுக்கும் ஐந்து வகையான பெரும் பாதகங்கள் செய்யும் ஓர் ஸ்தலமாகும்.

முற்கூறியவர்களின் சுவர்க்க வாசத்தை நரகவாசமென்றே கருதுவார்கள்.

விவாஹம் என்கிற முறையே இவர்கள் சமயத்தில் இடைக்காலத்தில் ஏற்பட்டுள்ளது. முற்காலங்களில் விலங்குகளைப்போலவே நடந்துவந்தார்கள்என்பது "வைனதேயன்" ஆதிதேயர் முதலிய பெயர்களினுல் வெளிப்படை. பிற்காலங்களில் பிதாவின் பெயரும் சேர்த்து குலத்தின் பெயரைக் கூறிவந்தார்கள். "இராகவன்" பார்க்கவன் முதலிய பெயர்கள் பிதாவின் வழியைக்குறிக்கும். வைனதேயன், ஆதி தேயன் முதலிய பெயர்கள் எதிர்மறையாக * மாதாவின் பெயரைக் குறித்தலால் அக்காலம் பிதாவைக்குறித்து அறிவில்லாதிருந்த காலம் என்று ஊகிக்க இடமிருக்கிறது. முற்காலத்தில் விபசாரத்தைக் குற்றமாகக்கருதவில்லையென்பது கீழ்க்காணும் ஆபஸ்தம்ப சூத்திரத்தினுல் தெளியலாம். ஒருவனுக்கு இருவர் தந்தைகள் இருந்தால் அவ்விருவர்களுக்கும் பிண்டம் போடும்போது செய்ய வேண்டிய விதிவருமாறு:—

யதி த்விபிதாஸ்யாதேகைகஸ்மின்
பிண்டேத்வெனத்வாவுபலக்ஷயேத். (ஆபஸ்தம்பர்)

(பொருள்) ஒருவனுக்கு இரண்டு தந்தைகளிருந்தால் ஒரு பிண்டத்திலேயே அவ்விருவர்களையும் குறிக்க வேண்டும். (பிண்டம் போடும்போது சொல்லவேண்டிய யேசத்வாமனு என்கிற மந்திரத்தை எதத்வாம் தாதென?

* இது பிரஹதாரணியக உபநிஷத்தில் மாதுர்வர்க்கம், பிதுர்வர்க்கம் என இரண்டு பிரிவாகவே கூறியுள்ளது.

யேசயுவாமனு என்றிவ்வாறு சொல்லவேண்டும் சிரார்த்த காலத்திய உபஸ்தான மந்திரம்) எழுந்து நின்று கீழ்க் குறித்தபடி சொல்ல வேண்டியது:

யன்மே மாதா பிப்ரமமாத, யச்சாரானனுவ்ரதம்;
தன்மே ரேத:
பிதாவ்ருங்க்த மாபூரன்யோபபதயதாம்; பித்ருப்ய
ஸ்வதா. விப்ய: ஸ்வதா.

(பொருள்) என் தாய் ஒழுக்கந் தவறிவிட்டாள். அவள் நியவழியில் ஒழுகினள். அந்த ரேதஸை (விரியத்தை) தந்தையே! தமதாக நினைத்துக்கொள்ளவேண்டும். (வியபிசாரத்தினல் பிறந்தவனாகிய நான் கொடுக்கிற இந்த பிண்டத்தைத் தன் மகனல் கொடுக்கப்படுகிறதென்று நினைத்து பெற்றுக்கொள்ள வேண்டுமென்பது பொருள்) இந்தப் பிரமாணத்தைப் பின்பற்றி இப்போதும் சிரார்த்தம் நடத்திவருகிறார்கள்.

முற்கூறியபடி நெய் தேய்த்துக்கொண்டு புணர்ச்சி செய்து புத்திரன் பிறந்தால் அவன் தாய்க்கே யுரியவன் என்று யாஜ்ஞவல்கியர் 'கூறுகிறார்.

அனேனவிதினு ஜாத: க்ஷேத்ரிண: ஸபவேத்ஸுத:

இங்கு 'க்ஷேத்ரி' என்ற சொல்லிற்கு நிலத்தின் சொந்தக்காரன் என்று பொருள். மக்களைப் பெறுதல் பயிர்த்தொழில் போன்றதால் தாயின் சரீரம் நிலமும் தந்தையின் விரியம் வித்தும் என்பர் வட நூலார். *

---

* அஸ்வமேதம் முதலிய யாகங்களைக் காண்க.

(1) இம்முறையை மகம்மது நபியும் தன் குரானில் கூறி யுள்ளார்.

இயற்கைக்கு முரணுகவே மனிதப் பெண்களையும் விலங்குகளோடு புணரச்செய்தல் முதலிய அருவருக்கத் தக்க காரியங்களும் கடவுள் வழிபாடாக அக்காலத்தில் நம்பி அங்ஙனம் செய்துவந்திருந்தனரென்பது நான்காவது அத்தியாயத்தில் விளக்கமாகக் கூறப்படும்.

இக்காலத்தில் இந்துக்களில் சிலர் அஹிம்ஸா பரமோதர்ம: கொல்லாமையே சிறந்த தருமம். இதுதான் வேதத்தின் கருத்து என்று கூறுகிறுர்கள். இவர்களின் கூற்றையும் சிறிது ஆராய்வோம்.

மனது முதலிய முக்கரணங்களினுலும் உயிர்களுக்குத் துன்பத்தை விளைவிக்காமல் உயிர் வாழவேண்டும்; என்ற உபதேச மொழியானது புத்த பகவானது திருவாக்கினின்றும் முதன்முதலாக வெளிப்பட்டது. பிற்காலத்திய இந்து மதத் தலைவர்கள் இந்த வாக்கியத்தைக் கற்றுக்கொண்டு இதுவும் தங்களுக்கென்று வாய்ப்பேச்சில் மட்டும் வைத்துக்கொண்டார்கள். ஆனுல் வங்காளிகள் இதை ஒப்புக்கொள்ளவே இல்லை. அவர்களில் நான்கு வருணத்தினரும் மாமிசத்தையும் மச்சத்தையும் உணவாகக் கொள்ளுகிறுர்கள். இந்து சமயப்பிரகாரம் சன்னியாசத்திற்கு உரிமையில்லாதவரும் ஆனுல் சன்னியாசி என்ற பெயரால் அறியப்படுபவருமான "சுவாமி விவேகானந்தா" சொல்லியிருப்பதைக் கேளுங்கள்.

"எனது ஆசான் (ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸா) காய்கறிகளையே உண்பவர். ஆயினும் அம்பிகைக்கு

நிவேதித்த மாமிசத்தையும் உண்டு வந்தார்கள். ஒரு உயிரைக் கொல்வது பாவந்தான், ஆனுல் ரசாயன முறைப்படி மனிதனுக்கு மரக்கறி உணவுமட்டும் போதாது. * இக்கால நிலைமைக்கு மனிதனுக்கு மாமிச உணவு அவசியமானது. உதவியற்ற சில ஆடுகளைக் கொல்வது தனது மனைவி மக்களைப் பகைவர்களிடத்திலிருந்து மீட்க முடியாமலிருப் பதுமாகிய இவ்விரண்டில் எது அதிக பாவமென்பதை ஆராயவேண்டும். உடலுழைப்பில்லாமல் உயிர்வாழுகிற சில உயர் குடிப்பிறந்தார் மாமிச உணவை விரும்பாவிடின் அவர்களுக்கு வேண்டாம். உடல் உழைப்பினுல் உயிர் வாழும்படியான நிலைமையில் உள்ளவர்கள் இந்த அஹிம்ஸா விரதத்தைப் பின்பற்றுவதானுல் சமுதாயத்திற்கு பெரிய கேடு விளையும்.

---

* இக்கூற்று விவேகானந்தருடைய மதம் மட்டுமல்ல. இந்துக்களுடைய யெல்லா முக்கிய நூற்களும் சொல்லும். மரக்கறி பதார்த்தம் வேண்டுமளவு கிடைக்கும் நாட்டில் மாம்ஸம், புசிப்பது மிக்க கெடுதி. அதிலும் ஜீவகாருண்ணியமே உருவாகச் சன்னியாசிகள் (துறவிகள்) செய்வது பெருங் குற்றம். அராபியா முதலிய நாட்டில் அவர்கள் கொலைபுரிந்துண்டாலும் அது குற்றமாக சொல்வதற்கில்லை. அந்நாட்டில் போதுமான மற்றுணவுகள் கிடைக்காததால். பர்மா, இந்தியா, சிலோன் முதலிய நாட்டு ஜனங்களும், இதற்கொத்த நாட்டு ஜனங்களும் ஜீவஹிம்சை செய்து உயிர் வாழ்வது பிசகென்றே கூறலாம். புத்திமான் பலசாலியாவதன்றி பலசாலி புத்திமானுவதல்ல. இது நன்ருக மற்றுள்ளோர் அறிய வேண்டும். ஆதலால் புலாலுண்வை விட்டு காயத்திரியும் ஜபம் பண்ணவேண்டும். புத்தமந்திரம், சித்த மந்திரம் என்கிற பஞ்சப்ரமேட்டி மந்திரத்தையும் அவ்வாறே ஜபம்பண்ணத்தகுந்தது. இதை விரிவாக மற்ருேரிடத்தில் கூறுகிறோம்.

இந்து மதத்தை நன்ருக ஆராய்ந்ததினுலேயே சிலர் இவ் விதம் சொல்ல நேர்ந்தது. இந்துக்களும் அவர்களின் தெய்வங்களும் மாமிச உணவையே விரும்புவதாகக் கீழ்க்காணும் மனுவின் வாக்கியங்களால் உணரக் கிடக்கின் றது.

''ப்ராணஸ்யான்னமிதம் ஸர்வம் ப்ரஜாபதிரகல் பயத்;
ஸ்தாவரம் ஜங்கமம் சைவ ஸர்வம் ப்ராணஸ்ய
போஜனம்.
சராணும்ன்னமசரா தம்ஸ்ட்ரிணுமப்யதம்ஷ்ட்ரிண:
அஹஸ்தாஸ்ச ஸ்ஹஸ்தாகாம் சூராணும் சைவபீரவ:
காத்தா துஷ்யத்ய தன்னுத்யான் ப்ராணிநோஹன்
யஹன்யபி;
தாத்ரைவ ஸ்ருஷ்டாஹ்யாத்யாஸ்ச ப்ராணிநோத்
தாரஎவ்ச

(பொருள்) சரம், அசரம் (அசையும் பொருள் அசையாப் பொருள்) ஆகிய இவ்வுலகு உயிர்களின் உண வின் பொருட்டு பிரம்ம தேவனுல் படைக்கப்பட்டிருக் கிறது. அசையா உயிர்கள் சர உயிர்களுக்கு உணவா வதுபோலவே கோரைப் பற்கள் இல்லாதவை அவைகளை யுடைய உயிர்களுக்கும் ஏழைகள் வலிமையுடையவர் களுக்கும் உணவாகையால் இவ்விதம் உண்பதனுல் பாவ முண்டாகமாட்டாது. ஏனெனின் உண்ணுகின்றனவும் உண்ணத்தக்கனவுமான உயிர்களை இதே கருத்துடன் தான் பிரம்மா படைத்தார்.

இந்த பிரமாணப்படிக்கு ஏழைகளைப் பலசாலிகள் கொன்ருர்களே ஒழிய தின்னுமலிருந்ததே அதிர்ஷ்ட வசம். தின்றிருப்பார்களாயின் கொலையானது மிதமிஞ்

சிப் பெருகியிருக்கும். புத்த பகவானுடைய கொள்கைக்கு விரோதமாகவே மாமிச உணவை யுண்ணுதவனுக்கு மனுவானவர் மறுமையில் தண்டனையும் விதித்திருக்கிருர்.

நியுக்தஸ்து யதான்யாயம் யோமாம்ஸம்
நாத்திமானவ;
ஸப்ரேத்ய பசுதாம்யாதி ஸய்பவா னேக்
விம்சதிம் (மனு)

(பொருள்)—சிரார்த்த காலங்களில் வரிக்கப்பட்ட மனிதன் மாமிசத்தை உண்ணுவிடின் இருபத்தொரு தடவை மிருகமாகப் பிறப்பான்.

இத்தகைய வாக்கியங்களைப் பிரமாணமாக ஒப்புக்கொள்ளுகின்றவர்களே அஹிம்ஸா தர்மம் வேதக் கருத்துகள் பல என்று கூறி அறிவிலிகளை மயக்குகிருர்கள்.

யாகங்களில் தேவதைகளுக்கு கள்ளும் ஊனுமே படைக்கவேண்டும். அதற்கு உதாஹரணம்:—

“ஜாமிவா ஏதத் யஜ்ஞஸ்ய க்ரியதே யகன்வஞ்செள புரோடாசெள,” புரோடாசம் மாத்திரம் உட்கொள்ளுவதால் யஜ்ஞ புருஷனுக்கு வயிற்றுவலி யுண்டாகிறது. அதை நிவர்த்திக்கும் பொருட்டு மத்தியில் * வபா ஹோமம் செய்யவேண்டும்.

* வபாயென்பது மனிதன் முதலிய வெல்லா ஜீவிகளுடைய சரீரத்தில் இடது பக்கத்தினுள்புறத்திலுள்ள ஓர் விதமான கொழுப்பு.

யஜ்ஞார்த்தம் பசவ: ஸ்ருஷ்டா: ஸ்வயமேவ
ஸ்வயம்புவா;
யஜ்ஞஸ்ய பூத்யை ஸர்வஸ்ய தஸ்மாத் யஜ்ஞே
வதோவத: (மனு)

(பொருள்) உயிர்களுடைய நன்மைக்கு ஏதுவாகிய யாகத்தின் பொருட்டு பிரம்மன் மிருகங்களைச் சிருஷ்டித்தான். (மனிதர்கள் மிருகங்களைக் கொன்று தேவர்களுக்குக் கொடுப்பதுதான் மிருகங்களைச் சிருஷ்டித்ததின் கருத்துப்போலும்.) அதனால் யாகத்தில் செய்யும் கொலை பாவமாகமாட்டாது.

கொலைத் தொழில் பாவத்தை உண்டாக்குமாயினும் யாகத்தின் பொருட்டுச் செய்யும் அத்தொழில் புண்ணியத்தையே பயக்கும் என்பது வைதிக மதம். கொல்லப்பட்ட பசுவின் அவயவங்களைத் தேவர்களுக்குச் சமர்ப்பிக்க வேண்டிய முறை கூறப்பட்டிருப்பதையும் கவனியுங்கள்.

ஹ்ருதயம், ஜிஹ்வா வக்ஷோ யக்ரித் வ்ருக்வயௌ ஸ்வயம்
தோருபே பார்சுவே ஸ்ரோணிர் குதத்ரிதீயமிதி தைவதானி;
தக்ஷிணம் தோஸ்ஸவ்யா ஸ்ரோணிர் குதத்ரிதீயமிதி
ஸௌவிஷ்ட
க்ருதானி; க்லோமானம் ப்லீஹாததம் தனிஷ்டு மத்யூத்னீம்
புரீனம்
மேதோ ஜாகனீமித்யுத்தபதி. (ஆபஸ்தம்ப ஸ்ரௌத சூத்ரம்,)

(பொருள்) ஈரல், நாக்கு, மார்பு, *யக்ருத், இரண்டு பக்கங்களிலும் உருண்டை வடிவாயிருக்கிற சதை, இடது

---

* இந்த ஸூத்திரத்திற்கு பொருள் தயானந்த சரஸ்வதி ("ஆர்ய சமாஜத்தை") கேட்டால் என்ன உத்தரவு சொல்லுமோ அறியேன். ஆனால் இன்று நாள் வரைக்கும் ஜனங்கள் அனுஷ்டித்துவந்த முறையை இங்கு வரைந்துள்ளேன்.

கை, இடது விலாப்பக்கம், வலது துடையின் மேற்பக்கம், புட்டத்தின் மூன்றிலொரு பங்கு இவ்வளவும் தேவர்களுக்காகவும்; வலது கை, இடது துடையின் மேற்புறம், புட்டத்தின் மூன்றிலொரு பங்கு இவைகள் ஸ்விஷ்டக்ருத் ஹோமத்தின்பொருட்டும் யக்ருத்தைப்போன்றதும், (1) திலகமென்ற பெயருள்ளதுமான மாமிசம், நுரையீரல், சிறு குடல், மடி கொழுப்பு, வால் இவைகளும் எடுக்க வேண்டும். (ஆபஸ்தம்ப சிரவுத சூத்திரம்.)

அவிசு பங்கிடும் முறை,

':அதாத: பசோர்விபக்திஸ்தஸ்ய விபாபகம் வக்ஷ்யாம்: ஹனூஸஜிஹ்வே ப்ரஸ்தோது: ஸ்யேனம் வக்ஷ உத்காது: கண்ட: காகுதர: ப்ரதிஹர்த்து: தக்ஷிணஸ்ரோணிர் ஹோது: ஸவ்யா ப்ராஹ்மண. தக்ஷீணம் ஸக்தி மைத்ராவருணஸ்ய ஸவ்யம் ப்ராஹ்ம ணச்சம்ஸின: தக்ஷிணம் பார்ஸ்வம் மாம்ஸமத்வர்யோ: ஸவ்யமுபகாத்ருணும் ஸவ்யாம்ஸ: ப்ரதிப்ரஸ்தாது: தக்ஷிணம் தோர்நேஷ்ட: ஸ்வயம்போது: தக்ஷிண ஊருரச்சாவாகஸ்ய ஸவ்ய ஆக்னீத்ரஸ்ய தக்ஷிணோ பாகுராத் ரேயஸ்ய ஸவ்யஸ்ஸதஸ்யஸ்ய ஸதம் சானூகஞ்ச க்ருஹபதே: தக்ஷிணௌபாதௌ க்ருஹபதே வ்ரதப் ரதஸ்ய ஓஷ்ட ஏதயோ ஸாதாரணோ பவதி தம் க்ருஹபதி ரேவ ப்ரசிம்ஷயாத் ஜாகனீம் பத்னீப்யோ ஹரந்தி தாம் ப்ராஹ்மணாயதத்யு: ஸ்கந்தாஸ்ச மணிகாஸ்திஸ்ரஸ்ச கீகஸா க்ராவஸ்துத: திஸ்ரஸ்சைவ கீகஸா அர்த்தஞ்ச வைகர்த்தஸ் யோன்னேது: அர்த்தஞ் சவைகர்த்தஸ்ய க்லோமாசகமிது: தத்ப்ராஹ்மணாயதத் யாத் யத்யப்ராஹ்மனஸ் ஸ்யாத்; சாரஸ¬ப்ரஹ்மண்யாயை ய்யஸ்வஸ்ஸைத்யாம் ப்ராஹ தஸ்யா ஜினமினி ஷர்வேஷாம் ஹோதுர்வா. (ஐதரேய ப்ராஹ்ம்ணம்).

(பொருள்) கொல்லப்பட்ட பசுவைப் பங்கிடும்வகை சொல்லப்படுகிறது. நாக்கு *ப்ரஸ்தோதாவிற்கும், பருந்தின் வடிவத்தையுடைய மார்பு *உத்காதாவிற்கும், கழுத்தும் முதுகிலிருக்கிற கொண்டையும் *ப்ரதிஹர்த்தாவிற்கும், வலது துடை *ஹோதாவிற்கும், இடது துடை *ப்ரம்மாவிற்கும், வலது துடையின் அடிப்பக்கம் *மைத்திராவருணனுக்கும், இடது பக்கம் *ப்ராம்மணாச் சம்சிக்கும், வலது விலாப்புறமும் வலது தோளும் *அத்வர்யுவிற்கும், இடது விலாப்புறம் *உபகாதாக்களுக்கும் இடது தோள் *ப்ரதிப்ரஸ்தாதாவிற்கும், வலது கை நேஷ்டாவிற்கும், இடது கை *போதாவிற்கும், வலது துடை *அச்சாவாகனுக்கும், இடது துடை *ஆக்னீத்ரனுக்கும், ௸ வலது கை ஆத்ரேயனுக்கும், ௸ இடது கை ஸதஸ்யனுக்கும், வலது விலாஎலும்பும் அலிதாடியும் *க்ருஹபதிக்கும், வலது கால் போஜன தாதாவாகிய *க்ருஹபதிக்கும், இடது கால் க்ருஹபதி மனைவிக்கும் பகிர்ந்து கொடுக்கவேண்டும். உதடு கணவனுக்கும் மனைவிக்கும் உரித்தானது. அதை க்ருஹபதி கையாலெடுத்து இது உன்னுடையது என்று சொல்லி மனைவிக்குக் கொடுக்கவேண்டும். வால் எஜமானனின் பத்தினிகளைச் சார்ந்தது. இவர்கள் இதை ஒரு பிராமணனுக்குக்

---

* இந்தக் குறிகளை இடப்பட்டவர்கள் ஒவ்வொரு புரோகிதர்களென்று அறிந்துகொள்க. யாகத்தில் மேற்கூறிய பெயர்களாகும்.

௸ கை, பாஹு என்று தனித்தனி சொல்வதால், ஒன்று மேல்பாகமும் மற்றது அடிபாகமும் என்று சாயணாச்சாரியர் கூறுகிறார்.

* இந்த அடையாளமிட்ட சொற்களெல்லாம் புரோகிதர்களின் பெயரையே குறிக்கும்.

கொடுக்கக் கடவர். வலது தோளிலுள்ள மாமிசமும் மணியைப்போலிருக்கிற மாமிசமும் விலாப்புறத்தில் மூன்று பிரிவுகளாயிருக்கிற கிகஸமும் * க்ராவஸ்துத்திற்கும், இடது தோளிலுள்ள மாமிசமும் வைகர்த்தமென்கிற மாமிசத்தில் பாதியும் * உன்னேதாவிற்கும், வைகர்த்தத்தின் மற்றொரு பாதியும் க்லோமா என்கிற மாமிசமும் * சமிதாவிற்கும் பகிர்ந்து கொடுக்கவேண்டும். ஆனால் இந்த * சமிதா பிராமணரல்லாத ஒருவனால் யாருக்கேனும் ஒரு (1) பிராமணனுக்கே கொடுத்துவிடவேண்டும். தலை ¶ சுப்பிரமணியனைச் சார்ந்தது. தோலை (2) சுத்தியை உச்சரித்த பிராமணனுக்குக் கொடுக்கவேண்டும். இடை எல்லோரும் பகிர்ந்து கொள்ளலாம். அல்லது ஹோதா தனியாகவோ எடுத்துக்கொள்ளலாம். (3)

ஆண்டுதோறும் பசு யாகம் செய்யவேண்டும்; என்ற விதியின் கருத்து இத்தன்மையதென்று வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

---

(1) நோச்சிஷ்டம் நஹவிஷ்க்ருதம் (யாகசேஷமாகிய அவிசைச் சூத்திரனுக்குக் கொடுக்கலாகாது) என்கிற மனுவின் வாக்கு இக்கருத்திற்கு ஒத்திருக்கிறது.

(2) பசுக்கொலை செய்வதாகத் துருக்கர்களிடம் சண்டை தொடுக்கும் ஆரியர்கள் இத்தகைய வேதவாக்கியங்களை உணர்ந்திருந்தால் கலகத்திற்கு இடமுண்டாகயாட்டாது.

(3) ஆமாம் ஐயரே, யாகத்தில் கொலையுண்ட பசு, ஆடு, மனிதன் முதலிய பிராணிகளை உயிர் கொடுத்து அனுப்புவது வழக்கம். எங்களுடைய ரிஷிகளெல்லாம் வல்லவர் என்று சொல்லுகிறீர்கள். இப்படி பங்கு போட்டு சாப்பிட்டால் எதை யெழுப்புவது தெரியவில்லையே.

"மாம்ஸியந்தி ஹ்வா அக்னயோஜுஹ்வதோ யஜமானஸ்யதே யஜமானமேவத்யாயந்தி; யஜமானம் ஸங்கல்ப்யந்தி; பசந்திஹ்வா அன்யேஷ்வக்னிஷுவ்ருதா மாம்ஸ ; அதைதேஷாம் நான்யாமாம் ஸாசா வித்யதே யஸ்ய சைதே பவந்தி தம்ததோ நானீஜானம் பசுனு ஸம்வத்ஸரோவ்ய தீயாத் ஆயுஷ்யோஹ்வா அஸ்யைஷ ஆத்ம நிஷ்க்ரயண:

(பொருள்) மாமிச யாகம் பண்ணுத எஜமானனின் அக்நி எப்பேரதும் மாமிசத்தையே விரும்பிக்கொண்டிருக்கின்றன. இவனையே தின்றுவிடலாமா; என்றும் நினைக்கின்றன. இவன் தினந்தோறும் மாமிசத்தைச் சமைத்து உண்கிருனுதலால் இவனுக்கும் சமையல் அக்னிக்கும் மாமிசம் கிடைக்கிறது. யாகம் செய்கிற காலம் தவிர எங்களுக்கு மாமிசம் கிடையாது. அதுவும் அவ்வக்காலங்களில் இப்பாவி தருகின்ருனில்லை. என்று இவ்விதமாக அக்கினிகள் நினைப்பதனுல் தன் ஆயுள் விருத்திக்குக் காரணமான மாமிச யாகத்தை ஆஹிதாக்நி (கிருகஸ்தன்)யானவன் ஆண்டுதோறும் செய்யக் கடவன்.

இதே கருத்தை "ப்ரதி ஸம்வத்ஸரம் ஸோம: பசு; ப்ரத்யயனம் ததா;" என்னும் வாக்கியத்தால் "யாக்ஞவல்கியரும்" வெளியிடுகிருர். "சயனகர்ம"த்திற்குரிய கட்டிடத்திற்கு செங்கற்களைச் சேர்த்து கட்டும்போது தவளைகளையும் மரவட்டைகளையும் கொன்று பசையை எடுத்துக் கட்டும்படிச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் கொலையே பிரதானமாகவுடைய யாகமே சுவர்க்கமென்னும் மாடிமேல் ஏறுவதற்கு ஏணியாகும். இத்தகைய நூறு யாகங்களைச் செய்தவன் இந்திரப் பட்டத்தை

அடைந்து தேவர்களுக்குத் தலைவனானவன். அங்குள்ள அப்சரஸ்திரீகள் இவனிடத்தில் வியபிசாரத்திற்கு அனுமதிச்சீட்டு பெற்றுக்கொண்டு பூலோகத்திற்கு வந்து யாகஞ் செய்கிறவர்களை மயக்கி இடையூறு செய்கிறார்களாம். இத்தகைய ஒரு யாகத்தின் காட்சியை முதன் முதலாகப் பார்த்த புத்த பகவான் கருணைமேலிட்டு அந்த யாகத்தைத் தடுத்து கர்த்தாவுக்கு நற்புத்தி புகட்டி ஆட்கொண்ட கதை சரித்திரப் பிரசித்தம்.

குசா: சாகம் பயோ மத்ஸ்யா: கந்தம் புஷ்பம்
ததி க்ஷிதி;
மாம்ஸம் சய்யாஸனன் தான்யம் ப்ரத்யாக்யேயம்
நவாரிச.

(பொருள்) தருப்பை, காய் கறி, பால், மீன் நறுமண வகைகள் பூ, தயிர், பூமி, இறைச்சி, படுக்கை, ஆசன வகைகள் இவைகளைத் தானமாகக் கொடுத்தால் பிராமணன் வேண்டாமென்று மறுத்துக் கூறலாகாது.

நான்கு வேதங்களும் தெரிந்த ஒரு பிராமணன் அதிதியாக வீட்டிற்கு வந்தால் அவனுக்கு விருந்து செய்யவேண்டிய முறையை யாக்ஞவல்கியர் கூறுவது வருமாறு:—

மஹோக்ஷம் லா மஹாஜம் வாஸ்ரோத்ரியாயோப
கல்பயேத்
ஸத்க்ரியா, ஸேவனம் ஸ்வாதுபோஜனம்
ஸூன்ருதம் வச:

(பொருள்):—ஒரு பெரிய எருதையேனும் அது கிடைக்காத விடத்தில் கொழுத்த வெள்ளாட்டையே

னும் கொன்று சுரோத்திரிய (வேதமறிந்த பார்ப்பனன்) னுக்கு விருந்து செய்யவேண்டும். இன் சொற்களால் அவனை மகிழ்விக்கவேண்டும்.

(மற்ற அவயவங்களைப்போலவே வயிறும் பெரிதாயிருக்குமென்ற காரணத்தினல் கொழுத்த மிருகத்தைக் குறிப்பிடுகிருர்போலும்) இத்தகைய சுரோத்திரியனைச் சக்கிரவர்த்தியாயினும் எழுந்து வணங்கவேண்டும்.

உணவின் பாகுபாடு கூறுமிடத்து "க்ரவ்யாத தாத யூஹாதி (ஊனைத் தின்று உயிர் வாழுகின்ற பிராணிகள்) உண்ணத்தகாதன; என்று கூறிவிட்டு உண்ணத்தக்கன வற்றைக் கூறுவதையும் கவனியுங்கள்.

பக்ஷயா பஞ்சநகா ஸேதா கோதா கச்சபசல்யகா
சசஸ்ச மக்ஸ்யேஷ்வரிஹி சிம்ஹதுண்டாக
ரோஹிதா.

(பொருள்)—உடும்பு, காண்டாமிருகம், ஆமை, முட் பன்றி, முயல் இவைகளும் சிங்கமத்சயம் முதலிய மீன் வகைகளும் உண்ணத்தக்கனவாம். இந்த உணவு தேவர்களோடு நிற்கவில்லை. பிதிர்க்களுக்கும் மாமிசம் வேண்டுமாம். ஒருவன் செத்தபின் கூட அவனால் மிருகங்களுக்கு துன்பம் ஒழிந்தபாடில்லை.

ஹவிஷ்யானேன வை மாஸம் பாயசேனது வத்ஸாம்;
மாத்ஸ்யஹாரிண ஔரப் சாகுனச் சாகபார்ஷதை:
ஐணரௌரவவாராஹசானர் மாப்ஸர்யதாக்ரமம்:
மாம்ஸவ்ருத்யாஹி துஷ்யந்தி தத்தைரிஹ
பிதாமஹைஹ:

(பொருள்)—சாதாரண அவிசினல் ஒரு மாதமும் பாயசத்தினுல் ஒரு வருஷமும் பிதிர்க்கள் திருப்தியடைகிறுர்கள். மீன், மான், ஆடு, குருவி, வெள்ளாடு, ப்ருஷத் (ஒரு வகை மான்), கிருஷ்ண மிருகத்தி, வெள்ளையாட்டின் கன்று, குரு (ஒரு வகைமான்), பன்றி, முயல் இவைகளின் மாமிசத்தினுல் மேற்குறித்த ஒரு வருஷத்தோடு முறையே ஒவ்வொரு மாதகாலம் அதிகமாக பிதிர்க்கள் திருப்தியடைகின்றனர்.

பிதிர்க்களின் அதிக மகிழ்ச்சிக்கு ஏதுவான சில உணவுப் பொருட்கள் வருமாறு:—

கட்காயிஷம் மஹாசல்கம் மது முன்யன்னமேவச;
லோஹாமிஷம் காலசாகம் மாம்ஸம் வார்த்ராண
ஸஸ்யச.

(பொருள்)— காண்டாமிருகம், மகாசல்கம் என்னும் மீன் இந்த மாமிசங்களும் தேன், செந்நெல் இவையும் செம்மறியாடு, முதிர்ந்த வெள்ளாடு இவைகளின் இறைச்சியும் பிதிர்க்களுக்கு அதிக மகிழ்ச்சியைத் தரக்கூடியவை.

காலசாகம் மஹாசல்கா: கட்கலோக மிஷன்மது;
ஆனக்த்யாயைவ கல்பக்தே முன்யன்னுனிச ஸர்வச:

(பொருள்)— வாளை முதலிய மீன்களும் காண்டாமிருகம் சிவந்த நிறமுடைய ஆடு இவைகளின் இறைச்சியும் செந்நெல் முதலிய ரிஷிகளின் ஆகாரமும் பிதிர்க்களுக்கு திருப்தியை உண்டுபண்ணத்தக்கன.

வேதத்திலும்

ஏதத்வை பரமமன்னாத்யம் யன்மாம்ஸம்

இவை முதலிய வாக்கியங்கள் காணப்படுகின்றன.

மாம்ஸாத மாம்ஸம் மாம்ஸேன ஸம்ப்ருதத்வாத்
விசேஷத;

(பொருள்) மாமிசம் தின்கிற பிராணிகளின் மாமிசம் மாமிசத்தினாலேயே வளர்க்கப்படுவதால் அவசியம் தின்னத்தக்கது; என்பது ஆயுர்வேத வைத்தியர்களின் கூற்று. இதை ஸ்மிருதிகளும் அங்கிகரிக்கின்றனபோலும்.

இவ்விதமாக இவர்களும் இவர்களின் தேவதைகளும் தங்கள் உணவுக்காகவே நாள்தோறும் எண்ணிறந்த பல வகைப்பட்ட உயிர்களைக் கொன்றுகொண்டிருக்கிற காலத்தில் அஹி ஸை கொல்லாமை விரதத்தின் கருத்து என்பனம் இவர்கள் மனதிற்பதியும். இதனால் அஹிம்ஸா பரமோ தர்ம: என்னும் வாக்கியமானது இவர்களுக்கு உரியதல்லவென்பதும் ஆன்றோர்களின் அனுபவ வாக்கியமென்றும் இந்து சமயத்தைக் கொலைச் சமயமென்று நன்றாய் அறிந்து அதனின்றும் விலக்கியவர்களே இவ்விரதத்தை அனுட்டிக்க அதிகாரிகள் என்பதுதான் இத்திருமந்திரத்தை உபதேசித்த புத்த பகவானின் கருத்தென்பது நன்றாக அறியவேண்டும். ¶

---

¶ இக்காலத்தில் பௌத்தர்கள் மாமிசம் சாப்பிடுவதேன் என்ற கேள்விக்கு இடமுண்டு. புத்தர்களை இந்திய நாட்டில் நின்று துரத்தி அடித்த சமயம் முறையாக புத்த மதத்தை பரப்ப முடியாமல் வந்ததுடன் நல்ல பழக்கம் சற்றேனும் அக்காலத்து சைனா, பர்மா சிலோன் முதலிய நாட்டில் கிடையாது. அவர்கள் கடைசியாக புத்தரை ஒதுக்குண்டு' தங்களது முன் பழக்கங்களை நடத்தி வந்தார்கள். இனி இந்திய நாட்டார் முன்போலவே சென்று சாம்மிய வாதம் உபதேசிக்கும்போது அத்தகைய தீய ஒழுக்கங்களை அவர்களிடத்திலிருந்து போக்க முடியும்.

ஆபிசார கருமம் (சூனியம் வைத்துப் பகைவனைக் கொல்லுதல்) கூடத் தருமமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

ச்யேனேனாபிசான் யஜேச;

பகைவனைக் கொல்ல விரும்புவோன் சியேன யாகத்தால் ஆபிசாரம் செய்யக் கடவன்.

இப்பெயர் வந்ததன் காரணமும் இதன் பயனும்:—
யதாவை ச்யேனோ நிபத்யாதத்தே ததாயம்
த்விஷந்தம் ப்ராத்ருவ்யம் நிபத்யாதத்தே ததாயம்
த்விஷந்தம் ப்ராத்ருவ்யம் நிபத்யாதத்தே''

(பொருள்)—பருந்தானது கோழி முதலிய ஏழைப் பிராணிகளைத் தூக்கிச் செல்வதுபோல் இந்த யாகமும் பகைவனை ஒழித்துவிடும் (மரணத்துக்கு தூக்கிக்கொண்டுபோகும்.)

இதற்கு எதிர்மறையாகப் புத்த பகவான் திருவாய் மலர்ந்தருளிய ''தருமபதம்'' என்னும் நூலின்கண் ஒரு வாக்கியம் இருப்பது வருமாறு:—

நஹிவேரேன வேரானி சம்மந்தீஹ குதாசன!
அவேரேனஹி ஸம்மந்தி ஏஸதம்மோ ஸனந்தனோ
(தருமபதம்)

(பொருள்)—பகையைப் பகைனால் வெல்லமுடியாது

* நட்பினாலேயே வெல்லமுடியும், இதுதான் என்றும் நிலைத்திருக்கிற தருமம்.

---

* மைத்திரி, மித்திரத் தன்மை, அதாவது நட்புரிமைக் குணம் இதன் உண்மை கண்டனுபவித்து உலகத்தாருக்கு அருள் புரிந்த கருணை மூர்த்தி பகவான் புத்தனன்றோ.

இவை முதலிய வாக்கியங்களால் புத்த பகவானது தருமோபதேசங்களுக்கும், பார்ப்பனரின் தரும நூலிற் கும், இரவிற்கும் பகலுக்கும் இருப்பதைப் போன்ற வேற்றுமை இருப்பதாகப் பெறப்பட்டது. இந்த ஸியேன யாகம் தருமமா ? அருதமமா? என்று சந்தேகித்த நவீன மீமாம்ஸகனுகிய கண்ட தேவன் வேத வாக்கியமானதால் தருமந்தான் என்று முடிவில் உறுதிப்படுத்துகிருர்.

இனி ஆகமங்களின் கருத்துக்கள்:—

இதுவும் தவிர சில உபாசனைகளின் ஆபாசங்களேயும் ஈண்டுக் கூறுகிறோம். அவற்றுள் காளிகா தேவியின் தியான சுலோகமும் பூஜை முறையும் கீழ்வருமாறு:—

ஸத்ய: ச்சின்னசிர: க்ருபாணமபயம் ஹஸ்தைர் வரம் பிப்ரதீம்
கோராஸ்யாம் சிரஸர்ஸ்ரஜா ஸுருசிராமுன் முக்த கேசாவலீம்;
ஸ்யாமாங்கீம் க்ருதமேகலாம் சவகரைர் தேவீம் பஜேகாளிகாம்.
(மந்த்ர மஹோததி)

(பொருள்)—அப்போது அறுத்தெடுத்த தலே, வால், அபயம், வரம் இவைகளேயுடையகைகளும் கழுத்தில் மாலேயாகவிளங்குகின்ற தலேகளின் வரிசையும் அவிழ்த்து விட்ட கூந்தலும் கடைவாயினின்றும் ஒழுகுகின்ற இரத் தப்பெருக்கும் சலங்களேத்தோடாக உடைய காதுகளும் சலத்தினது கைகளின் வரிசையே ஒட்டியாணமாக அணிந் திராநின்ற இடையையும் உடையகாளிகாதேவியை நான் வழிபடுகின்றேன். பின்னும் தேவியின் உருவத்தை வரு ணிப்பது:—

அஸ்மின்பீடே யஜேத்தேவீம் சிவரூப சவஸ்திதாம்;
மஹாகால ரதாஸக்தாம் சிவாபிர்திக்ஷு வேஷ்டி
தாம்.

(பொருள்)---சவரூபமாயிருக்கிற சிவனுடைய உடலை மிதித்துக்கொண்டிருப்பவளும் மஹாகாலனுடைய சம்போகத்தில் விருப்புடையவளும் பெண் நரிகளால் சூழப்பெற்றவளுமான தேவியைப்பீடத்தின் கண் ஆவாஹித்துப்பூஜிக்கவேண்டும். இங்ஙனம் பூஜித்தபின் மந்திரம் செபிக்கும் முறை—:

ஸுத்ருசோ மதனுவாஸம் பஸ்யன் ய:
ப்ரஜபேன்மனும்;
அயுதம் ஸோசிராதேவ வாக்பதே: ஸமதாமியாத்.

(பொருள்—ஒரு அழகிய பெண்ணின் குறியைப் பார்த்துக் கொண்டு பத்தாயிரம் மந்திர செபம் பண்ணுகிறவன் தேவ குருவுக்குச் சமனுவன். மந்திரம் ஜபிக்க வேண்டிய முறை மற்றென்று:—

திகம்பரோ முக்தகேச: ஸ்மசானஸ்தோ தியாமினி;
ஜபேத்யோ யுதமேலஸ்ய பவேயு: சர்வகாமனு:

(பொருள்)—இரவு சுடுகாட்டின் கண் நிர்வாணமாக இருந்துகொண்டு தலை மயிரை அவிழ்த்துவிட்டுப் பதினுயிரம் உருசெபிக்கிறவனுக்குக் கோரிய பலன் கைகூடும்.

சாவம் ஹ்ருதயமாருஹ்ய நிர்வாஸா: ப்ரேத பூகத:;
அர்க்கபுஷ்ப ஸஹஸ்ரேணுப்யக்தேன ஸ்வீயரேதஸா.
தேவிம் ய:பூஜயேத் பக்த்யா ஜபன்னே கைகசோமனும்
ஸோசிரேணைவ காலேன தரணீப்ரபுதாம் வ்ரஜேத்.
(மஹோததி)

சுடுகாட்டில் அம்மணமாகப் பிணத்தின் மார்பில் உட்கார்ந்துகொண்டு தனது வீரியத்தில் தோய்க்கப்பட்ட ஆயிரம்எருக்கம் பூக்களினல் ஒவ்வொரு தடவையும் மந்திரம்சொல்லித்தேவியைப் பூசிக்கிறவன் வெகு சீக்கிரத்தில் அரசனுவான். *

ரஜ:கிர்ணபகம் நார்யா த்யாயன்யோயுத மாஜபேத்:
ஸகவித்வேனரம் யேண ஜனுன் மோஹயதி த்ருவம்.

(பொருள்)—தூரமான பெண்ணின் இரத்தத்தோடு கூடிய பெண் குறியைத் தியானித்துக்கொண்டு பதினுயிரம் உரு செபிக்கிறவன் மதுரமான செய்யுட்களால் உலகத்தை மயக்குவன்.

......................சவல்ய ஹ்ருதி ஸம்ஸ்திதாம்;
மஹாகாலேனதேவேன மாரயுத்தம் ப்ரகுர் வதீம்,
தாம் த்யாயேத் ஸ்மேரவதனும் விதத்ஸுரதம் ஸவயம்.
ஜபேத் ஸஹஸ்ரமபிய: ஸசங்கரஸமோ பவேத்.

(பொருள்) பிணத்தின் மார்பில் இருந்து மஹா காலனைப்புணர்ந்து கொண்டிருப்பவளும் புன்சிரிப்போடு கூடிய முகத்தையுடையவளுமான தேவியைத் தியானித்துக்கொண்டு ஒரு பெண்ணுடன் சம்போகித்துக் கொண்டே ஆயிரம் உருவேனும் செபிக்கிறவன் சிவனுக்கு ஒப்பாவன்.

---

* விளம்பரத்தில் கண்ட (3) மூன்றுவது கேள்வியில் உற்பத்தி காலத்திற்கு முன்புள்ள நிலை எவ்வாறிருந்தது? மேற்கூறினவாறு, சைவம், வைதீகமதம், இவைகள் இருந்தது. (சைவமும், சாக்தமும், அல்லது தந்த்ரீக மதமும்) திருஞானசம்பந்தருக்கும் புத்தசமணருக்கும் முன் ஒன்றுபோலவேயிருந்தது.

பூனை, ஆடு, இவைகளின் எலும்பு, மயிர், தோல் இவைகளும் சதையும் அஷ்டமியன்று இரவு நடுச்சாமத்தில் பலி கொடுத்து மந்திரம் செபிக்கிறவனுக்கு மூன்றுலகமும் கிம்ப்படியும். பகலில் தேவிக்கு நிவேதித்த அவிசையுண்டும் இரவில் மைதுனம் பண்ணிக்கொண்டும் லக்ஷம் தடவை செபித்தால் அரசனுவன். எருமை முதலிய உயிர்களின் இரத்தத்தைத் தர்ப்பணம் செய்துகொண்டு மந்திரம் செபித்தால் எல்லாச் சித்திகளையும் அடைவன். * மஹோததி என்ற பெயரையுடைய இச்சுவடி முழுவதும் இத்தகைய ஆபாச வாக்கியங்களால் நிரப்பப்பட்டிருக்கிறது. அமாவாசையன்று நடு நிசியில் "வட யக்ஷிணி" மந்திரம் செபிக்கிறவனுல் அடையப்படுகிற சித்திகள் பின்வருமாறு.

"ஸ்ருணோதி நூபுராராவம் வக்த்ரீ கிவத்வலிம் தத:'
ஸ்ருத்வைவ ப்ரஜமேன் மந்த்ரம் வீதத்ராஸ ஸ்சதாம் ஸ்மரேத்.
தத: ப்ரத்யக்ஷதோ தேவீ மீக்ஷதே ஸுரசார்த்தினீம்;
தத: காமபூரணுத்ஸா ததாதிஷ்டானி மந்த்ரிணே."

(பொருள்)—மந்திரம் செபிக்கிறவனது காதில் முதலில் சிலம் பொலியும் பிறகு சங்கிதமும் கேட்கும். இவைகளைக் கேட்டுக்கொண்டே பயமில்லாமல் மந்திரத்தைச் செபிக்கவேண்டும். உடனே தேவியானவள் இவனைப்

---

* மஹோததி என்றது தந்திரநூற்களில் ஒன்று. இதற்கு மந்திர மகோததி என்று பெயர்.

முன்காலத்திய சைவம், இவைகளை உலகியோர் பொறுக்க முடியாததினுல் இரண்டு பெரும் மதங்கள் வேலை செய்ததினுல் சிறிது குறைந்தது. (அவைகள் சமண புத்தம்.)

புணர்ச்சி செய்ய விருப்புள்ளவளாய் நெருங்கி வருவள். அவளது கோரிக்கை நிறைவேறினதும் இவனுடைய விருப்பங்களையும் நிறைவேறச் செய்வள்.

உலக போகத்தையும் சத்துருசம்மாரததையும் விரும்பிச் செய்கின்ற இத்தகைய மந்திரங்கள் பலவுள. மிக இரகசியமென்று சொல்லியிருக்கிற மற்றொரு பூசாவிதியையும் கவனியுங்கள்.

கோபனீய: ப்ரயோகோத ப்ரோச்யதே ஸர்வஸித்தித:
பூதாஹே க்ருஷ்ணபக்ஷஸ்ய மத்யாராத்ரே கயோகனே.
ஸ்நாத்வா ரக்தாம்பரதரோ ரக்தமால்யானுலேபன:
ஆனீய பூஜயேந்நாரீம் சுன்னமஸ்தாஸ்வ ரூபிணீம்;
ஸுந்தரீம் யௌவனாக்ராந்தம் நரபஞ்சக காயினீம்;
ஸஸ்மிதாம் முக்தகபரீம் பூஷாதானப்ர தோஷிணீம்.
விவஸ்த்ராம் பூஜியித்வைனுபுதம் ப்ரஜபேன்மனும்;
........................கச்சேத்தாம் ப்ரஜபேன்மனும்.
அனேனவிதினு லக்ஷமீம் புத்ரான் பௌத்ரான யச:
ஸீகம்;
நாரீமாயுஸ்சிரம் தர்மமிஷ்டமன்யதவாப்னுபாத்
கிம்பஹுக்தேன வித்யாயா அஸயாவிஜ்ஞான மாத்ரத:
சாஸ்த்ரஜ்ஞானம் பாபநாச: ஸர்வஸௌக்யம்
பலேத்த்ருவம்.
உஷஸ்யுத்தாய சய்யாயா முபவிஷ்டோ ஜபேச்சதம்;
ஷண்மாஸாப்யந்தரே மந்த்ரீ கவித்வேன ஜயேத் கவிம்.

(பொருள்) மிகப் பிரயத்தனத்துடன் மறைத்து வைக்கத்தக்கதும் எல்லாச் சித்திகளையும் தரவல்லதுமான பிரயோகத்தைக் கேளுங்கள். கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி திதியன்று நடு இரவில் ஆகாசம் மேகத்தினல்

மறைந்து மிக இருட்டாயிருக்கும்போது நீராடிச்சிவப்பு சந்தனம் சிவந்த மாலை சிவந்த உடை இவைகளை அணிந்து ஒரு தனியிடத்தில் இருந்துகொண்டு இளமையும் அழகும் நிறைந்தும் ஐந்து மனிதர்களை புணர்ச்சி செய்யத் தக்க ஆற்றலைப் படைத்தவளும் அவிழ்த்துவிட்ட கூந்தலையும் புன்சிரிப்போடு கூடிய முகத்தையுமுடைய அவளுக்கு ஆடைகளும் அணிகளும் கொடுத்து மகிழ்ச்சியுண்டாக்கிப் பிறகு அவளுடைய உடைகளைக் களைந்து நிர்வாணமாகப் பூசிக்கவேண்டும். பிறகு அவளைப் புணர்ந்து கொண்டே பத்தாயிரம் உரு மந்திரம் செபிக்கவேண்டும். இவ்விதம் செய்து வருகிற மஹானுக்கு செல்வம், ஆயுள், புத்திரப்பேறு, சுகம், நல்ல மனைவி, முதலிய விரும்பிய பொருள் அனைத்தும் கைகூடும். சாஸ்திரங்களை உணரும் ஆற்றலும் உண்டாகும். பாவம் இவனை அணுகாது. நாள்தோறும் காலையில் எழுந்து நூறு உரு செபித்தால் ஆறு மாதங்களுக்குள் சுக்கிராசாரியனை விடச் சிறந்த கவியாவான்.

வாயினுற் சொல்லவும் காதினுல் கேட்கவும் தகாத இத்தகைய சொற்குவியல்களே இந்துக்களின் ‡ சமய நூற்கள். நிற்க "கௌடில்ய" னுடைய அர்த்த சாஸ்திரங்களைப் பார்த்தால் முற்காலத்திய ஒழுக்கங்கள் நன்கு புலப்படும். அக்காலத்து பகைவரை வெல்லுவதற்கு ஆயுதங்களைவிட † ஆபிசார முறையே அதிகமாகக் கை

---

‡ சமயங்களுக்கு முதனூலாகிய ஆகமம், தந்திர நூற்களாம். இவைகளையே மந்திர சாஸ்திரமென்பர்.

† ஆபிச்சாரமென்பது மாரணப் பிரயோகமென்க.

யாண்டு வந்தார்கள். இந்துக்களின் ஆட்சி முறையை முன்னே கூறியுள்ளோமே. இவர்களின் ஆட்சியில் நம்மவர்களின் நிலைமையை ஆராய்ந்து பார்க்கிற யார்தான் பிரிட்டிஷ் ஆட்சியை நிந்திப்பார்கள். மேற்கூறிய ஒழிவான மந்திரங்களையும், பூஜைகளையும் அனுஷ்டிக்கிற இந்துக்களின் காதில் "பௌத்தன்" என்ற சொல் விழுந்ததும் நிலவேம்பு கஷாயம் குடித்தவன் முகத்தை சுளிப்பது போல் சுளிக்கிறார்களே இது ஏன்? காமம், வெகுளி மயக்கம் இவைகளை ஒழித்தலும் கொல்லாமை என்கிற விரதமும் மோக்ஷத்துக்கு உரிய சாதனங்கள் என்று உபதேசித்த புத்த பகவானுடைய உபதேச வமுதம் பஞ்ச மஹா பாதகங்களே விரதமாகக் கொண்டு ஒழுகுகிற இந்தக் கயவர்களுக்குக் கைப்பாகத் தோற்றுவது இயற்கையே.

பார்ப்பனர்கள் நாள்தோறும் செபித்து வருகிற மந்திரங்களில் ஒன்று கீழ்க் கூறப்படுகின்றது. ¶ ஸுமித்ரிய ந ஆப ஓஷதய: ஸந்து துர்மித்ரியா ஸ்தஸ்மை ஸந்து யோஸ்மான் த்வேஷ்டியம் சவயம் த்விஷ்ம: (யெஜுர்வேதம்)

(பொருள்) தண்ணீர், தானிய வகைகள், பிராண வாயு முதலிய உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருட்கள் யாவும் எங்களுக்கு (பிராமணர்களுக்கு)

---

¶ இந்த மந்திரத்திற்கு தயானந்தர் அர்த்தம் புரிந்ததைக் கவனிக்கவும். "ஆரியாபி வினயம்" என்ற நூலைக் கவனியுங்கள். இதில் 100 வேதப் பாட்டுகள் உள்ளதில் அனேகம் பாட்டுகள் எங்களுக்கு விரோதமானவர்கள் நாசமடையட்டும் என்ற அர்த்தத்துக் கொப்பாக இருக்கும்.

தன்மையைப் பயக்குவனவாகவும் எங்களால் வெறுக்கப் படுகிற (பௌத்தர் முதலிய) மனிதர்களுக்கு தீமையைச் செய்வனவாகவும் ஆகவேண்டும். (தனது வார்த்தையாகிய) வேத ஸ்மிருதிக்கு இணங்கி நடக்காதவர்களுக்கு இவ்வுலகம் விஷமாகப் போகட்டும்.

யஜுர் வேதத்தில் பௌத்தர்களைக் கொல்வதற்குரிய மந்திரங்களும், சடங்குகளும் பல காணப்படுகின்றன.

உதாரணமாக ப்ரத்யுஷ்டம் ரக்ஷ: ப்ரத்யுஷ்டர்: அராதய இவை முதலிய மந்திரங்களைக் கவனியுங்கள். தங்கள் கோயிலில் மணியடிப்பதுங்கூட இராட்சதர்களைப் பயமுறுத்தும் பொருட்டாம். பல யாகச் சடங்குகளும் நிறைவேற்றும்போது சொல்லப்படுகின்ற மந்திரங்களின் பொருள் யாகத்திற்கு இடையூறு செய்கின்ற ¶ இராட்சதர்கள் நாசமடையட்டும் என்பதே. கொல்லாமை என்னும் மகா விரதத்தைக் கடைபிடித்தொழுகுகின்ற பௌத்தர்களதான் முற்காலங்களில் யாகங்களுக்கு இடையூறு செய்திருந்தனர். அது யாகம் செய்கிற இடத்திற்குச் சென்று கொலையின் கொடுமையும் அதனால் நேரும் பாதகங்களையும் விளங்கக் கூறி உபதேசித்ததே ஒழிய ஒருபோதும் இவர்களை எதிர்த்துப் போர் புரிந்ததாகத் தெரியவில்லை. புளுகுக் களஞ்சியமாகிய இராமாயணத்தில் யாகத்திற்கு இடையூறு செய்த ராட்சதனாகிய மாரீசன் இரத்தத்தைச் சிந்தி யாக பூமியைக் கெடுத்தானென்றும் இரத்தத்தையே குடிப்பதும் பச்சை இறைச்சி

---

¶ புத்தர்கள் எனக.

யைத் தின்பதும் இராட்சதர்களின் இயற்கையென்றும் சொல்லியிருப்பதிலுள்ள உண்மையை நீங்களே ஆராய்ந்தறிந்துகொள்ளுங்கள். ஆனால் இப்போது இக் கதைகள் புத்தரைச் சாற்றுகிறார்கள். சிலர் இவைகள் நடந்தது எவ்வாறெனின் வேதத்தில் சைவ மதத்தை ராக்ஷதர் மதம் என்று கூறியுள்ளார் அதற்குத் தலைவன் சிவன்; சிவன் யாகத்தை மறுத்ததுண்டு; இந்த ராமாயணக் கதை பண்டைக் காலத்தில் சைவரைக் கட்டாயமாகச் சாரும் ஆராய்ச்சி முறையால் அறிந்துகொள்ளுக.

ரிக் சம்ஹிதையில் † வதிர்ஹி தஸ்யும் தனினம் கனேன் இந்திர, தாங்கள் ஒருவராகவே வச்சிராயுதத்தினால் தஸ்யுக் கூட்டத்தை (பார்ப்பனரல்லாதாரை)க் கொன்று எங்கள் துன்பத்தை பொழித்தீரே என்று இவை முதலிய வாக்கியங்களால் இந்திரனைப் புகழ்ந்து கூறியிருப்பதிலிருந்தே அக்காலத்திய கொலைகார ஆரியர்கள் நம்மவர்களுக்குச் செய்த கொடுந் தீங்குகள் நன்கு புலனாகின்றன.

இவர்கள் பல தடவைகளிலும் அளவிறந்த புத்த மதத் துறவிகளை வெட்டிக் கொன்றிருப்பது கீழ்காணும் குறிப்புகளால் வெளிப்படையாகும். பிரொபசர் 'லக்ஷமி நரசு' வெகு நாட்கள் உழைத்து எழுதிய மதச்சரித்திரத்தில் இந்துக்களால் புத்தப் பிக்ஷுக்கள் கொல்லப்பட்ட விவரத்தை இங்ஙனம் கூறியிருக்கிறார்.

---

† (தனிமை) பணக்காரர்கள் என்பது பொருள். இதனால் அக்காலத்தில் நம்மவர்களுள் செல்வம் படைத்திருந்த பலரையும் அரசர்களையும் இந்த பார்ப்பனர்கள் வஞ்சித்துக் கொன்றிருப்பது வெளிப்படுகிறது. இதைப்போன்ற பல கதைகளும் வேதத்திற் காணலாம்.

"அனேக யாகங்களைச் செய்தவனும் தேவ பக்தனுமான 'புஷ்யமித்திரன்' என்னும் பெயரையுடைய அரசன் கி. மு. இரண்டாவது நூற்றாண்டில் பல்லாயிரக் கணக்கான * ஆராமம், அவைகளை எல்லாம் அழித்து அவைகளில் சத்தர்மப் பிரசாரம் (நல்லற நெறிகளை உபதேசித்து) செய்து வந்த தவச்சிரேஷ்டர்களாகிய லக்ஷக் கணக்கான புத்த பிக்ஷுக்களைக் கொலை செய்து முடுக்கினான்.

பின் ஒரு நூற்றாண்டுகள் கழிந்ததும் "சிராஸ்வதி"க்கு அரசனான "விக்கிரமாதித்திரன்" என்பானும் மற்றொரு அரசனான 'கானிஷ்கன்' என்பானும் மேற்கூறியவாறே பிக்ஷுக்களைக் கொல்வது அவர்களின் பர்ணசாலைகளை அழிப்பது அரச தருமமான வேட்டை என்றே நினைத்து நடத்திவந்தார்கள். சிவபக்தரான மிஹிரகுலன் என்பானும் இங்ஙனமே செய்து வந்தான் மேற்கு வங்காளத்திற்கு அரசனாயிருந்த 'சசாங்கன்' கி. பி. ஏழாவது நூற்றாண்டில் உயிர் வாழ்ந்திருந்தவன் விளையாட்டாகவே அனேக புத்த (1) விக்கிரஹங்களையும் துறவிகளையும் நாசம்பண்ணியும் இவ்விளையாட்டை நிறுத்த மனமின்றி புத்தபகவான் (2) பரிநிர்வாணம் அடைந்த போதி விருக்ஷத்தை (அரசமரம்) வேரோடு பறித்து எறிந்த பின்னரே அடங்கினனும்.

---

* புத்த பிக்ஷுக்களின் மடம். இது அழகிய வனங்களில் நடுவில் இருப்பதால் ஆராமம் என்ற பெயருடன் விளங்கியது.

(1) புத்த விக்கிரகத்தை எழுந்தருளப்பண்ணிய திருக்கோவில்.

(2) முத்தி.

காஷ்மீரத்தை ஆண்டுவந்த க்ஷேம குப்தன், *ஸ்ரீ ஹர்ஷன் இவ்விருவரும் புத்த பிக்ஷுக்களையும் அவர்களின் கோயில்களையும் அழித்துவந்தார்கள். 'மீமாம்ஸா' சாஸ்திர கர்த்தாவான (1) "குமாரிலபட்டன்" என்னும் பார்ப்பனனொருவனுடைய ஏவுதலின் பேரில் மலையாளத்திலுள்ள புத்த பிக்ஷுகள் அனைவரும் கொல்லப்பட்டும் கோயில்களும் மடங்களும் ஆடுமாடுகளை அறுக்கும் கொலைக் களங்களாக (காளி கோயில்) மாற்றப்பட்டும் போயின, "சுதன்வா" வென்னும் பெயருடைய அர

---

* ஸ்ரீ ஹர்ஷன் என்னும் பெயர் கொண்ட புத்தமத அரசனொருவன் இருந்தான். இரத்தினாவலி, நாகானந்தம், பிரியதர்சிகா முதலான பல நாடக நூற்களும் சுப்ரபாதஸ்தோத்ரம், அஷ்டமஹா ஸ்ரீ சைத்ய ஸமஸ்க்ரிதஸதோத்ரம் ஜாதகமாலா முதலிய புத்த சமய நூற்களும் இவன் இயற்றியிருக்கிறான். ஆகையினால் ஸ்ரீ அர்ஷன் என்னும் பெயருள்ள பலர் இருந்ததாகத் தெரிகிறது.

(1) இவன் புத்த சமயத்தில் பிக்ஷுவாய்ப் பல காலம் இருந்து பிறகு திரும்பிப் பார்ப்பனனாய் அவர்களைக் கொன்றவன். இவன் கதை சரித்திரப் பிரசித்தம். ஆதலால்தான் அந்தக்கடவுள் துலுக்கனை உண்டுபண்ணி இந்துக் கோயில்களையும், இந்து மதஸ்தரையும், வேட்டையாடுவதே தொழிலாகவேண்டிய மதத்தையும் உண்டு பண்ணி இந் நாட்டுக்கு விட்டது. இனி என்ன செய்வோம்.

தன்னை ஒருவன் துன்புறுத்தக் கூடாதென்ற எண்ணம் கொண்டவன் அவன் மற்றொருவனை துன்புறுத்தலாகாது. ஒரு வேளை தான் மற்றொருவனைத் துன்புறுத்துவானாகில், தன்னை மற்றொருவன் துன்புறுத்துங்காலையில் துக்கியாதிருக்கவேண்டும் சாம்மியாவாதம்' சாந்தமாக வரும்துன்பங்களை அனுபவித்து சும்மாயிருப்பதுதான் இனிமேல் சுகம். இக்காலம் வரைக்கும் சமண புத்த சன்னியாசிகள் தங்கள் கையினால் எதாகிலும் ஒரு ஆயுதத்தை எடுத்து சத்துருவை வெற்றி பெறப் போனதாக சரித்திரம் கிடைப்பது மிக துர்லபம்.

சன் சேதுமுதல் இமயமலை வரையிலுள்ள குடிகளில் யா ரேனும் ஒருவன் பௌத்தர்களைக் கொலை செய்யாமல் இருந்து வருவதாகத் தெரிந்தால் அக்கணமே அவனைக் கொன்றுவிடும்படிக் கட்டளையிட்டிருந்ததாகச் 'சங்கர விஜயம்' என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

புத்த பிக்ஷுக்கள் இருக்கும் இடங்களிலும் அவர் களின் கோயில்களிலும் ஒரு பயனையும் கருதாமல் பொழுது போக்கிற்காகப் போகிறவன்கூட நரகத்தை அடைவான் என்று 'பிருஹந்நாரதிய புராணம்' கூறுகின் றது. வங்க நாட்டிற்கென தனியாக ஒரு ஸ்மிருதி நூலை யியற்றிய 'சூலபாணி' என்னும் பார்ப்பனன் புத்தசமயத் தினன் ஒருவனைத் திடீரென்று பார்க்க நேரினும் அத னால் பாவஞ் சூழ்ந்துகொள்ளுமென்றும் அதைப் போக்கக் கடுமையான பிராயச்சித்தங்களும் விதித்திருக்கிறான். புத்த சமயிகள் தீய நெறியில் ஒழுகி வருபவராதலால் அவர்களைக் கொலை செய்யும்பொருட்டே பிராம்மண குல த்தில் விஷ்ணு பகவான் கல்க்கியென்னும் திருநாமத் தோடு அவதரிக்கப்போகிறார் என்று அநுபாகவத புரா ணம் கூறுகின்றது.

இக்காலத்திய இந்து சமயக் கோயில்களில் பெரும் பகுதியும் புத்தாலயங்களே. இந்தக் கோவில்களில் இருந்த புத்த விக்கிரகங்களை நாசம் செய்து சிவலிங்கப் பிரதிஷ்டையினாலும் மற்றும் வேற்றுமைப்படுத்தியதினா லும் இன்னும் ஸ்தூபிகளிலும் பிறவிடங்களிலும் புத்த விக்கிரகங்களில் சில அழியாமலிருப்பதே இதற்குச் சான்று. விசிஷ்டாத்வைத வைஷ்ணவ குருவான "இரா மானுஜர்" மைசூர் சமஸ்தானத்தில் "சிரமணவெளி

குளம்'' என்னும் க்ஷேத்திரத்திற்கு அருகாமையில் இருந்த எழுநூற்றிற்கு மேற்பட்ட ஜைனக் கோயில்களை அழித்து அந்தக் கோயில்களின் கற்களால் ஆற்றின் பாலம் கட்டுவித்த கதையும் சரித்திரத்தினால் விளங்கும். இராமானுஜரும் அவரின் சீடர்களும் இதோடு நில்லாமல் ஜைனர்களின் சமய நூற்களில் பலவற்றைக்கெடுத்தும் பல தங்களது சமயநூற்களாகத் திருத்திச் சுவாதீனம் பண்ணியும் இருக்கின்றனர்.

கொலை செய்ய வேண்டாம் என்று வருந்திக் கேட்கும் தருணத்தில் கொடியவர்களாகிய இந்துக்களால் அடிபட்டும் கொலையுண்டும் துன்புற்றிருந்தாலும் ஒரு காலத்தும் கொல்லாமை விரதத்தினின்றும் தவறாத புத்த பிக்ஷுக்களை இவர்கள் கொன்றிருப்பதோடு நில்லாமல் இந்தக்கொலைக்கு உதவி செய்யத் தங்கள் தெய்வத்தினிடத்தும் வேண்டிக்கொண்டிருக்கிறார்கள். அத்தகைய பலருள் ஒருவரான ''திருஞானசம்பந்தர்'' தமிழில் பாடியிருக்கிற பாடல்களில் சில கீழ் எடுத்துக் காட்டுகின்றோம். இவை ''மூவர் அடங்கன் முறை'' என்னும் நூலின்கண் இருப்பவைகளாம். அடங்கன் முறையோ நம்மவர்களால் நித்திய பாராயணம் பண்ணப்படுவதுமாம்.

''வேதவேள்வியை நிந்தனை செய்துழலாதமில்லிய
மணொடுதேரரை
வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே, பாதிமாதுடனாய
பரமனே
ஞாலநின்புழே மிகவேண்டுந் தென்னாலவாயி லுறையு
[மெம்மாதியே

வைதிகத்தின் வழியொழுகாதவக் கைதவம் முடைக்கரா
[மண்டோரை
யெய்திவாது செயத்திருவுள்ளமே மைதிகழ்தருமா
[மணிக் கண்டனே
ஞாலநின்புகழே மிகவேண்டுந் தென் ஆலவாயிலுறைய
[மெம்மாதியே.
அந்தணாளர் புரியு மருமறை, சிந்தை செய்யாவருகர்
திறங்களைச்
சிந்தவாது செயத்திருவுள்ளமே வெந்த நீறதணியும்
விகிர்தனே
ஞாலநின்புகழே மிகவேண்டுந் தென் ஆலவாயிலுறைய
[மெம்மாதியே.
வேட்டுவேள்வி செயும் பொருளைவிளி, மூட்டுச்சிந்தை
[முருட்ட மண்குண்டரை.
யோட்டிவாது செயத்திருவுள்ளமே, காட்டிலானையுரித்த
[வெங்கள்வனே
ஞாலநின்புகழே மிகவேண்டுந் தென் ஆலவாயிலுறைய
]மெமமாதியே

இவைபோன்ற செய்யுட்கள் பலவுள. இவையனைத்தும் சுடலைப் பொடி பூசுகிற தங்கள் தெய்வத்தினிடம் புத்த சமயிகளைக்கொலை செய்யப் போதிய வன்மையைத் தங்களுக்குத் தந்தருளும் படிப் பிரார்த்திப்பனவேயாம்.

முற்கூறிய அரசர்களையும் சமயத் தலைவர்களான பார்ப்பனர்களைப்போல இதே ஞானசம்பந்தரும் கன்னட காட்டினனாகிய ரிஷபதேவன் முதலிய பலரும் பௌத்தர்களையும் ஜைனர்களையும் கழுவேற்றியும் உலக்கையால் அடித்தும் மற்றும் பல சித்திர வதைகளாலும் கொன்றிருக்கின்றனர். இத்தகைய கொலைகாரப் பாவிகளாகிய

இவர்களைத் துலுக்கர் கொன்றதிலும் இவர்களின் பெண்களைச் சிறையெடுத்ததிலும் என்ன அதிசயமிருக்கிறது. இன்னும் எவ்வளவு துன்பங்கள் அனுபவித்த பிறகுதான் இந்தப்பாவம் இவர்களை விட்டொழியுமோ. ஆனால் "கொல்லா விரதத்தைக் கடைப்பிடித்தொழுகிய பௌத்தர்கள்" இவர்களுக்குச் செய்த தீமைகளைக் குறித்தும் சிறிது ஆராய்வோம்.

அதற்குரிய உதாரணங்கள் வருமாறு:—

பசுஸ் சேந்நிஹத்: ஸ்வர்க்கம் ஜ்யோதிஷ்டோ
மேப்ரயாஸ்யதி;
ஸ்வபிதா யஜமானேன தத்ர கஸ்மாந்ந ஹன்யதே?
யூபம் ச்சித்வா பசூன் ஹத்வாக்ருத்வா ருதிரகர்த்தமம்;
யத்யேவம் கம்யதே ஸ்வர்க்கே நாகே கேன கம்யதே?
அந்தே தமஸி மஜ்ஜந்தி பசுபிர்யே யஜந்திதே:
ஹிம்ஸா நாமபவேத் தர்மோ நபூதோ நபவிஷ்யதி.

பொருள் —ஜோதிஷ்டோம யாகத்தில் கொல்லப்படுகிற பசுசுவர்க்கத்தை யடைவது உண்மையானால் யாகம் செய்கிறவன் தன் தந்தையைக் கொன்று சுவர்க்கத்தை யடைவிக்காததன் காரணம் என்ன?

யூபம் (யாகத்தில் வதைக்கப்படுகிற பசுவைக் கட்டும் தூண்)உண்டுபண்ணிப் பசுக்களைக் கொன்று இரத்தச் சேற்றையுண்டுபண்ணுபவன் சுவர்க்கத்தை யடைவானாயின் நரகத்தை யடைபவன் யாவன்!

பசுவைக் கொன்று யாகத்தை நடத்துகிறவர்கள் இருள் சூழ்ந்த நரகத்தில் விழுவார்கள்; கொலையானது எக்காலத்தும் தருமமாகமாட்டாது.

இவ்வித யுக்தி வாதங்களால் இவர்களின் யாகத்தைமறுத்துவந்தது ஒன்றே பௌத்தர்கள் செய்த பிழையாகும். இதனால் இந்நாட்டினின்றும் அவர்களை ஓட்டியும் கொலை செய்தும் நாசம் பண்ணியதுடன் "நாஸ்திகோ வேத நிந்தக:" வேதத்தை நிந்திக்கிற பௌத்தன் ¶ நாஸ்திகனேயாம்; என்று புராணங்களிலும் இகழ்ச்சியாக எழுதி வைத்தார்கள்.

இந்த சனாதனதருமத்தின் உட்பிரிவுகளில் முக்கியமான தந்திர (ஆகமம்) சாஸ்திரங்களைப் பின்பற்றி ஒழுகுவோரையும் அவர்கள் அடைய விரும்பும் முத்தியின் முறையையும் சுருக்கமாகக் கூறிவிட்டு இவ்வத்தியாயத்தை முடித்து விடுகிறேன்.

சுடலைச் சாம்பலைப் பூசிக்கொள்ளுதல், எலும்புகளைக் கோத்து மாலையாக அணிதல், தலையோட்டில் உண்ணுதல் முதலிய சிவனுடைய ஒழுக்கங்களைப் பின்பற்றி வந்த சைவர்களை ஜைனர்கள் இழிவாகக் கருதினர். திருஞான சம்பந்தருக்கு முன்னிருந்த சைவர்கள் * நரபலி முதலிய கொடுந்தொழிற்களையும் இயற்றி வந்தனர். இதை அறிவதற்கு தந்திர(ஆகமம்) சாஸ்திரங்களும் ஜைன பௌத்தர்களின் நூற்களும் உதாரணங்களாயிருக்கின்றன. (இத்தகைய கொடிய ஒழுக்கங்கள் முத்தியைத் தருவன போலும்.) இக்காலத்திலும் கூடச்சைவ சமயத்தினர் என்று தங்களைச் சொல்லிக்கொள்ளுகிற சில சூத்திரரும் பூணூல் போட்டுக்கொண்டு குருக்கள் என்று சொல்லித்

---

¶ வேதத்தை நம்பாதவன் நாஸ்திகன்.

*சிறுத்தொண்டர் மகனைக் கொன்றருத்தியகதை உலகமறியும்.

திரிகின்ற சிலரும் தங்களுடைய வயிற்றை நிரப்பும் பொருட்டு ஏழைமக்களைத் துன்புறுத்துவது வழக்கமாயி ருக்கிறது. பார்ப்பனரல்லாதாரின் முன்னேற்றத்திற்குப் பார்ப்பனர் எப்படி தடையாயிருக்கிறார்களோ அப்படியே இந்தச் சைவர்களும் இந்து சமயச் சங்கிலியால் பிணிக்கப் பட்டிருக்கிற ஏழை மக்களின் முன்னேற்றத்தைத் தடுத்து வருவது தமிழ்நாட்டின்கண் அறிவாளிகளாயும் சுயநல மற்றவர்களாயுமிருக்கிறவர்களுள் ஒவ்வொருவரும் அறிந் தேயிருக்கிறார்கள். இவர்கள் அநாதிசைவர், ஆதிசைவர் அவாந்தர சைவர் என * மூன்று பிரிவினையுடையவர்கள், இவைகளின் வரலாறு:— தாங்கள் தக்ஷிணாமூர்த்தியின் குலத்தைச் சார்ந்தவர்கள் என்றும் அதனால் அநாதி சைவர்களென்றும் சிலர் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆதியில் சூத்திரர்களாயிருந்து பிறகு சிவ பூசைக்காகவே பூணூல் போட்டுக்கொண்டு குருக்கள் என்று பட்டப் பெயரும் சூட்டிக்கொண்டவரே ஆதிசைவர்கள் என்றும் கைலாசத்திலிருந்து பூவுலகில் சிவபூசை செய்யும்பொரு ட்டு சிவனால் அனுப்பப்பட்டவர்களே எங்களின் மூதா தைகள் அதனால் நாங்கள் ஆதி சைவர்கள் என்று தாங் களாகவும் சொல்லிக்கொள்பவர்கள் ஆதி சைவர்கள். "கள்ளன், மறவன், கனத்ததோர் அகம்படியன் மெல்ல மெல்லவந்து வெள்ளாளனான்" என்கிற பழமொழிக்கிண ங்க ஆதி சைவருடையவும் அநாதி சைவரினுடையவும் பொய்வலைக்குள்சிக்கி அவர்களுக்குப் பணம் கொடுத்து

---

* சைவர்களில் பல பிரிவினைகள் இருந்தாலும் அவைகளனைத் தும் இம்மூன்று பிரிவிற்குள்ளடங்கும்.

சிவதீக்ஷையும் சைவப் பட்டமும் பெற்றுக்கொண்டு தங்கள் குலத்தினரின் முகத்தில் கரியைத்தடவி அவர்களை வெறுத்துத்தள்ளுகிற மற்றொரு சாரார் அவாந்தர சைவர்கள்

இவர்களுக்கு இக்காலத்திய சமயநூற்கள் தேவாரம், திருவாசகம், முதலிய சில நூற்களேயாம். இவைகளுக்கு வைதிக சைவ சித்தாந்த சாஸ்திரங்களென்றும், சுத்தாத்துவித சைவ சித்தாந்தம், வைதிகசைவ சித்தாந்தம் வேதாகமோத்தம சைவசித்தாந்தமென்றும் மற்றும் பெயர் இவைகளின் உற்பத்தி காலமும் புத்த சமயம் இந்நாட்டை விட்டொழிந்த காலமும் ஏறக்குறைய ஒன்றேயாம். சில தாந்திரீக பக்தர்கள் பௌத்த ஜைனர்களைக் கொலை செய்ய உதவி செய்யும் படிக்கு சிவனைக் குறித்துக் கூறும் பிரார்த்தனைப் பதிகங்களும் மற்றும் இவற்றுள் அடங்கியிருக்கின்றன: இவைகளின் பழக்கம் ஆயிரத்தி ஒரு நூறுண்டு இருக்கலாமென்று சரித்திரக்காரர்கள் சொல்லுகிறார்கள். சில காலம் சென்றதும் இவைகளை ஒன்று சேர்த்து பன்னிரண்டு திருமுறைகள், "பதினான்கு சித்தாந்த சாஸ்திரங்கள்" எனப்பெயர் கொடுத்திருக்கிறார்கள். இதோடு சில நூற்கள் புதிதாக எழுதிச் சேர்த்துக் கொண்டு எனது சைவ மதம் அனாதி; என்று ஸ்தாபிக்கவும் சிலர் முயற்சி எடுத்திருக்கிறார்கள். ஜைன புராணங்கள் கூறுகிறபடியே 'பெரிய புராணம்' என்ற இவர்களுடைய நூலிலும் அறுபத்து மூன்று பக்தர்களின் அவதாரச்சிறப்பை எடுத்துரைக்கின்றது. இவ்வறுபத்துமூவரும் அடைந்த முத்தியைச் சைவர்கள் அனைவரும் கோருகின்றார்கள். இவ்வறுபத்துமூவர்களும் அடைந்தது மோக்ஷமானால், சிவதீக்ஷை முதலிய கருமங்களால் சைவர்களா

னதாகச் சரித்திரங்களால் தெரியவில்லை. மற்றும், பரம சிவனிடத்தில் வைத்த அன்பு ஒன்றே இவர்களுக்கு மோக்ஷ ஸாதனமாக நின்றது எனத் தெரிகின்றது.

கைலாசத்தை அடைதலே மோக்ஷம். அதற்குச் சாதனம் சிவலிங்க பூஜை. சிவலிங்கமென்பது ஆண் பெண் குறிகள் பொருந்தியிருப்பதுபோல் சிலையினால் செய்த விக்கிரகம். கோயில்களில் பிரதிஷ்டித்திருக்கிற இத்தகைய லிங்கத்தைத் தீண்டிப் பூசை பண்ண ஆதி சைவர்களுக்கே உரிமையுண்டு. ஆயினும் ஏனையோர்கள் பூசைக்குரிய பண்டங்களைச் சேகரித்து ஆதி சைவர்களுக்குக் கொடுத்தால் அவர்களின் சிபார்சையனுசரித்து பரமசிவன் மோக்ஷத்தையளிக்கச் சித்தமாயிருக்கிறார். ஆயினும் பணக்காரன்தான் சிவதீக்ஷை பெற்றுக்கொள்ள உரிமையுள்ளவன். வடநாட்டில் கங்கைக்கரையில் பிறந்த பிராமணன்தான் ஆசாரிய ஸ்தானத்திற்கு உத்தமன். இவை முதலிய வசனங்கள் ஆகமங்களில் காணப்படுகின்றன.

தேவாரம், திருவாசகம் முதலியவைகளைக் கற்றுக் கொடுக்கிற பாடசாலைகளில் மாணுக்கர்களுக்குக் கல்வியும் உணவும் இனமாக அளிக்கப்படுகின்றன. ஆனால் * சைவர்கள் தங்கள் இனத்துப் பிள்ளைகளைத்தான் சேர்

---

* இங்கு சைவர்கள் என்றது அவாந்தர சைவர்களில் ஒரு சாரார், பரம்பரைச் சைவ குலத்தில் பிறந்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் சில வகுப்பினரைக் குறிக்கிறது. இவர்கள் திருநெல்வேலி, மதுரை தஞ்சாவூர் முதலிய ஜில்லாக்களில் வசித்து வருகிற வேளாள வகுப்பைச் சேர்ந்த பிள்ளை செட்டியார் முதலிய பட்டப் பெயர்களை வைத்துக்கொண்டிருப்பவர்கள். கொண்டை கட்டி

ப்பார்கள். இத்தகைய பாடசாலைகளில் பெரும்பகுதியும் நாட்டுக்கோட்டை நகரத்தாரின் உதவியால்தான் நடைபெற்று வருகின்றன.

இச் சைவர்களுக்குச் சொந்தமென சில மடங்களும் அவைகளுக்கு ஏராளமான பொருள் வருவாயுள்ள சொத்துக்களும் உள. இவர்கள் ஏழை மக்களைத் துன்புறுத்தும் இயற்கையுடையவர்கள் என்று முன்னரே கூறியுள்ளோம். மடங்களின் நிலைமையோ பிறரைக் குறித்த மட்டில் பார்ப்பனத் துறவி மடங்களைவிடக் கஷ்டமாயிருக்கிறது. சிருங்ககிரி முதலிய பார்ப்பனச் சன்னியாசி மடங்களில் காவியுடையணிந்தோ மற்றோ ஒருவன் செல்வானானால் மனுஸ்மிருதிப்படி தண்டிக்க அவர்களுக்கு அதிகாரமிருந்தும் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பயந்து அங்ஙனம் செய்வதுமில்லை. இக்காலத்தின் நிலைமையை நோக்கி ஒரு வேளையேனும் உணவளித்தோ அளியாமலோ வந்தவனது உடலுக்குத் துன்பமில்லாதவண்ணம் விட்டுவிடுவார்கள் இவர்களோவென்றால் வந்தவன் தங்கள் குலத்தினன் என்று நன்றாய்த் தெரியாதமட்டும் ஒருவித உதவியும் செய்யமாட்டார்கள்.

எதிர்மறையாக ஒவ்வோர் காலங்களில் பல நாள் பட்டினியால் வாடிப் பருக்கைக்குப் பஞ்சாய்ப் பறந்து வந்த பஞ்சையினிடத்தில் மடத்திலுள்ள மல்லர்கள் கை

---

முதலியார்கள், தேசிகர்கள் முதலிய சிலரும் இத்தகையோர்களே. ஏனையோர் சமயம் முதலிய தீக்ஷைகளனைத்தும் பெற்றாலும் சைவனென்கிற பட்டப் பெயர் கிடையாது. ஜாதிச் சைவர்களில் தீக்ஷையில்லாத பலரும் உளர். ஆனாலும் சைவர்களே இக்கொடுமையை எவ்வாறு கூறுவது? கொடுமை! கொடுமை!!

கலந்து சண்டை புரிவதும் உண்டு. வந்தவன் பார்ப்பனத் துறவியாயினும் மடத்திலுள்ள இல்லறச் சீடர்களும் கூட ஐயா! பரதேசியாரே; என்றுதான் அழைப்பார்கள். இன்னும் சிலர் ஓய்ப் பரதேசி! என்றுதான் அழைப்பார்கள். ஆனால் இவர்களின் மடத்தில் துறவு பெற்றுக்கொண்ட தங்கள் இனத்தவர்களுக்குத் "தம்பிரான்" என்றுதான் பட்டம், மடாதிபதியைப் "பண்டாரச் சன்னிதி" என்பார்கள். அவரை எல்லோரும் வணங்கவேண்டும். இவருக்குக் கீழ் "கையேட்டுத் தம்பிரான்" என்ற அதிகாரி ஒருவர் உண்டு. துறவு பெற்றுக்கொள்ள விரும்புகிற சைவர்கள் முதன் முதலில் இவருடைய கருணையைப் பெற்றுக் கொள்ளவேண்டும். இவருடைய சர்ட்டிபிக்கேட் பார்த்துத்தான் பண்டாரச் சன்னிதிகள் வந்தவரைத் தம்பிரான் உத்தியோகத்தில் நியமிப்பார். லஞ்சம் பெற்றுக்கொண்டு உத்தியோகத்திற்கு சிபார்சு செய்யும் அஸிஸ்டெண்டு அதிகாரிக்கும் இத்தகையோர்களுக்கும் சிறிதேனும் வேற்றுமையில்லை. இவ்வளவு சிரமப்பட்டுத் தம்பிரான் ஆவதில் என்ன நன்மை என்றால் உணவு முதலியவைகள் உடலுழைப்பின்றி இருந்தவிடத்தில் கிடைக்கும். எங்கு சென்றாலும் மடத்துச் செலவில் சுகமாக வாழலாம். இந்த மடங்களில் நடக்கும் ஒழுங்கீனங்களைத் தமிழ் நாட்டினரனைவரும் அறிந்திருப்பார்களாகையால் விரித்துக் கூறவேண்டியதில்லை. இராமேச்சுரம், சிதம்பரம், திருவண்ணாமலை முதலிய தலங்கள் சைவர்களின் * புண்ணிய பூமிகளாம். விபசாரம், களவு, கொலை முதலிய அக்கிரமங்களினால் இவ்விடங்கள் * காசி க்ஷேத்திரத்தையும் தோற்கடிக்கின்றன.

---

* புண்ணியத்தின் விளை நிலம்.

* காசி க்ஷேத்திரத்தின் வரலாறு இதன் முடிவில் உள்ளது.

இந்து சமயத்தினரில் சைவர்களைப்போலவே மற்றொரு சாராரும் உளர். இவர்களை "வைகுண்டய்யங்கார்" என்று சொல்லுவார்கள். வைகுண்டத்திற்குப் பிரையாணிகளைச்சேர்ப்பதே இவர்களின் முதல் தொழில். இவர்களுக்கு வேதத்தைவிடத் திருவாய்மொழி என்ற தமிழ்ப்பிரபந்தமே பிரபலப்பிரமாணம். பறையர், செட்யார், குறவர் முதலிய இவர்களால் இழிவாக நடத்தப்படுகிற இனத்தைச் சார்ந்த பன்னிருவரே இப்பிரபந்தத்தை இயற்றியவர்கள். இவர்கள் விஷ்ணுவின் பால் அன்பு வைத்து வைகுண்டத்தை அடைந்தவர்களாம். இப்பிரபந்தத்தை வைஷ்ணவப்பாரர்ப்பனர் தங்கள் இனத்தவருக்கொழிய வேறு யாருக்கும் கற்றுக்கொடுக்கமாட்டார்கள். பிரிட்டிஷ் அரசாட்சியின் உதவியால் யாரேனும் கற்றுக்கொண்டபோதிலும் கோயில்களில் பாடினால் இவர்கள் ஒருங்கு சேர்ந்து அவனது உடலை அவனுக்கு உதவாமல் பண்ணிவிடுவார்கள் என்பது திண்ணம்.

இந்த அய்யங்கார்களின் நித்தியத் தொழில்களில் மற்றொன்று திருநீறு அணிந்து சிவனை வழிபடுகிற சைவர்களையும் சிவாலயங்களையும் நிந்தித்தலேயாகும். சிவன் கோயில் சுடுகாடு என்றும் சிவனை வழிபடுகிறவர்கள் * பறையர்கள் என்றும் இவர்கள் கூறுகிறார்கள். ‡

---

* அப்படியே சமணர் முன்னர் கூறியுள்ளார். ஆனால் அக்காலத்து அதற்குத் தக்க காரணம் உண்டு. அச்சமண மதத்திலிருந்து தோன்றினது வைஷ்ணவ மதம். இதில் சேர்ந்துள்ளவர் பல ஜாதிகள்; நீ பறையன் என்று சொல்ல யோக்கியதை இல்லை. காரணம் உன் கடவுளாகிய விஷ்ணு தங்கையைப் பறையனுக்குக் கொடுத்தார் என்ற கெட்டபேர் வந்து உன் கடவுளின் தலையிலேறி கூத்தாடுமல்லவா?

‡ இதோடு நிற்காமல் விபூதி அணிந்த ஸ்மார்த்தன் வைணவன் வீட்டில் வந்த உடனே சாணித்தண்ணீரை தெளிப்பார்கள். காரணம் தன் வீட்டுக்கு பறையன் வந்துவிட்டது அந்தத் தீட்டு போக.

முதன் முதலில் வேதமும் அதைப்போலவே பிரபலமான தந்திர சாஸ்திரமும் (ஆகமம்) அவசியம் வாசிக்க வேண்டும். வாம மார்க்கம் என்ற ஓர் பகுதி தந்திர சாஸ்திரங்களிலுள்ளது. "தசமஹா வித்தைகள்" இதற்குள் அடங்கும். அவைகளை இங்கு விரித்துக் கூறவேண்டிய அவசியமின்மையால் சுருக்கமாகக் கூறி முடிக்கின்றோம். இம்முறை முதலில் இமயமலைச் சாரலில் இருந்த பார்ப்பனர்களால் அனுட்டிக்கப்பட்டு நமது நாட்டின் பற்பல பாகங்களிலும் பரவிற்று. "தில்லை மூவாயிரம்" என்ற சொல்லில் அடங்கியுள்ள மூவாயிரம் பார்ப்பனர்களில் ஒருவர் * அகோர சன்னியாசியாகிய சிவனேயாம். திருச்செந்தூரிலும் பத்ரீநாராயணம் முதலியவிடத்திலும் முறையே இரண்டாயிரம் பிராம்மணர்கள் வீதம் போய் இம்முறையைப் பரவச் செய்தனர். இவ்விதமாகப் பன்னிரண்டு இடங்களைத் தங்களுக்கென அமைத்துப் பிரசாரம் செய்ததால் இந்நாட்டில் இம்மதத்தைத் தழுவுகிற மனிதர்கள் பெருகலானார்கள். பிறகு இம்முறையிலும் பல பிரிவுகள் தோன்றலாயின. ¶ இவைகளை விளக்குகின்ற பிரமாணங்களில் சில கூறுகின்றோம்.

மத்யம், மாம்ஸம் சமீனம் சமுத்ரா மைதுனமேவச;
வதே பஞ்சமகாரா:ஸ்யுர் மோக்ஷதா ஹியுகே யுகே.
(காளிகாதந்திரம்)

---

* "அகோர சன்னியாசி" கள், பிணம், மற்றுள்ள எல்லா மாம்ஸம் புசிக்கும் தலையோட்டில் போஜனம், மற்றெல்லாத்தொழிலும் முறையாகவேயிருக்கும். தாந்திரீக புத்தகங்களைப் பார்வையிடுக உண்மை விளங்கும்.

¶ கோர்ண வதந்திரம், முதல் பாகம் பார்க்க,—தாந்திரீக ஆசாரம் 7-பிரிவாக வகுக்கப்பட்டுள்ளது. அது வருமாறு:—

(பொருள்)— கள்ளு, இறைச்சி, மீன் முத்திரை (பிரவிடை ஸ்திரீயின் யோனி) மைதுனம் இவ்வைந்திற்கும் பஞ்சமகாரங்கள் என்று (பரிபாஷை) பெயர். இவைகள் ஒவ்வொன்றும் மோக்ஷத்திற்குச் சாதனங்களாம். (இது காளிகா தந்திரத்திலுள்ளது.)

பீத்வா பீத்வா புன:பீத்வா யாவதபததி பூதலே;
உத்தாயச புன: பீத்வா புனர்ஜன்ம நவித்யதே.
(மஹாநிர்வாண தந்திரம்)

(பொருள்)—கள்ளைக் குடித்துக் குடித்து மெய்ம் மறந்து தரையில் விழுமளவும் குடிக்கவேண்டும். தெளிந்தபின் எழுந்து மறுபடியும் குடிக்கவேண்டும். அப்படி செய்தால் இவனுக்கு மறுபடி பிறவியில்லை; இது மஹாநிர்வாண தந்திரத்திலுள்ளது.

"மாத்ரு யோனிம் பரித்யஜ்ய விஹரெத்ஸர்வ
யோனிஷு
வேத சாஸ்த்ர புராணானி ஸாமான்ய கனிகா இவ:
ஏகைவ சாம்பவீ முத்ரா குப்தா குலவதூரிவ:"

பொருள்—பெற்றதாய் ஒருத்தியொழிய மற்ற ஸ்திரீகளையெல்லாம் புணரலாம். வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள் இவைகளை விலைமகளைப்போலவும், இந்த சாம்பவீ முத்ரை (இப்போது சொன்ன அனுஷ்டான முறை) யொன்று மாத்திரம் குலமகளைப் போலவும் கருதவேண்டும்.

ரஜஸ்வலா புஷ்கரம் தீர்த்தம் சாண்டலீ
துஸ்வயம் காசி
சர்மகாரீ ப்ரயாகாஸ்யாத் ரஜகீ மதுராமதா.

அயோத்யா புக்கஸீ ப்ரோக்தா—(ருத்ரயாமன தந்திரம்)

பொருள்—திட்டுக்காரியைப் (ருதுஸ்திரீ) புணர்தல் புஷ்கர தீர்த்தஸ்நானமும் சண்டாள (புலைச்சி) ஸ்திரீயின் சேர்க்கை காசியாத்திரையும் கங்கா ஸ்நானமும் சக்கிலிச்சியின் சம்போகமே பிரயாகை ஸ்நானம், வண்ணாத்தியின் சேர்க்கை ¶ மதுரை, குறத்தியைப் புணர்தல் அயோத்தியை தரிசித்த புண்ணியமாம்.

இவைகளுக்கு வேறாக அயோத்தியை, மதுரை, மாயை, காசிமுதலிய புண்ணிய ஸ்தலங்கள் இருப்பதாகச் சொல்வது பகுத்தறிவில்லாப் * பசுக்களின் கூற்றாகையால் நம்பத்தக்கதன்று என்பது இவர்களின் கொள்கை.

இவர்களின் சமயத்திலுள்ள சில பரிபாஷைச் சொற்களின் பொருள் வருமாறு:—

தீர்த்தம் என்றால் சத்தி பூசைக்குரிய மாமிசம்; இதற்கே சுத்தியென்றும் புஷ்பமென்றும் சொல்லுவார்

---

* பசுக்கள். தீக்ஷையில்லாத மனிதர்கள். (இவர்களுடைய சங்கத்தில் சேராதவர்கள்) இவ்விஷயம் தெரிந்தவர்கள்—தந்திர சாஸ்திரத்தை அனுஷ்டித்துவரும் குருக்கள், எத்தகைய தீய ஒழுக்கம் செய்தாலும் கெட்டதென்று சொல்வார்களா? அவர்களுடைய மதத்தில் இச்செய்கைகள் நல்லதென்று சொல்லியிருக்கிறார்கள். பிறர்க்கு இச்செய்கை கெட்டதென்று தென்பட்டால் அம்மதத்தை விட்டு விலகுவதல்லாமல் இச்செய்கைகளைக் கெட்டதென்று சொல்லிக் கண்டிக்காதே. கண்டிக்கப்பட்டவன் மற்றொருமதத்தை அவர்களுக்குக்காட்டவேண்டும். அதில் ஆபாசக்குற்றங்கள் ஒன்றும் இல்லாததாயிருக்கவும்வேண்டும்.

கள். திருநீயை சதுர்த்தி மாம்ஸம், மீன், சரவண யோனி முத்திரை, பஞ்சமி மைதுனம்,' ஜலதும்பிகை இவைகள் மீனைக் குறிக்கும் சொற்கள்.

தங்களின் தீய ஒழுக்கங்களைப் பிறர் அறிந்து நகைப் பார்களே யென்றுதான் இங்ஙனம் ஒவ்வொரு பொருளுக் கும் பெயர் மாற்றி வைத்திருக்கிறார்கள். இந்த சமயத் திற்கு கௌலன், சாம்பவன், ஆர்த்திர வீரன், கணேசன், இவ்வகையான பரிபாஷைப் பெயர்களும் உண்டு. பிறருக்கு ¶ கண்டகன், விமுகன், சுஷ்கபசு இவை முதலிய இழி வான சில பரிபாஷைப் பெயர்களும் இவர்கள் வைத்திருக் கிறார்கள். * பைரவீ சக்கிர பூஜை பண்ணும் தருணத் தில் கட்குடத்தை வைத்து பூசித்து ஓ கள்ளே! நீ பிர்ம் மனது சாபத்தினின்றும் விடுபட்டிருக் கின்றனையெனப் பிரார்த்தித்துப் பிறகு அங்கு கூடியிருக்கிற ஆண் பெண் கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அவர்களுக்குள் ஒரு ஆண் மகனையும் ஒரு பெண்மணியையும் நிர்வாணமாக உட்காரவைத்து பெண்களெல்லாம் ஆண் மகனுடைய மர்மஸ்தானத்தையும் ஆண்களெல்லாம் பெண்ணினுடைய மர்மஸ்தானத்தையும் இலக்காக்கிப் பூசை செய்கிறார்கள். பூசை முடிந்ததும் மிச்சமான சாராயத்தை இவர்களுக்குத் தலைவனான ஆசாரியின் கையிலெடுத்து பைரவோஹம் (நானே பைரவன்) என்று குடித்து விடுகிறான். பிறகு அதே எச்சில் பாத்திரத்தில் சாராயத்தைப் பகிர்ந்து எல் லோரும் குடிக்கிறார்கள். பழையபடி இருவரையும் நிர்

---

¶ இவர்கள் கொண்ட கொள்கைக்கு இணங்காதவரை குறிக் கும் பெர்கள்.

* தாந்திரீகர்கள் ஒன்ற சேர்ந்து நடத்தும் பூஜை.

வாணமாக இருக்கச்செய்து யோனி பூஜை நடத்துகிறார்கள். இத்தருணத்தில் பெண்ணின் கையில் ஒருவாளும் புருஷன் கையில் ஒரு சூலமும் கொடுப்பார்கள். இவ்விருவர்களையும் கள்ளும் இறைச்சியும் தின்னச்செய்த பிறகு எல்லோரும் கள்ளும் இறைச்சியும் உட்கொள்ளுகிறார்கள். பிறகு பெண்களின் சில ரவிக்கை அல்லது அடையாளத் துணிகளை அவிழ்த்தெடுத்து ஒன்றாகக் கலந்து ஆண்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொன்று எடுத்துக்கொள்ளுகிறார்கள் எந்தப்பெண்ணின் உடை கைக்கு வந்ததோ அன்று அந்தப் பெண் அவனுக்குச் சொந்தம். ஆயினும் தாய்க்கு மட்டும் விலக்கு ஏற்பட்டிருக்கிறது. சகோதரி முதலிய யாராயிருப்பினும் குற்றமில்லை. இச் செயலை பெரும் புண்ணியமாகவும் இவர்கள் நினைக்கிறார்கள்.

இந்த தந்திர (ஆகம) சாஸ்திரத்தின் உற்பத்தியைப் பற்றியும் நாம் அறிந்திருக்கவேண்டியதன்றோ? புத்த சமயத்தை நாசம்பண்ண கங்கணம் கட்டிக்கொண்டிருந்த பார்ப்பனர்கள் செய்த சூழ்ச்சிகளில் இதுவும் ஒன்று. உயிர்கள் பொதுவாக அருந்தல், பொருந்தல் என்கிற இரு விஷயங்களில் பிரியமுள்ளவைகள். இவ்விரண்டும் இச்சமயத்தில் எல்லோருக்கும் எக்காலத்தும் எளிதாகக் கிடைக்கும். புத்த சமயத்தில் இவ்வகை விஷயங்களில் கண்மூடித்தனமாக நடந்துகொள்ள இடங் கொடுக்கவில்லை. மனதை தூயதாக்கும்பொருட்டு உணவில் பாகுபாடுகள் செய்யப்பட்டிருப்பதோடு இல்லறத்தார் பிறர் மனைவியை மனதினால் கூட விரும்பலாகாதென்றும் அவளைப்பார்க்கும்போது வயதில் மூத்தவளைத்தாய்போலவும் இளையவளைத் தங்கை அல்லது மகளைப்போலவும் நினைக்க

வேண்டுமென்றும் இதற்காகவே "சதா பவித்ரோகம்" (நான் எப்போதும் தூயனாகவே இருப்பேன்) என்று எண்ணிக்கொண்டு அதன்படி ஒழுகிவரவேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. துறவிகள் எப்போதும் பெண்களைப் பார்த்தல், தொடுதல் இவைகளினின்றும் விலகி ஆத்மபாவனம் பண்ணிக்கொண்டிருக்கவேண்டு மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. புத்த சமயத்தில் பிறப்பினால் ஜாதி வேற்றுமை இல்லாவிடினும் ஒவ்வொருவனுடைய மனோநிலைமைக்கேற்றவாறு உயர்வு தாழ்வு ஏற்பட்டிருக்கிறது. இத் தாந்திரீக மதத்தில் பணக்காரன் எந்தச் சாதியானாயிருப்பினும் அவன் தீக்ஷை பெற்றுக்கொண்டு பூசைக் காலத்தில் ஒன்றாக இருக்கலாம். பூஜைக் காலத்தில் எல்லோரும் துவிஜாதிகள்தான் (இருபிறப்பாளர்) மற்றக் காலங்களில் தத்தம் ஜாதி* முறைப்படியே ஒழுகவேண்டும்! இதற்குப் பிரமாணம்.

ப்ரவ்ருத்தே பைரவீசக்ரே ஸர்வே வர்ணா த்விஜாதய;;
நிவ்ருத்தே பைரவீசக்ரே ஸர்வே வர்ணா ப்ருதக்
ப்ருதக்.

பொருள்:— பைரவீ சக்கிர பூஜையின் போது எல்லோரும் துவிஜாதி (பிராமணர்) களே. பூஜை முடிந்தும் அந்தந்த வருணத்தான் தனித்தனியாகவே இருக்க வேண்டும்.

இவ்விரண்டு சமயங்களில் அறிவில்லா மாந்தர்களின் கருத்திற்கு இணங்கியது எது? புத்த சமயமா? தாந்

---

* இதை இன்றைக்கு சிலர் த்யேஸோபிக்கல் ஸொஸைடியில் நாகரீக முறைப்படி நடைபெறுகிறது இச்சாதி தந்திரம்.

ரீக சமயமா? உள்ளத்தையும் உடலையும் வாட்டியபின் பயனாக அடையும் முத்தியைக் காட்டிலும் ஒருவனை வருத்தமுமின்றி இம்மையிலும் சுகம், மறுமையிலோ கைலாசம் தங்களுக்குச் சொந்தமே. ஆதலால் பகுத் தறிவில்லா மனிதர்களுக்குப் பார்ப்பன தந்திரமாகிய தந் திர சமயமே சிறந்தது. ஆனால் இதற்குப் பொருள் செலவழியும். இதை முன்னதாகவே தெரிந்துகொண்ட பார்ப்பனர்கள் பணக்காரன்தான் தீக்ஷை பெற்றுக் கொள்ள அதிகாரியென்றும் பிரமாணம் எழுதிவைத் தார்கள். சக்கரவர்த்தியின் பிள்ளையாகப் பிறந்து அரச போகத்தை அருவருத்துத் தள்ளி முற்றத் துறந்து முனிக்கோலம் பூண்ட பகவான் புத்தன் தனக்கொப்பா னவர்கள் முத்தியடையத் தகுதியெனக் கூறினர். நிற்க, பார்ப்பனர்களில் சிலர் புத்த மதத்தைக்கெடுக்க எண்ணி அம்மதத்தைச்சார்ந்த துறவிகளைப்போல வேடம் போட் டுக்கொண்டு சமயத்தைக் கெடுத்ததோடு இத்தகைய கய வர்களை ஜீவகாருண்யத்தினால் தங்கள் குலத்துள் சேர் த்து கல்வி கற்பித்த புத்தமதக் குருமார்களையும் கழுவி லேற்றிக் கொன்றார்கள். இதோடு தாங்கள் உணர்ந்து கொண்ட தத்துவக் கருத்துக்களை அநுதியென்றும் உப நிஷத்தென்றும் எழுதிவைத்தார்கள். இதை வைத்துக் கொண்டுதான் பார்ப்பன மக்கள் எங்கள் மதத்திற்குச் சமமான மதம் வேறெதுவுமில்லையென்று சொல்லி இக்கா லத்தும் நம்மவர்களை ஏமாற்றுகின்றார்கள்.

புத்த பகவானையும் அவரது கொள்கைகளையும் மனி தர்கள் வெறுக்கும்படி எழுதிவைத்தும் புத்த சமயத்தின ரைப்போல வெளிவேடம் போட்டுத் தீய நெறியில் ஒழுகி

யும் இத்தாந்திரீக ஜனங்கள் உலகத்தை நாகக்குழியில் அமிழ்த்தியதோடு அறிவிலிகளாகிய பல ஜனங்கள் அரசர்களுக்குச் சிற்சில * உபகாரங்கள் செய்து அவர்களின் உதவியால் அந்தோ கொடுமை! அந்தோ கொடுமை! புத்தமதத்துறவிகளையும் சமண முனிவர்களையும் சித்திரவதை செய்தார்கள். கழுவிலேற்றினார்கள். அவர்களின் கோயில்களையும் மடங்களையும் † கொலைக்களமாக்கினார்கள். விக்கிரகங்களை உடைத்தார்கள். ஆனால் இக்கொடும் தொழிலாளர்களால் புண்ணிய பூமியென்றழைக்கப் படுகின்ற இந்த நாகக்குழியில் புத்தசமயமும் பிக்ஷுக்களும் இல்லாமற்போயினும் இன்றும் பூவுலகில் மக்கள் தொகுதியில் புத்த சமயத்தினரே அதிகமாக இருக்கின்றார்கள். அவர்களில் பெரும் பகுதியாரும் முழு உரிமையும் உடையவர்கள். சிலோன், பர்மா முதலிய இடங்களில் பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழ் அடங்கியிருப்பவர்களும் இந்நாகக்குழியில் கிடந்துழலும் இந்துக்களைப்போல எல்லா வகையிலும் யாவருக்கும் அடிமைகளாக இருப்பதில்லை.

புத்த பகவானுடைய கொள்கைகளைப் பின்பற்றியொழுகிவந்த அசோகன் முதலிய பேரரசர்களின் காலங்களில் கொலை, காமம் முதலிய பாதகங்கள் தலைக்காட்டாமல் எல்லா உயிர்களும் சுகமாய்வாழ இடமிருந்தால்

---

* அவ்வுபகாரம் இன்னதுதானென்று அறிய விரும்புவோர்கள், மைசூரில் சரவண வெளகுளாவென்றவிடத்திலுள்ள லைப்ரரியில் வாசித்து அறிவதே மிக நலம். இதைத் தெரிவதற்கு போதுமான நூற்கள் அங்குண்டு.

† ஆரும் திருவிழாவை சிவஸ்தலங்களில் நடைபெறுவதை ஆராயுங்கள்.

* விண்ணாட்டிற் கொப்பாயிருந்த இந்நாட்டில் முற்காலங் களில் பார்ப்பன நூலார்களின் மூதாதைகள் அநுஷ்டித் துவந்த களவுப் புணர்ச்சி கொலை முதலிய பாவங்களை வளர விடாமல் புத்த சமய சமண சமயங்கள் ஒடுக்கிவருவதைக்கண்டு அப்புனித மதத்தை ஒழிக்கக் கண்டுபிடித்த பல தந்திரங்களுள் முதன்மையானது இத்தந்திர சாஸ்திரமே. இதன் பெயரும் வழக்க ஒழுக்கங்களுமே இதற்குச் சான்று கூறும். எல்லா உயிர்களுக்கும் பொதுவாகிய கடவுள் இத்தகைய வஞ்சக எண்ணத்துடன் பல நூற்களும் ஒழுக்கங்களும் உண்டுபண்ணின இவர்களைத் தன்வினை தன்னைச்சுடும் என்ற முறையாகப் பிறருக்கு அடிமையாகி வருந்தும்படியாக விட்டுவிட்டார்.

"பர்த்ருஹரி" யென்னும் பெரியார் கூறுகிறபடி "தஸ்மை நம: கர்மணே" அத்தகைய பெருமை பொருந்திய வினைச் செயலின் பொருட்டு நமஸ்காரம்.

ஞான சூரியன் மூன்றாவது அத்தியாயம் முடிந்தது.

---

* இக்கருத்தை இக்காலத்தில் பொருட்பெருக்குடைய அமெரிக்காவில் பாலினால் தலை முழுகுவதாக அறிகின்றோம். இவ்வாறே பழமையான ரிக்வேதத்தில் ஓ இந்திரா! நாங்கள் இருக்க இடமும் பிறவளங்களும் இன்றி வருந்துங்கால் எங்கள் பகைவர்களாகிய தஸ்யுக்கள் (தமிழர்கள்) பாலினால் தலைமுழுகி மேன்மணி மாடங்களில் உலவுகின்றார்களே என்ற வசனம் வலியுறுத்தும்.

## அத்தியாயம் 4.

---

ராஜன் வாழும் நகரத்திற்கு வெகு தூரத்திலுள்ள ஒரு சிற்றூரில் குடியிருந்து வந்தவளும் நகரங்களைப் பார்த்திராதவளுமான ஒரு கிழவி நெடுநாட்களாக அரசனைப் பார்க்க அவாவுற்றிருந்தனள். ஒரு நாள் குடிகளின் நன்மை திமைகளை விசாரிக்க எண்ணி அவ்வூருக்கு அரசன் வருகிறானென்று கேள்வியுற்று இந்தக் கிழவியானவள் எல்லோருக்கும் முன்னதாகவே அரசன் வருகையை எதிர்நோக்கிக்கொண்டிருந்தாள். யானைகள், குதிரைகள், மேளவாத்தியங்கள் எல்லாம் பார்த்த இவள் அரசனது உருவம் எப்படியிருக்குமோவென்று வியப்புடன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அரசன் இவளது கண்முன்னின்றும் மறைந்து சிலதூரம் சென்றுவிட்டான். சிறிது நேரம் கழித்ததும் கிழவி தான் கோரிய ஆள் இன்னானென்று தெரிந்துகொண்டு "இவனா அரசன்? இவன் ஒரு மனிதனாகவன்றோ இருக்கிறான்; நான் என்னமோ எண்ணிவிட்டேன்; இவனைப் பார்க்கும்பொருட்டு வீணே பொழுதைப்போக்கினேனே!" என்று வருத்தத்துடன் வீட்டிற்குச் சென்றாளாம்.

இந்தக் கிழவி அரசனைப் பார்க்குமளவும் அவன்பால் வைத்திருந்த அளவு கடந்த மரியாதைக்கு அறியாமையே காரணமென்பது வெளிப்படை. இதைப்போலவே வேதாகமத்தைக் கற்றுணராத நம்மவர்களும் அதனிடத்து பரிசுத்தத் தன்மையைக் கற்பனம் பண்ணிக்கொண்டிருக்கின்றார்கள். இக்காலத்து நம்மவர்களில் ஆங்கிலம் கற்றுத்தேர்ந்த மேதாவிகள் கூட இவ்வேதத்தைப்

புகழ்ந்து கூறுவது வழிவழியாகக் கேட்டுவந்த மூட நம்பிக்கையினாலேயே யாகும். இந்த வேதம் கேட்கிறவனுடைய காதில் ஈயம் காய்ச்சிவிடுவதும் சொல்லுகிறவனுடைய நாக்கை அறுத்தெறிவதும் வேதப் பொருளை மனத்தில் வைத்திருப்பவன் நெஞ்சைப் பிளப்பதும் புண்ணியச்செயலாக நடத்திவந்தார்களெனினும் கல்வியறிவில்லாத மக்களுக்கு உண்மைக் கருத்து விளங்காமையாலும் இவ்வேதமானது பரம்பரையாக வந்த ஒரு ஆசானிடம் பொருள் கேட்டுத் தெரிந்துகொண்டாலன்றி ஏனையோருக்கு விளங்காத (உலக வழக்கிலில்லாத) ஒரு மொழியில் இருப்பதாலும் "வேத"மென்பது தெய்வவொளி திகழ்வது சொல்லிற்கடங்காப் பெருமையுடையது என்றிவ்வாறு நம்பிவிட்டார்கள். இங்ஙனம் கண்மூடி நம்புவதில் என்ன பயன்? வேத புஸ்தகங்கள் அச்சிட்டு விற்பனைக்கு வந்திருக்கின்றன. நாக்கை யறுத்துவிடுவார்களே; நெஞ்சைப் பிளந்துவிடுவார்களே; ஈயத்தைக் காய்ச்சி காதுகளில் விட்டுவிடுவார்களே யென்று பயப்படவேண்டாம். அத்தகைய கொடுந்தொழில்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் பயந்து ஏடுகளிலும் வஞ்சகப் பார்ப்பனரின் உள்ளங்களிலும் அடைக்கலம் புகுந்திருக்கின்றன. † இத்தகைய கொடுமைகளைக் காப்பாற்ற எண்ணியே "ஹோம் ரூல்" வேணுமென்கிறார்கள். எல்லோருக்கும் சம உரிமை வேண்டும்; தீண்டாமை ஒழிய

---

† ஆனால் நேபாளத்துக்குச் சென்று சூத்திரன் வேதம் கற்காதே, ஜாக்கிரதை! அந்நாடு பிரிட்டிஷ் அரசாங்கம் கைப்பற்றும் வரைக்கும் மனித குருடர்கள், மனித ஊமைகள் வாழும் நாடென்று சொல்லலாம்.

வேண்டும் என்கிறவர்களைத் தேசத் துரோகிகள், மதத் துரோகிகள், என்று வசை மொழிகளால் அலங்கரிக்கின்றனர். பல மனிதர்களை மிருகங்களைக் காட்டிலும் தாழ்வாகச் சில மனிதர்கள் நினைத்துவருகிற காலம் வரையில் சகோதரர்களே! உங்களுக்கு ஹோம் ரூல் வேண்டாம்; நீங்கள் விரும்பினாலும் ஆங்கிலேயர் கொடுக்கமாட்டார்கள்; கொடுத்தாலும் இந்துக்களாகிய நீங்கள் அனுபவிக்கமாட்டீர்கள்; ஒற்றுமையுள்ள புறச் சமயத்தாரால் துன்புறுத்தப்பட்டு கஷ்டப்படுவீர்கள்; ஆதலால் சில காலமட்டும் (நமக்குள் ஒற்றுமை வருமளவும்) பொறுத்திருந்து வேத சாஸ்திரங்களை வாசித்து அவைகளின் உட் கருத்துக்களை ஆராயுங்கள். அங்ஙனம் ஆராயுங்கால் "அஷ்டவர்ஷம் ப்ராஹ்மண முபனயீத:" "தமத்யா பநித" இவை முதலியவாக்கியங்கள் உங்கள் கண்களுக்குப் புலனாகும். வேதத்தைப் படிக்கிற உங்களைப் பார்த்துப் பார்ப்பனர்கள் "நாஸ்திகோ வேத நிந்தக:" என்றும் மற்றும் பரிகாசம் பண்ணினாலும் எடுத்துக் கொண்ட முயற்சியினின்றும் பின்வாங்காமல் சாதாரண சம்ஸ்கிருதத்தினின்றும் மாறுபட்ட இவ்வேத மொழியை மஹீதரன் முதலிய பழைய ஆச்சார்யர்களின் பாஷியத்தை வைத்துக்கொண்டு நம்மவர்களை எல்லோருக்கும் பயன்படும்படி தமிழ் தெலுங்கு மலையாளம் முதலிய நம் நாட்டு மொழிகளில் மொழி பெயர்த்து வெளிப் படுத்தவும் உறுதி செய்துகொண்டு அதற்கேற்ற முயற்சியை ஒவ்வொருவரும் விரைந்து செய்யுங்கள்.

ஆனால் இக்காரியமானது வடமொழி தென்மொழிப் புலமைவாய்ந்த அறிவாளர்களும் பொருளாளர்களும் கலந்து உழைத்தாலன்றி இலகுவில் முடிவுறாது. பாஷை,

வேஷம் விசாரம் ¶ தேசம் இவைகளால் மாறுபட்ட மேனுட்டார் இக்காரியத்தில் எடுத்துக்கொள்ளுகிற முயற்சியைக் கூர்ந்து கவனிக்கிற எந்த மனிதனும் சந்தோஷிக்கத் தக்கது. நடையிலும் உடையிலும் ஐரோப்பியர்களைப் பின்பற்றுகிற நம்மவர்களிற் சிலர் இத்தகைய நற்காரியங்களில் அவர்களைப் பின்பற்றி உழைத்துவருவார்களானல் நாட்டிற்கு எவ்வளவோ நன்மையுண்டாகும்.

இனி நம்மவர்களால் பரிசுத்தமென்று கருதப்பட்டு வருகிற வேதத்தினுடைய ஒரு பாகமாகிய மந்திரங்களிற் சிலவற்றை ஈண்டு கூறுவேன். விதி, மந்திரம், அர்த்தவாதம், நாமதேயம் என வேதவாக்கியங்களை நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. மந்திரமென்கிற சொல்லிற்கு நினைப்பூட்டுவது என்று பொருள். யாகத்தில் நிறைவேற்றுகிற ஒவ்வொரு சடங்கின் முதலிலும் இவைகளைச்சொல்லிப் பொருளையும் சிந்தித்தல் வேண்டும். இதன்கீழ் கூறப்புகும் மந்திரங்கள் வாஜஸனேயீ (சுக்லயஜுர் வேதம்) சம்ஹிதையில் உள்ளன. இவைகளுக்கு மஹீதராசாரியர் தெளிவாகப் பாஷியம் எழுதியிருக்கிறார். ஒரே குடும்பத்திலுள்ள அனைவரும் ஒன்ருகவிருந்து வாசித்து மகிழத்தக்க புராணங்களோ ஸ்மிருதிகளோ வேதங்களோ இவை முதலிய எந்த இலக்கிய நூலும் இந்துக்களுக்கு இல்லை.

முற்காலங்களில் யஜமானனுக்கும் (யாகஞ்செய்வோனுக்கும்) பலபேர் பத்தினிகள் இருந்தனர். அசுவமேத யாகம் செய்யும்போது பத்தினிகள் எல்லோரும் கைகளில்.

---

¶ ஆத்ம சிந்தனையின் வேற்றுமை. (விசாரம்)

* பானேஜனம் வைத்துக்கொண்டு குதிரையின் பக்கத்தில் வருகிருர்கள். பிறகு கீழ்க்குறித்திருக்கிற மந்திரத்தைச் சொல்லி ஒன்பதுதரம் குதிரையைச் சுற்றிவரல் வேண்டும். அதன் விவரம்:— மந்திரத்தின் முதற்பகுதி சொன்னவுடன் ஒருதரம் வலமாகவும் பிறகு ஒன்றும் சொல்லாமல் இரண்டு தடவை வலமாகவும் சுற்றிவரல் வேண்டும்: நான்காவது முறை மந்திரத்தின் இரண்டாவது பகுதியைச் சொல்லிக்கொண்டு ஒருதரமும் மவுனமாக இரண்டு தடவைகளும் இடமாகச் சுற்றிவரல் வேண்டும். அடுத்தபடியாக மந்திரத்தின் மூன்றும் பகுதியைச் சொல்லிக்கொண்டு ஒருதாமும் மவுனமாக இரண்டு தரமும் வலம் வரல் வேண்டும். இதற்கு மந்திரம்.

1. கணுனும் த்வா, கணபதிம் ஹவாமஹே. (வஸோமம)
2. ப்ரியாணும் த்வா, ப்ரியபதிம் ஹவாமஹே. (வஸோமம)
3. நிதினும் த்வா, நிதிபதிம் ஹவாமஹே. (வஸோமம)

பொருள்—ஓ குதிரையே! கணங்களின் தலைவனும், விருப்பத்தை நிறைவேற்றும் தலைவனும், பொருட்களின் தலைவனுமாகிய உன்னை அழைக்கின்றோம். நீ எனது பர்த்தாவாக இருக்கவேண்டும்.

---

* கையினுல் தண்ணீரைத் தொட்டுக்கொண்டு ஒவ்வொரு அங்கங்களையும் பரிசித்தல் பானேஜனம் என்பார்கள். (இப்போது தண்ணீர் குறைவுபட்ட நாட்டில் தோன்றிய முகம்மதியர்களும், இவ்வாறே செய்து வருகிருர்கள்.)

(மனைவிகளுள் தலைவியை ‡ மஹிஷி யென்பர் அவளுக்குத்தான் குதிரை நாயகனாக வரவேண்டுமாம்) பிறகு பானேஜனத்தால் யஜமானனும் பத்தினிகளும் பிராண சோதனம் (அங்கங்களைத்தொடுதல்) செய்யக்கடவர். பிறகு மஹிஷியானவள் குதிரையை நெருங்கி அதனுடன் சேர்ந்து படுத்துக்கொண்டு கீழ்க்காணும் மந்திரத்தைச் சொல்லவேண்டும்.

ஆஹமஜானி கர்ப்பத மாத்வ மஜாஸி கர்ப்பதம்;

பொருள்—ஓ குதிரையே! கர்ப்பத்தை உண்டுபண்ணுகிற வீரியத்தை இழுத்து யோனியில் க்ஷேபிக்கிறேன். (க்ஷேபித்தல் இடுதல்) அதைப்போல் நீயும் செய்யவேண்டும். இம்மந்திரம் சொல்லி முடிந்ததும் ஒரு துணியைப் போட்டு குதிரையையும் மஹிஷியையும் மூடிவிட்டு அத்வர்யு சொல்லவேண்டிய மந்திரம்.

(1) "ஸ்வர்க்கே லோகே ப்ரோணு வாதாம் "ஓ குதிரையே! மஹிஷியே! நீவிரிருவரும் இந்த யாக பூமியில் இவ்வுடையினால் உடல் முழுவது மறைத்துக்கொள்ளுங்கள்.

இதன் பின்னர் மஹிஷி சொல்லவேண்டிய மந்திரம்:—

(2) வருஷா ¦வாஜீ ரேதோதாரேதோ ததாது.

---

‡ மஹிஷி—பெண் எருமை, அரசனின் பட்ட ஸ்திரீக்கும் இதே பெயர் உண்டு. பெயரின் ஒற்றுமையாலும் குதிரைக்கும் எருமைக்கும் பொருத்தமில்லை.

(1) அதிவாஸேன ப்ரச்சாதபதி ஸ்வர்க்கே லோக இதி. (காத்யாயன சிரவுத சூத்ரம்) (ஸ்வர்க்கே லோக என்ற மந்திரத்தைச்

பொருள்—சுக்கிலத்தைத் தன்னுள் வைத்துக்கொண்டிருக்கிற குதிரை அதை என்னிடத்தில் வைக்கட்டும்.

இதன் பிறகு யஜமானன் குதிரையும் பத்நியும் படுத்திருக்குமிடத்திற்குச் சென்று குதிரையைத் தொட்டுக்கொண்டு கீழ்க்குறித்த மந்திரத்தைச் சொல்லவேண்டும்.

உத்ஸக்த்யா அவகுதம் தேஹி ஸமஞ்ஜிம் சாரயா
வ்ருஷன் ய: ஸ்த்திரீணும் ஜீவபோஜன:

பொருள்—புணர்ச்சி வேளையில் என் மனைவியாகிய இவளிடத்தில் (மஹிஷி) நான் செய்யும் காரியங்களை எனக்குப் பதிலாக நீ செய்யவேண்டும்.

* அத்வர்யு முதலிய ஐவரும் (அத்வர்யு, பிரஹ்மா, ஹோதா, உத்காதா, க்ஷத்தா.) குமாரிகளும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளுகிற வாக்கியங்கள் வருமாறு:—

முதலில் அத்வர்யு குமாரியை விளித்துத் தனது விரலால் அவளின் அல்குலைச் சுட்டிக்காட்டி பரிஹாஸமாகச் சொல்லுகிறுன்.

---

சொல்லித் துணியைப்போட்டு மூடுகிறார்கள் ஏஷவை ஸ்வர்க்கோ யத்ர பசும் ஸம்ஜ்ஞபயந்தி எங்கு பசு யாகம் செய்யப்படுகிறதோ அவ்விடம் சுவர்க்கமாம்.

(2) அஸ்வசிச்ன முபஸ்தே குருதே வ்ருஷாவாஜீதி. (அஸ்வ லிங்கம் ஹஸ்தேன த்ருத வாஸ்வ யோனித்வரா அர்ப்பயதீத்யர்த்த.) மஹிஷியானவள் குதிரையின் குறியைக் கையினுல் பிடித்துத் தன் யோனித் துவாரத்தில் வைக்கிறுள் என்பது இதன் பொருள்.

* அத்வர்யுர் ப்ரஹ்மோத் காத்ருக்ஷத்தார குமாரீ பத்நீபி;
ஸம்வதந்தே.
யகாஸகா விதி தசர்ச் சஸ்ய த்வாப்யாம் த்வாப்யாம் ஹயே
ஹயே ஸாவித்யா மந்தர்ய. (காத்யாயன சிரவுத சூத்திரம்.)

¶ யகாஸ கௌ சகுந்தகா ஹலகிதி வஞ்சதி ;
ஆஹந்தி கபே பஸோ நிகல்யா பீதி தாரகா.

பொருள்—பெண்கள் விரைந்து நடக்கும்போதும் புணர்ச்சி காலத்திலும் யோனிக்குள் ஹலஹல் வென்னும் ஒலியுண்டாகிறது. பிறகு வீரியம் வெளிப்படுகிறது.

இதற்குக் குமாரியாளவள் அத்வர்யுவின் லிங்கத்தைச் சுட்டிக்காட்டிக்கொண்டு விடையளிக்கிறாள்.

"யகாஸகௌ சகுந்தகா ஹலகிதி வஞ்சதி ;
விவக்ஷத இவதேமுக மத்வர்யோ மநாஸ்த்வ
மபிபாஷதா"

பொருள்—அத்வர்யுவின் லிங்கத்தை விரலால் சுட்டிக்காட்டிக்கொண்டு நுனியில் துவாரத்தையுடைய இது உன்வாய்போலிருக்கிறது. ஓ அத்வர்யுவே அதிகமாகப் பேசவேண்டாம்.

பிரஹ்மா மஹிஷியினிடம் சொல்வது:—

மாதாசதே பிதாசதே அகரம் வ்ருக்ஷஸ்ய ரோஹத:;
ப்ரதிலா மீதிதே பிதா கபே முஷ்டிமதம் ஸயத்.

பொருள்—மஹிஷியே! உன் தாயும் தந்தையும் கட்டிலின்மேல் ஏறிக்கொண்டு உன் தாயின் பகத்தில் (யோனி) தந்தையார் முஷ்டியை (லிங்கம்) ச் செலுத்தியதனால் நீ பிறந்தனை.

---

பொருள்—அத்வர்யு முதலியவர்கள் குமாரீ பத்நிகளுடன் பரிகாசமாகப் பேசுகின்றார்கள்

¶ இம்மந்திரங்கள் 90 பாட்டுகள் அடங்கியது. யெஜுர்வேதம் அத்தியாயம் 23-ல், 20-லிருந்து மகீதர பாஷ்யத்தைப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இதற்கு மஹிஷியின் விடை:—

மாதாச பிதாச தேக்ரே வ்ருக்ஷஸ்ய க்ரீடத;
விவக்ஷித இவதே முகம் ப்ரஹ்மன் மாத்வம் வதோ பகு.

பொருள்—உன் பிறவியும் இவ்வாறே. அதனால் அதி கமாகப் பேசாதே.

உத்காதா குமாரிகளில் ஒருத்தியை நோக்கிச்சொல் லுவது.

ஊர்த்வமேனு முச்சராபய கிரௌ பாரம் ஹரன்னிவ;
அதாஸ்யா மத்ய மேததாம் சீதே வாதே புனன்னிவ:

பொருள்—மலைக்குமேல் சுமையை ஏற்றுவதுபோல வும் குளிர்ந்த காற்று வீசுங்கால் தானியத்தின் பதர் தூற் றுவது போலவும் இவளை உயரத்தூக்கிப் பிடியுங்கள். இவளுடைய இடை அகலமாக ஆகட்டும்.

இதன் விடை.

பொருள்—முன்போலவே, இவள் என்ற விடத்தில் இவன் என்று வைத்துக்கொள்ளவேண்டும்.

“ஊர்த்வ மேனமுச் ச்ரயதாத் கிரௌபாரம் ஹரன்னிவ;
அதாஸ்ய மத்ய மேஜது சீதே வாதே புனன்னிவ”

ஹோதா வென்பவன் மற்றொருத்தியை நோக்கிக்கூறுவது.

யதஸ்யா அம்ஹுபேத்யா க்ருது ஸ்தூல முபாதஸக்
முஷ்காவி தஸ்யா ஏஜதோ கோசபே சகுலாவிவ.

பொருள்—எப்போது லிங்கம் யோனிக்குள் நுழை கின்றதோ அப்போது நீர் நிறைந்திருக்கும் மாட்டுக்குளம் பில் இரண்டு மீன்களிருந்து அசைவதுபோல் விதைக் கொட்டைகள் இரண்டும் வெளியில் அசைந்துக் கொண் டிருக்கும்.

இதன் விடை.

யத் தேவாஸோ லலாமகும் ப்ரவிஷ்டீ மின மாவிஷு:;
ஸக்த்னு தேதிச்யதே நாரீ சத்யஸ் யாக்ஷி புவோ யதா.

பொருள்—எப்போது ருத்விக் முதலியோர் புணர்ச்சி செய்ய விரும்பி லிங்கத்தை யோனிக்குள் நுழைக்கின்றார் களோ அப்போது பெண்ணின் அங்கங்கள் ஆணினால் மறைக்கப்பட்டிருக்கும். ஆயினும் துடையைப் பார்த்துப் பெண்ணை வேறுபிரித்து அறிந்துகொள்ளலாம்.

க்ஷத்தா வென்பவன் வேறொருத்தியிடம் கூறுவது.

யத்தரிணம் யவமத்தி நபுஷ்டம் பசுமன்யதே;
சூத்ரா யதர்ய, ஜாரா நபோஷாய தனயதி.

பொருள்:—பயிரை மேயும் மானைப்பார்த்து பயிர்ச் சொந்தக்காரன் மான் சுகத்தையடையுமே யென்று எண் ணுமல் இம்மான் பயிரைத் தின்றுவிட்டதே யென்று வருத்தப்படுவதைப் போல் ஆரியர்களால் புணர்ச்சி செய் யப்பட்ட தன் மனைவியைப் பார்த்து சூத்திரன் துன்புறு கிறான்

இதன் விடை.

யத்ஹரிணோ யவமத்தி நபுஷ்டம் பகுமன்யதே;
சூத்ரோ யதர்யாயை ஜாரோ நபோஷ மனுமன்யதே

பொருள்:—முற் கூறியவாறே ஆரிய ஸ்திரீயைப் புணர்ந்த சூத்திரனைப் பார்த்து ஆரியர்களும் வெறுப் படைகிறார்கள்.

இத்தகைய வாக்கியங்களால் ஆரியர்கள் * வியபிசாரத்தை விளையாட்டாகவே நினைத்து வந்தார்களென்பதும் இவர்களுக்குப் புறம்பானவர்கள் தீய ஒழுக்கமென்று வெறுத்து வந்தார்களென்பதும் அறியக் கிடக்கின்றது.

இவ்விதமாக ஒன்றுக்கொன்று சம்மந்தமில்லாதவைகளும் ஆபாசங்களுமான வாக்கியங்கள் நிரம்பியிருக்கிற வேதங்களின் சொரூபத்தை நம்மவர்கள் உணர்ந்துகொள்ளுமாறு மேற்கூறிய உதாரணங்கள் எடுத்துக் காட்டப் பட்டன. இவைகள்தான் யாக மந்திரங்கள். இவைகளைச் சொல்லி யாகம் செய்தால் பிராமணன் சுவர்க்கத்தை யடைவன். இச்சொற்களைக் கேட்கிற சூத்திரனது காதுகளில் ஈயமும் மெழுகும் உருக்கிவிடுவது பார்ப்பனரின் வழக்கம். ஆனால் நல்லோர்களுக்கு இத்தகைய ஆபாச வார்த்தைகளைக் கேட்பதே ஈயம் உருக்கி விடுவதைக் காட்டிலும் கஷ்டமாயிருக்குமென்பதில் ஐயமில்லை.

ஆரிய சமாஜத்திற்குத் தலைவரான "சுவாமி தயானந்த ஸரஸ்வதி" முற்கூறிய வாக்கியங்களுக்கு வேறு பொருள் கூறுகிறார். மஹீதராசாரியரைக் கண்டிக்கவும் செய்கிறார். அது நம்மவர்களை ஏமாற்றி ஆரிய மதத்தை நம்பச் செய்யவேயாகும். ஆரிய சமாஜம் தோன்றி

---

* அஸ்வமேத யாகஞ்செய்த அரசர்களுக்குப் பிள்ளையுண்டாக்கினார்கள் என்பது இவ்வித காரியமென்றே யூகித்துணரவேண்டும்.

நாற்பது வருடங்களேயாகின்றன. இக்காலத்தும் ஒரு சிலரே ஆரியசமாஜத்தைத் தழுவுகின்றனர். நாற்பது வருடங்களுக்கு முன்னிருந்த பிராமணரனைவரும் இக்காலத்தவரில் பெரும்பகுதியினரும் மஹீதர பாஷ்யத்தை ஒத்துக்கொள்ளுகின்றனர். ஆதலால் இதில் மேற்கோள்களாகக் கூறப்பட்டிருக்கும் வாக்கியங்களின் உரை மஹீதரரின் பாஷிய மொழி பெயர்ப்பேயாம். தயானந்த மதப்பிரகாரம் 196-கோடி வருஷமாக இப்படி நடந்தென்று சொல்லவேண்டும். இந்த வேதத்திற்கு மாறி பொருளுரைக்க வந்தவர் 40-வருஷ காலம்தான் ஆகிறது. புத்த சமண காலத்தில் மஹீதர பாஷ்யமே இருந்தது.

வட மொழியானது புலவர்களின் விருப்பத்திற்கேற்றவாறு பொருட்களைக் கற்பிக்க இடமுள்ளதாயிருக்கிறது. உபநிஷத்துக்களை எழுதியவர்கள் கனவில் கூட நினைத்திராத பொருட்களை சங்கராசாரியர் எழுதி அவைகளைத் தன் மதமாக்கி வேதத்தின் முடிவில் உள்ளவைகள் என்று உறுதிப்படுத்தினர். இதைப்போலவே காவியங்களிலும் மாறுபட்ட உரைகளைப்பார்க்கலாம். "ஸ்புடபின்னர்த்த முதாஹாத்தச:" (மாகம்) என்று தொடங்கிய சுலோகங்களில் நிந்தையும் ஸ்துதியும் இருப்பதாக வியாக்கியானங்களால் தெரிகின்றது. குப்புற விழுந்தும் மீசையில் மண் ஒட்டவில்லை என்ற பழமொழிக்கொப்பாக ஆபாசக் களஞ்சியமாகிய வேதத்தை அறிவாளிகள் வெறுத்துத் தள்ளுவதைப் பார்த்த பார்ப்பனர்கள் வேதம் குற்றமற்றது என்று ஸ்தாபிக்கவேண்டி சமஸ்கிருத பாஷைக்கு எதிர்பாராத பல அர்த்தங்களையும் உண்டுபண்ணி நிகண்டுகள் எழுதிவைத்தார்கள்.

இவ்வகைக் காரணங்களால் வடமொழியானது தத்துவ சாஸ்திரம் எழுதத்தக்க மொழியன்று, தத்துவ நூற்கள் பார்ப்பனரால் எழுதப்படவுமில்லை. அவைகளின் உண்மைக் கருத்துக்களை உணர்ந்து கையாளப்படவுமில்லை. தத்துவத்தை முதன் முதலாக மனிதர்களுக்குப் போதித்தது * பகவான் புத்தனேயாம். பிறகு சமணர்களின் நூற்கள் குரங்கின் கையிலகப்பட்ட பூமாலையைப் போலப் பார்ப்பனர்களின் கையிலகப்பட்டு உபனிஷத்து ரூபமாகச் சிதைவுற்றுக் கிடக்கின்றது.

மொழிகளுக்கு முரண்பட்ட பல பொருட்களைக் கற்பித்தலால் உண்டாகும் உயர்வும் தாழ்வும் அறிய விரும்புவோர் ரஸாயன சாஸ்திரத்தில் சொற்களுக்கு முரண்பட்ட பொருள்களையுணர்த்துகிற பெயர்களை வைத்துப் பார்க்கட்டும். இவ்வைந்து வார்த்தைகளுக்கும் மார்ஜினில் காணுகிறபடிக்குள்ள பொருட்கள் இருந்தால் இந்த ரசாயன சாஸ்திரம் என்ன பயனைத்தரும். புத்த பகவானுடைய தத்துவ சாஸ்திரம் ரசாயன சாஸ்திரத்தைப் போலவே ஆராய்ச்சி செய்து பலனடையத் தக்கதாம். இந்த சாஸ்திரத்தின் உருவைச்சிதைத்து வேதத்திலுள்ளது எங்களுக்குச் சொந்தமானது என்று பிராமணர்கள் எழுதிவைத்திருக்கிறார்கள். இதனால் மனிதர்களுக்கு ஒரு பயனும் இல்லை. வடமொழியைப் படித்தும் பேசியும் வந்த பழைய காலத்திய பார்ப்பன பண்டி

---

* ராஜவித்தை யென்ற பெயரால் அழைக்கப்பட்டு அரசர் பாரம்பரையிலேயே அனுஷ்டித்து வந்தது, அதனை பிரம வித்தை யென்று பெயரிட்டு பிராம்மணர்கள் கைப்பற்றினார்கள். இதுவும் சங்கராச்சாரியாருக்குப் பிறகென்றறியவேண்டும்.

தரின் வஞ்சகத் தன்மைக்கு ஒரு சொல்லிற்கு பல பொருட்களை யுணர்த்துகிற இம்மொழியே உதாரணம். முன்னுக்குப் பின் முரணாகவும் சமயத்திற்கேற்றபடி பொருள் மாற்றிக் கூறுவதும் நல்லோர்களின் செய்கை யல்லவே.

ஆனால் இந்துக்களின் பழைய சொத்து இதற்கு முன் கூறிய வாக்கியங்களைப் போன்ற பல வாக்கியங்கள் அடங்கிய வேதங்களும் ஸ்மிருதிகளுமே. வேதத்தில் ஸோம (கள்ளு) த்தைக் குறித்துப் புகழ்ந்து பாடியுள்ள பல பாடல்களும் பசு யாகத்தின் மந்திரங்களும் இவை போன்ற பல விஷயங்களும் இதில் எடுத்துக் காட்டவில்லை. பௌண்டரீகம் என்னும் பெயரால் ஒரு யாக முண்டு. அது விதவையினுடையவும் பிரமசாரியினுடையவும் சேர்க்கையால் நிறைவேற்றத்தக்கது.

இத்தகைய ஆபாச வாக்கியக் களஞ்சியத்தை அறிவாளிகள் எங்ஙனம் பிரமாணமாக ஒப்புக்கொள்ள இயலும்.

உபனிஷத்துக்களில் பெரும்பகுதியும் புத்த பகவானுக்குப் பிறகு உண்டுபண்ணியவைகள் என்றும் அதற்கு முன் இரண்டொன்று உண்டாயிருந்தால் அவைகள் க்ஷத்திரியர்களின் சொத்தாக இருந்தனவென்றும் முன்னரே கூறியுள்ளோம். அத்தியாத்ம வித்தைக்கு இராஜ வித்தையென்று மற்றொரு பெயர் உண்டு. இதனால் இது க்ஷத்திரியர்களின் சொந்தமென்று நன்கு விளங்குகிறது. * ராஜ வித்தியா ராஜகுஹ்யம் பவித்திரமித முத்தமம்

---

* அரசர்களின் வித்தை. (1) அரசர்களின் இரகசியப் பொருள்.

என்கிற கீதா வாக்கியத்தால் கிருஷ்ணன் இவ்வுண்மையை ஒப்புக்கொண்டிருக்கிருர். கருமகாண்டத்தைத்தழுவி நடக்கிற ‡ மீமாம்ஸகர்கள் உபனிஷத்துக்களை வேதப் பிரமாணமாக அங்கிகரிக்கமாட்டார்கள். முதன்முதலாக உபனிஷத்துக்களை வேதத்தில் சேர்த்து ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு கருமகாண்டத்தில் மனிதர்களுக்கு நம்பிக்கை குறையவே பழைய குருட்டு நம்பிக்கையை மீண்டும் உறுதிப்படுத்தும் பொருட்டு உபனிஷத்துக்களும் வேதங்களேயென்றும் ஆனுல் முடிவில் இருப்பதால் கருமகாண்டப்படிக்குள்ள யாக முதலிய சடங்குகளை நிறைவேற்றி மனத்தூய்மையடைந்தவன்தான் உபனிஷத்துக்களையுணர்ந்து அவைகளின்படி ஒழுக உரிமையுள்ளவன் என்றும் பொய்க் கதையைச் சொல்லி மக்களை ஏமாற்றிவிட்டார்கள்.

எக்காலத்தும் அழியாமலும் அனைத்திற்கும் காரணமாயும் இருக்கிற பரம்பொருள் ஒன்றே என்றும் நிலைத்திருப்பது. இவ்வுலகம் தோற்றம் மாத்திரமே. இத்தகைய உணர்ச்சி எப்போது உயிர்களுக்கு உண்டாகின்றதோ அப்போதே முத்தி பரமாத்மாவுடன் ஒற்றுமை நிர்வாணம் கைகூடுகின்றது. என்று உபனிஷத்துக்கள் கூறுகின்றன. ஆனுல் இது சங்கராசாரியரின் கொள்கையேயாகும். நீலகண்டர், இராமானுஜர், மத்வர் முதலிய

---

‡ இவர்கள் சங்கர மதத்தைப் பிரசன்ன புத்த மதம் (வைதீகப்போர்வையையுடைய பௌத்தர்கள்) என்று சொல்லுவார்கள். இதனுல் பௌத்த சமயக் கூற்றுவனுயிருந்த சங்கரர் பௌத்தர்களின் தத்துவ நூற்களை வடமொழியில் எழுதி உபனிஷத்துக்கள் என்ற பெயரைக் கொடுத்தார் என்று எண்ண இடமிருக்கிறது.

பலரும் பலதிறப்பட்ட கொள்கைகளை யுடையவர்கள். இவர்கள் அனைவரும் உபனிஷத்துக்களையே முதல் நூலாக ஒப்புக்கொள்ளவும் செய்கிறார்கள், ஒரு சொல்லிற்குப் பல பொருட்களை யுணர்த்தும் வடமொழியானது மேற்கண்டவர்களின் மதியை மயக்கிப் பல துறைகளில் அலையச் செய்ததே இதற்குக் காரணம்.

ஆனால் சங்கராச்சாரியாரின் கொள்கைப்படி ஜீவனுக்கு இத்தகைய ஞானம் (பிரமம் சத்தியம், உலகம் மித்யை) வேண்டுமே யொழிய அவனுடைய செய்கை எப்படியேனுமிருக்கலாம்.

அனுமேத ஸஹஸ்ராண் யப்யத; குருதே ப்ராஹ்ம
காத லக்ஷாணி;
பரமார்த்த விங்க புண்யைர் நச பானபர் லிப்யதே
க்வாபி. (பரமார்த்தசாரம்)

பொருள்:— ஆட்டையறுத்து ஆயிரம் யாகங்கள் செய்யினும் லக்ஷம் பிரம்மஹத்தி (பார்ப்பனக் கொலை) செய்யினும் உண்மையை அறிந்தவன் புண்ணியத்தினாலும் பாவத்தினாலும் பற்றமாட்டான். இது பரமார்த்த சாரம் என்னும் நூலில் உள்ளது.

(இந்த பிரமாணம் உணர்ந்ததனால் தான் ஆரியர்கள் குற்றமற்ற பௌத்தர்களைப் பலதடவைகளில் ஆயிரமாயிரக்கணக்காகக் கொல்வித்தார்கள் போலும்)

கீதையிலும் "ஜ்ஞானாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேர்ஜுன;" ஞானத்தீ எல்லாக்கருமங்களையும் எரித்துவிடும் என்று சொல்லியிருக்கிறது. புத்தபகவான்

நல்லொழுக்கத்தினுலும் புத்த தத்வ சாக்ஷாத்காரத்தினு லும் மனத்தூய்மையடைந்தவனே மோட்சத்துக்கு அதி காரி; என்று சொல்லியிருக்கிறர். "சூன்னிய வாதம், மித்திய மிக ஸூத்ரம், ராகத்வேஷ மோஹக்ஷயாத்பரி நிர்வாணம்; காமம், வெகுளி, மயக்கம் இவைகளின் நீக் கமே முத்தியைத் தரும் என்பது இதன் பொருள். புத்த பகவான் திருவாய் மலர்ந்தருளிய தத்துவ சாஸ்திரங்களை எல்லோரும் எளிதில் உணர்ந்து பயனையுமடையலாம்.

வைதிகர்களைக் குறித்த ஒரு கதை இச்சமயம் நினை விற்கு வந்ததையும் இங்கு கூறிவிடுகிறேன்.

தென்னுட்டிலிருந்த ஒரு பிரபுவானவர் தன் குடும் பத்தில் அடிக்கடி மரணம் முதலிய கெடுதிகள் நேருவ தைக் குறித்து வருந்தி பண்டிதனுன ஒரு பார்ப்பனனை வரவழைத்து தன் குடும்பத்தை க்ஷேமடைவிக்கும்படிக் குப் பிரார்த்தித்தனன். அவன் இவனது ஜாதகத்தைக் கொண்டுவரச் செய்து பார்வையிட்டு இத்தகைய துன்பங் கள் யமனது வாகனமாகிய எருமைக் கடாவின் கோபத் தால் உண்டாயினவென்றும் ஆதலால் அதன் தாயான பெண் எருமையை மகிழ்வித்தால் தாயின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து பிறகு பிள்ளையினுல் தொந்தரையுண்டாக மாட்டாதென்றும் அதற்கேற்ற யாகம் ஒன்று செய்யவும் அந்த யாக முடிவில் கொம்பு குளம்பு இவைகளைத் தங் கத்தினுல் பொதிந்த பெண் எருமைகளும் தன்னுலியன்ற வாறு பிற பொருட்களும் (சுவர்ணதானம், கோதானம், வஸ்திரதானம் கன்னிகாதானம் முதலியன) தக்ஷிணை யாக வழங்கவேண்டுமென்றும் கட்டளையிட்டான். பிரபு வும் அக்கட்டளையைச் சிரமேற்றுங்கி யாகமும் நடைபெற்

றுக்கொண்டேவந்தது. சில நாட்கள் சென்றதும் வித்து வானுகிய மற்ருெரு பார்ப்பனன் அவ்வூருக்கு வந்தவன் யாகம் நடைபெறுவதைக் கேள்வியுற்று தனக்கும் ஏதேனும்தக்ஷிணை கிடைக்குமென்றெண்ணி யாகசாலைக்கு வந்தான். வந்தவிடத்தில் எந்த நூலினும் இல்லாத புது முறைப்படி யாகம் நடைபெற்று வரவே சந்தேகத்துடன் ஒரு பக்கமாக ஒதுங்கியிருந்தான். பார்த்தான் பழைய புரோகிதன். வந்தவன் சொந்தக்காரனிடம் உண்மையைத் தெரிவித்து வரும்படியில் மண்ணைப் போட்டுவிடுவானேயென்று பயந்தான். இ ர க சி ய ம ா க ஒன்றும் சொல்லவும் தக்க இடமில்லை. உடனே சமயோசிதமான ஒரு புத்தி ஏற்பட்டது. ஹோ ம த் திரவியங்களைக் கையில் எடுத்து இம்மந்திரத்தைச் சொல்லி நெருப்பில் போடும் பாவனையாக வந்தவனுக்குத் தன் கருத்தை வெளியிட்டுப் பிரபுவின் முகத்தில் கரிதடவி இருவரும் சேர்ந்து தக்ஷிணைப் பொருட்களைப் பங்கிட்டுக்கொண்டார்கள். அம்மந்திரமாவது:—

“மஹா மூர்க்கஸ்ய யாகோயம் மஹிஷீசத தக்ஷிண:;
மமாப்யர்த்தம் தவாப்யர்த்தம் விக்நம் மாகுரு
பண்டித ஸ்வாஹா

பொருள்—இந்த யாகம் செய்வோன் அறிவிலிகளுக்குத் தலைவனவன். இதற்கு அநேகம் எருமைகள் தானமாக வழங்கப்படும். அவைகள் உமக்குப் பாதியும் எனக்குப் பாதியும். ஆகையால் ஓ பண்டிதரே ! இடையூற்றை விளைவித்து நஷ்டப்படுத்த வேண்டாம்.

¶ சுவாஹா.

இது வேடிக்கைக் கதையாயினும் ஆதுக, யாகங் கங்களின் கருத்து இப்படியேயாம். இவ்விதமாக உடல் வருத்தமின்றி வயிற்றை நிரப்பிவரும் ஒரு சிலர் வேதங் களும் புராணங்களும் எல்லாம் தங்களுடையதென்றும் தங்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்களுக்குத்தான் சொர்க்க வாசலைத் திறந்துவிடுவோம். மற்றவர்களை நர கத்திற்கு அனுப்புவோம் என்றிவ்வாறு சொல்லுகிறார் களே; நமக்கு அவர்களின் சொர்க்கமும் வேண்டாம். புராணங்களும் வேதங்களும் உணர்த்துகிற விஷயம் இதை வன்றிப்படித்தால் அறிந்துகொள்வீர்கள். ஆத லால் அவைகளும் நமக்கு வேண்டாம். அவர்கள் பூமி தேவர்களாகவே வாழ்ந்துகொள்ளட்டும். ஆனால் நா மும் ஏனைய (பிறநாட்டிலுள்ள) மனிதர்களைப் போலவா வது வாழவேண்டாமா? அதற்காக முன்னேற்ற வழி யில் முயற்சிப்போமாக. இம்மைக்கு வேண்டிய கல்வி, தொழில் முதலியவைகளில் அவரவர்களின் இயற்கைக் குணத்திற்கேற்றவாறு நமது சிறுவர்களைப் பழக்கவேண்

---

¶ நம்மவர்களில் பெரும் பகுதியினருக்கும் யாகத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. வடமொழியும் தெரியாது. நெருப்பில் போடும் பொருட்கள் தேவர்களுக்குச் சேர்ந்து அவைகளை ஒன்றிற்கு ஆயிரமாக நமக்கே திருப்பிக் கொடுக்கிறார்களென்று பார்ப்பனர்க ளின் மோச வார்த்தைகளை நம்பியிருக்கிறார்கள். ஆனால் சுவாஹா என்ற சொற்களைப் பலதடவைகள் கேட்டிருப்பார்களாதலால் சுபா சுப காலங்களில் ஹோமம் செய்யும் பார்ப்பனர்கள் நமக்கு விரோத மானவைகளோ பொருளற்றவைகளோ ஆனவார்த்தைகளைச்சொல்லி முடிவில் சுவாஹா வென்று முடித்து ஓமப்பொருளை நெருப்பிலிடுகிற வழக்கம் இன்றும்உண்டு.

டும். மோக்ஷத்திற்கு உலகப்பற்றையொழித்தவன்தான் அதிகாரி. அதற்குத் தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியும் நல்லோர்களின் கூட்டுறவும் வேண்டும். அதற்கு வேண்டிய நூற்கள் பல நம் மூதாதைகள் இயற்றியிருக்கின்றனர். ஆதலால் "இந்துக்கள்" என்று நம்பியிருந்த மூட நம்பிக்கையை இதுமுதல் விட்டுவிட்டு நம்மவர்கள் ஒவ்வொருவரும் நான் மனிதன்; எல்லோரைப் போல எல்லா முன்னேற்றத்திற்கும் உரிமையுண்டு என்கிற எண்ணத்தைக் கைக்கொள்ளவேண்டும்.

ஆதலால் ஓ சகோதரர்களே! எனக்குத் தெரிந்தவாறு நம்மவர்கள் ஆரிய வஞ்சனையினின்றும் விலகி விடுபட்டு முன்னேற்றமடையும் வழியைக் கூறியுள்ளேன். இவ்வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து இதன்படி ஒழுகி அதனாலாம் நற்பயனையடையுமாறு சர்வேசுவரனாகிய ஞானகுரு அருள்புரிவானாக. இதோடு மலையாள பாஷையில் முன்னமே இயற்றிய அப்ராஹ்மணோத்போதனம் முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஞானசூரியன் நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம் 5.

---

ஆகமம் வேத ஸ்மிருதியோடொத்தது.

முனீந்திரர்— முனித்தலைவர், அத்திரி, விஸ்வாமித்திரர், புலத்தியர், புலகர், கிரது, வசிட்டர், மரீசியென்னும் எழுவரையும் காமிகாகம பூர்வபாக ஸ்நானவிதிப் படலம் முனிவரென்று மொழிகின்றது. முனிவர்—ரிஷி (மந்திரத்தைக் கண்டுபிடித்தவர்கள்) உண்டுபண்ணினவர்கள்.

"சித்தர்"—மனிதர், ஜனகர், சனந்தனர், சனாதனர், சனக்குமாரர், கபிலர் பிருகு, பஞ்சசிகர், சிவன், உருத்திரன், பவானி, பிரமன், விஷ்ணு, அக்கினி, வாயு, யமன், சூரியன், சந்திரனென்னும் பதினெண்மரும் சித்தர்களென்று "ததே மனுஷ்யா ஸனக" என்றெழுதிச் செல்லுஞ் சுலோகங்களின் வாயிலாக மேலைப்படலமே விளம்புகின்றது. இப்படலத்தில் திரிபுண்டாதாரன அங்குலம்—அந்தணருக்கு 6, அரசருக்கு 4, வைசியருக்கு 2, சூத்திரருக்கும் பெண்களுக்கும் 1 என விதிக்கப்பட்டமையாலும்; இக்கால் வருணத்திற்கும் வேறாய சாதியாருக்கு, அவ்வொன்று மின்றென்றமையானும், அந்தணர் உத்தரீயம் (மேல்வேஷ்டி) அணியலாம்; சூத்திரர் அஃதணியொண்ணாதென்றமையானும்; சாலா லக்ஷண விதிப் படலத்தில் அந்தணர் முதலிய மூவருணத்தார் வீடுகள் இரட்டைத் தூண் நிறுவியும் மற்றையர் வீடு ஒற்றைத் தூண் நிறுவியும் கட்டல் கட்டுப்பாடாம்; அந்தணருக்கு 11-அடுக்கும், அரசருக்கு 5

அல்லது 7-அடுக்கும், வைசியர் சூத்திரர்கட்கு 3-அடுக்குமுள்ள வீடுகளுரியனவென்றமையானும்; பூகர்ஷண விதிப் படலத்திற் பயிரிடற்குரிய உழவு முறை—அந்தணர்க்கும் அரசர்க்கும் 32, வைசியருக்கு 15, சூத்திரருக்கு 7 என்றமையானும்; ஆலயங்களிலும், கிராமங்களிலும், சிவத்துவிசரே (ஆதி சைவரென்னும் பிராமணர்) சிறந்தவர்; தக்ஷிணை பெறற் குரியோரென்றமையானும் தந்த்ராவதார படலத்தில் ஆதி சைவ விப்பிரர்களாய ஆசாரிய பரம்பரையில் இவ்வாகமங்களை ஓதலும், ஓதுவித்தலும் இவ்வுலகம் செய்யத்தக்கன; மற்றையரைக்கொண்டு அவை செய்யத்தக்கனவல்ல; சூத்திரர் சவருணர் முதலியோரும் சிற்பிகளும் சித்திரந் தீட்டுவோரும் சைவாகமங்கள் படிப்பது பாவமென்றமையானும்; பூபரிக்ரஹ விதிப் படலத்தில் அவ்வாதி சைவ ஆசாரியர் முதலினேரைப் பூசித்து, அவருக்குத் தக்ஷிணை கொடுத்திடுகவென்றும், பூகர்ஷண விதி படலத்தில் நிலத்தை யுழுபடை கொண்டுழும்போதும் அவ்வாசாரியாருக்குத் தக்ஷிணையாக 5, (நிஷ்கம்) வராகனெடைப் பொன்னும் உபகாரமாகப் பசு, எருது முதலியனவும் ஈந்திடுகவென்றும், கர்ப்பந்யாசவிதிப் படலத்தில் வஸ்திரமும், பொன்னும் மோதிர முதலிய அணிகளுமாகிய இவற்ருல் அவரை அழகுபடுத்திப் பூசித்து, உத்தமமாக பதினைந்து வராகனும மத்திமமாக 10 வராகனும் அதமமாக 5 வராகனும் அவருக்குத் தக்ஷிணையாகக் கொடுத்திடுக; பசு, பூமி, தானியம், அடிமைகள் முதலியவற்றை இல்லத்திற்கு வேண்டுமளவாக அவருக்களித்திடுக வென்றும், பாலஸ்தாபன விதி படலத்தில் முன்னர் மொழிந்தவாறு வஸ்திர முதலியவற்ருல் அவரை அழகுபடுத்திப் பூசித்து,

அவ்வுத்தம முதலிய மூவகைத் தக்ஷிணைகளையும் அவருக்குதவுகவென்றும், வாஸ்து சாந்திவிதி படலத்தில் அவ்வாசிரிய தக்ஷிணை அம்மூவகையுமாமென்றுங் கூறினமையானும்; இன்னும் பல வேதுக்களானும் கல்வி, அறிவு, ஒழுக்கங்களோடு கூடினவரும் அவை கூடாதாருமாகிய பலரும் வைகியுள்ள இப்பூமியின் கண் ஒரு கூட்டத்தாரையே ஒரு சிலரையே பெரிது முயர்த்தலும் அவரைப்போல ஏனையோர் இனிது தாழ்ந்ததென்றலுமாம் அதருமங்கொண்டு படலம் படலமாக அவ்வொரு சிலர் சிவஞேபாயத்தோடு பல கருமங்களையும் விதிக்க வந்த புத்தகமே அவ்வாகம பூர்வ பாகமெனவும் ஸ்மார்த்தர் பெரிதுஞ் சுயநலங் கருதி எழுதியுள்ள மிருதிகளையொத்த இப்பாகபடலமியாவும் சிவபெருமான் கூறியருளினனென்பது, அருளவரம் எல்லாரும் இனிதுய்தி பெறவேண்டுமென்னுந் திருவுளப் பெருங்கருணைத் தடங்கலாய்த் தரும தேவதை மீதெழுந்தரு தலைமைப் பொருளாய் வயங்கும் அவனது கடவுட்டிறத்தை யிழுக்கத்துட் படுத்துவதாமாகலின் அது சால்பிற்றன்றெனவும் நடுவு நிலை யோம்புநர் பலரும் நவில்கின்றனர். நடுவு நிலை யோம்பல் எமக்குங் கடன்மையே. போந்த விபதிகளை யெவரெவ்வாறு கொள்ளினும் கொள்ளட்டும்; இவை ஈசன் கட்டளையென்று கூறற்கே எமது நெஞ்சம் பெரிது மஞ்சுகின்றது. போந்த தந்த்ராவதார படலத்தில் "இல்லறத்து ஆதி சைவரே எல்லாக் காரியங்களிலும் அதிகாரமுடையர்" என்றதூஉம் பேராசங்கைக்கு இடனுயிருத்தல் உய்த்துணரத் தக்கதாம்.

இவ்விரு பக்கங்களில் கூறிய வசனம் முருகக் கடவுளாது அரும் பெரும் பக்தராகிய பாம்பன் சுவாமிகள்

கூறியுள்ளதாகும். இப்பெரியார் பார்த்தளவும், ஆகம நூலைப்பற்றி அபிப்பிராயம் சொல்லிவிட்டது. ஆனால் கர்ம காண்டம் பூர்வ பாகம் என்றார். சித்தாந்த பாகம் ஞான காண்டமும் சூத்திரர்கள் அதன் கிட்ட போகலாகாது இதிவ்வாறிருக்க முன், நான்காவது அத்தியாயத்தில் சொல்லியிருக்கிற விஷயங்கள் சுருக்கமாக ஐந்தாவதத்தியாயத்தில் சொல்லி முடிக்கிறேன் கவனியுங்கள்! காமிகாகமம் அத்தியாயம் 19, வாஸ்துதேவ பலி படலம்.

பக்கம் 454, சுலோகம் 4.

(1) கருத்து. எமன் பொருட்டு பாயசத்தைக் கொடுக்கவேண்டும். கந்தர்வரிடத்தில் கந்தம் கூறப்படுகிறது. ப்ருங்க ராஜருக்கு சமுத்திரத்தில் உற்பத்தியான மத்ஸ்யத்தையும் மிருகரிடத்தில் மத்ஸ்யத்தோடு கூடின அன்னத்தையும் நிருதியின் பொருட்டு பிண்ணாக்கு அன்னத்தையும் எண்ணெயையும் புத்திமானானவன் கொடுக்கவேண்டும். (இதை கொடுக்காதவன் புத்தி கட்டை) இது சைவர்களுக்குச் சொந்தம்.

(2) பலி விஷயத்தில் அசுரர்க்குப் பன்றி மாம்ஸம் கொடுக்கவேண்டுமென்பது.

(3) சேஷருக்கு எள்ளரிசியும் ரோகருக்கு உலர்ந்த மத்ஸ்யமும் வாயுவிற்கு மஞ்சள் கிறத்வஜமும் சமர்ப்பிக்கவென்பது.

(4) ருத்திர மூர்த்தியின் பொருட்டு மாம்சான்னமும் ஆகும். ருத்திர புத்திரர் பொருட்டு நுரையையும், ஆபருக்கு மத்ஸ்யத்தையும் ஆபவத்ஸரென்பவருக்கு மாம்சத்தையும் கொடுப்பிக்கவேண்டும்.

(5) சிவபக்தர்கள் சூலத்திலிருக்கிற "சாகி" யின் பொருட்டு நெய்யையும் மாம்சத்தையும் கொடுக்கவேண்டும். புத்திமானுல் "விதாரிகையின்" பொருட்டு மிகவும் லவணத்தையும் கொடுக்கவேண்டும்.

(6) "பூதனே" யின் பொருட்டு விசேஷமாக எள் ளன்னத்தைக் கொடுக்கவேண்டும். பாராக்ஷஸியின் பொருட்டு காராமணி யன்னத்தைக் கொடுக்கவேண்டும். வீடுகளில் மாம்ஸான்னமும் ஆகும்.

(7) "பாஹ்ய தேவதை" களான எண்மருக்கும் மாம்சங்களின் அன்னம் பலியாகக் கூறப்படுகின்றது.

(8) 'தேவக் கிருஹ' த்தில் அவிசும் "ராஜக்ருஹ" த்தில் மாம்சான்னமும் கொடுக்கத்தக்கது. "சூத்திரக் கிருஹ" த்தில் கள் கூறப்பட்டது. மற்றவிடத்தில் தேன் சேர்க்கவேண்டும். (மச்சத்திற்கும் பதிலாக மாவுசேர்க்க வென்பது.)

(9) "பூஜை" அந்த விஷயத்தில் சிவத்விஜர்கள் கிடைக்காவிடில் அநு சைவர்களாவது ப்ராஹ்மணர்களாவது ஆகும். தேவாலயத்திலும் கிராம முதலானதிலும் சிவத்விஜர் விசேஷப்பட்டவராக விருக்கிறர். தன் வீட்டில் அநு சைவர் அல்லது மஹா சைவர் அல்லது அவாந்தர சைவர்களாவது ஆசார்யர்களாகவிருந்து வாஸ்து ஹோமம் செய்யலாம்.

(10) வாஸ்து பூஜை குறைவுபடின் ஒவ்வோரிடமும் கெடுதியடைகின்றது. ஆகையால் ஆசாரியர், கிராமம், வீடு; சாலை, தேவாலயாதிகளில் வருஷா வருஷம் வாஸ்து ஹோமம் செய்தல் வேண்டுமென்பது.

(11) காமிகம், தந்த்ரவதார படலம் பக்கம் 32.

யாமனத்திலும், மாத்ரு தந்திரத்திலும், பாஞ்சாராத் திரத்திலும், பௌத்தத்திலும், அருஹத் மதத்திலும் லாகுளத்திலும், வைதிக மதத்திலும், மற்றும் வேருய வழிகளில் அந்தந்த சாஸ்திரங்களால் தங்களுக்குச் சொந் தமாகிய ஆகம சாத்திரப்படி ஆதி சைவர்கள் தீக்ஷை முதலிய அந்தலிங்க ஸ்தாபனம் முதலானவற்றைச் செய் யலாம்.

அன்பர்களே! இக்காரணங்களால் ஆகமங்கள் பிற் காலங்களில் எழுதப்பட்டனவென்று தெரிகிறது. அப் படியிருந்தும் மாமிசத்தை விட்டுவிட அவைகளுக்குச் சம்மதமில்லை. ஆனல், யாவனொருவன் ஆகமம், வேதம், ஸ்மிருதி முதலிய நூற்களோடு நமது மற்றநூற்களிலும் பல கெடுதிகள் உண்டென்று தெரிந்து அவையாவையும் உள்ளதுதான் முறையே வேண்டியதுதானென்று நம்பி மறுபடியும் அதுவே நமது நூல் என்று ஒத்துக்கொண்டு தீரனுயிருப்பவன்தான் இந்து மதத்தை முறையாக நம்பி னவன். ஆனல் அந்த நம்பிக்கைபோல் நடக்கவும் வேண் டும். (பஞ்சமகா பாதகங்கள் சரியென்று ஒப்புக்கொள் வதோடு, ஒரு பிராஹ்மணனேயும், ஐயர், ஐயங்காரர்களை) நிந்தனை செய்யாமல், தனது முன்னேற்றத்தையும் விரும் பாமல் இருக்கவேண்டும். அவன் தீரன்.

பார்ப்பன வழிபாட்டால் வந்த கேடு.

“சோமநாதபுரம்” கோவில்.

ஸௌராஷ்ட்ரே ஸோமநாத்ம்ச
ஸ்ரீசைலே மல்லிகார்ஜுனம்;

உஜ்ஜயின்யாம் மஹாகாளம
ஓங்காரமமலேஸ்வரே.

பரல்யாம் வைஜநாதம்ச
டாகின்யாம் பீமசங்கரம்;
ஸேதுபந்தேது ராமேசம்
நாகேசம் தாருகாவனே.

வாராணஸ்யாம் துவிஸ்வேசம்
த்ரியம்பகம் கௌதமீதடே;
ஹிமாலயேது கேதாரம்
குஸ்ருணேசம் சிவாலயே.

(சௌராஷ்ட்ர தேசத்தில் குஜராத்தியின் ஓர்பகுதி) சோமநாதமும், ஸ்ரீ சைலத்தில் மல்லிகார்ஜுனமும், உஜ்ஜயினில் மஹாகாளமும், அமலேசுவரத்தில் ஓங்காரமும், பாலியில் வைஜநாதமும், டாகினியில் பீமசங்காரமும், சேது பந்தத்தில் (இராமேச்சுரம்) ராமேசமும், தாருகாவனத்தில் நாகேசமும், காசியில் விஸ்வேசமும், கோதாவரிக் கரையில் திரியம்பகமும், ஹிமாலயத்தில் கேதாரமும்; சிவாலய (கைலாசம்) த்தில் குஸ்ருணேசமும் ஆக பன்னிரண்டு

இவை முதலிய புராண வசனங்களால் இத்தலம் ஜோதிர்லிங்காலயங்கள் பன்னிரண்டனுள் முதன்மையானதாகக் கருதப்படுகின்றது. கல்வியறிவற்றவர்களும் கபடு சூதின்றியவர்களுமான பார்ப்பனரல்லாத மக்கள் பார்ப்பனர்களின் பொய்க்கூற்றை நம்பி இத்தலத்தில் அநேக சித்திகள் நடக்கின்றனவென்று இங்கு போந்து இங்குள்ள பார்ப்பனர்களுக்கு விசேஷமான தக்ஷிணைகளைக் கொடுத்து வந்தார்கள்.

## இத்தலத்தின் உற்பத்தி.

———)o(———

பார்ப்பனர்கள் பிறரைக் கெடுத்துச் சுயநலத்தைப் பாதுகாக்க எழுதி வைத்துக்கொண்ட ஆபாசச் சுவடிகளான வேதங்களும் ஸ்மிருதிகளும் முறையே கடவுளாலும் கடவுளின் அருள் பெற்ற பெரியோர்களாலும் திருவாய்மலர்ந்தருளப்பட்டன; என்ற பார்ப்பனப் பொய்க் கூற்றை நம்பி அதன்படி பார்ப்பனர்களுக்கு அடிமைகளாய்த் தனமும் மானமுமிழந்துவந்த பார்ப்பனரல்லாதாரை மீட்க அவதரித்த ஸ்ரீ புத்த பகவான் மஹா வீரஸ்வாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட ஸத் தர்மமானது (உண்மை நெறி) மக்களை நல்வழியிற் செலுத்திவந்ததைப் பொறுக்கமுடியாத பார்ப்பனர்கள் அந்நன்னெறியை ஒழிக்கச் செய்த சூழ்ச்சிகள் பலவற்றுள் இதுவும் ஒன்று. இது சத்தர்ம (புத்த சமயம்) சந்திரனுக்கு இராகுவாகிய சங்கராசாரியர் பிறகுடி மக்களைக் கெடுக்க ஊரூராய்த் திரியு (திக்விஜம்) ங் காலத்து குஜராத்தியிலுள்ள பார்ப்பனர்களும் தானும் கலந்து பேசியதன் பயனாக ஓரிடத்தில் சிவலிங்க மொன்றைப் புதைத்து வைத்து "கைலாச நாதராகிய பரமசிவன் புத்த ஜைனர்களை ஒடுக்கவும் பார்ப்பனத் தொண்டர்களைப் பாதுகாக்கவும் கைலாசத்திலிருந்து எழுந்தருளி கூர்ச்சர (குஜராத்) தேசத்தில் சிவலிங்க ரூபமாகப் பூமிக்குள் இருக்கின்றார்; அவரைப் பிரதிஷ்டித்துப் பூஜை பண்ணுங்கள்; பௌத்தர்கள் நாசமாவார்கள். உலகம் க்ஷேமத்தையடையும் என்று கணேசன், விஷ்ணு, துர்க்கை, பைரவன் முதலிய தேவதைகள் சொப்பனத்தில் வந்து தங்கள் தங்களிடம் சொல்லிச்

சென்றதாகக் கதையைக்கட்டி அக்நாட்டு (குஜ்ராத்தி) அரசர்களுக்கு ஒவ்வொருவனும் தனித்தனியாகச் சென்று அறிவிக்க அரசர்களும் ஒரே விஷயத்தைப் பல தேவதைகள் வெவ்வேறு கிராமத்தவர்களான பார்ப்பனர்கள் வாயிலாக நமக்கு அறிவித்தார்கள். ஆதலால் இது முற்றிலும் உண்மையென்று நம்பி அவர்கள் குறிப்பிட்ட இடத்தில் ஆலயங்கட்ட ஆணை தர அங்ஙனமே ஆலயங் கட்டுங்கால் பார்ப்பனர்களும் சும்பக பாஷாணமென்னும் காந்தக் கல்லினுற் கற்பக் கிருகத்தின் உட்புறத்தில் வேலை செய்து முடித்துச் சிவலிங்கமானது ஒரு புறத்திலும் சாராமல் அந்தரத்திலேயே நின்றுகொண்டிருக்கும்படிச் செய்தார்கள். அக்காலத்தில் அக்நாடு ஆறுபேர் அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. உண்மையறிய ஆற்றலற்ற இவ்வரசர்கள் ஈதென்ன விந்தை! மூர்த்தி நிலந் தொடவில்லையே எனக் கேட்கப் பார்ப்பனர்கள் சாதாரண மனிதர்களால் பிரதிஷ்டிக்கப்பட்ட லிங்கமானுலன்றோ தரையில் படும்; கைலாசநாதர் தானகவே லிங்க ரூபமாக எழுந்தருளியதால் தரையில் படவில்லையென்று சொல்ல அக்கூற்றையும் அங்ஙனமே நம்பி ஏமாந்துவிட்டார்கள். அதிக விமரிசையாக ஆலயத்திற் கருகாமையிலேயே அன்ன சத்திரங்கள், வேத பாடசாலைகள் முதலியன பார்ப்பனர்களுக்காகக் கட்டப்பட்டன. பொன்னும் மணிகளும் மலை மலையாகக் குவிந்தன. இவ்விதமாக அறுநூறு வருஷங்களுக்குள் அநியாயப் பார்ப்பனர்களின் அக்கிரமச் செலவுகள் அனைத்தும் போகப் பதினெட்டு கோடி ரூபாய்கள் பெறும்படியான இரத்தினங்களும் இருபது கோடி ரூபாய் பெறுமானமுள்ள நகைகள் மற்றப்பட்டாடைகள் முதலியனவும் மீதியாயின பதினேராயிரம் பார்ப்பனமக்கள் அங்கேயே குடியிருந்து விலாப்

புடைக்கத் நின்று பார்ப்பனரல்லாதார் என்றென்றும் தங்களுக்கு அடிமைகளாகவே யிருக்கும்படியான சூழ்ச்சிகளைச் செய்துகொண்டிருந்தார்கள். அக்காலத்தில் நமது நாட்டில இருந்த அரசர்கள் பலரும் இக்கோவில் அர்ச்சக பார்ப்பனர்களுள் தலைவனுக்குச் சிஷ்யர்களாக இருந்தார்களெனத் தெரிகிறது. கூர்ஜர நாட்டு அரசர்கள் அறுவரும் சிஷ்யர்கள் என்பதைக் கூறவேண்டியதில்லையே.

துலுக்கனின் வருகையும் ஆலயத்தின் அழிவும்.

இத்தருணத்தில் இந்து மதத்தை அழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்ட துலுக்க அரசர்களின் முதல்வனான "முஹமது கஜனி" என்பான் சோமநாத க்ஷேத்திரத்தைக் குறித்துக் கேள்விப்பட்டுக் கொள்ளையடிக்க எண்ணி 25000 இருபத்தையாயிரம் சைன்யங்களோடு புறப்பட்டு வந்துகொண்டிருந்தான். வழியிலேயே குஜராத் அரசர்களின் ஒற்றர்கள் உண்மையை உணர்ந்து தங்கள் அரசர்களுக்கு அறிவிக்க அவர்களும் ஆசானாகிய அர்ச்சகப் பார்ப்பனனை அணுகி (துலுக்கனின் வருகையும்) தங்களிடம் 4½ நாலரை லக்ஷம் சைனியங்கள் இருப்பதால் அவனை நாட்டில் வரவிடாமல் வழியிலேயே சென்று அடித்துத் துரத்திவிடலாம். சுவாமி! உத்திரவு கொடுங்கள் என்று விண்ணப்பித்தார்கள். அக்குருவோ; கோழைப்பயல்களா? நீங்கள் சொல்வதற்கு முன்னரே கணேசனும், காளியும், பைரவரும், என்முன் தோன்றி மிலேச்சன் வருகிறான். அவனால் அரசர்களுக்கு யாதும் கேடு விளையாவண்ணம் காப்பாற்றுவோம். ஆனால் விசேஷமாக ஹோமங்களும் பிராமணர்களுக்கு அன்னதா

னம், சுவர்ணதானம், கன்னிகாதானம் முதலியனவும் நடைபெறவேண்டும் என்றும் சொல்லி மறைந்தார்கள். ஆதலால் யுத்தத்திற்குப் போகவேண்டாம் புராணங்களி லும் பிராமண வாக்கிலும் உங்களுக்கு வரவர நம்பிக்கை குறைந்து வருவதால் இவ்வித இடையூறுகள் ஏற்படுகின் றன. இன்று தொட்டாவது நம்பிக்கையோடு ஒழுகுங்கள்; யுத்தத்திற்குச் செலவழியும் பொருளைப் பிராமணர்களுக் குத்தானம் கொடுத்துவிடுங்கள் என்று சொன்னான். அர சர்களும் தாம்கொண்ட கருத்தைக்கைநழுவவிட்டு அர்ச்ச கர்கள் ஆணைப்படிப்பொருளைச் செலவிட்டு வந்தார்கள். குருவும் 1008 யாகசாலைகள் உண்டுபண்ணி அநேகம் பார்ப்பனர்களை வைத்து ஹோமங்களும் வருண ஜபமும் நடத்திக்கொண்டு வந்தான். அன்றியும் ஜோதிடம்தெரிந் தவர்களென்று பல பார்ப்பனர்களைக் கொண்டு சுபாசுப பலன்களை அவ்வக்காலங்களில் அரசர்களுக்குத் தெரிவித் தும் வந்தான். முகமது கஜனியும் சைனியங்களும் எட்டு மைல்களுக்கப்பால் வந்துவிட்டார்கள். கஜனி முதலில் பயந்தானெனினும் தன்னை எதிர்க்க யாரும் வராததைக் கண்டு உண்மையை உணர்ந்துவர ஒரு ஒற்றனை அனுப்பி னான். துலுக்கனின் வருகையை உணர்ந்த பார்ப்பனர் கள் ஏற்கனவே இருக்கும் 11000 (பதினோராயிரம்) பேர் வழிகளும் தற்போது வந்திருப்பவர்களும் கலந்து யோசி த்து 800 (எண்ணூறு) பேர் தவிர மற்றவர்கள் அகப் பட்டதைச் சுருட்டிக்கொண்டு ஓட்டம் பிடித்தார்கள். கஜனியின் வேவுகாரன் துலுக்கனுகையால் நெருப்பெரிந் துகொண்டிருக்கும் தீக்குழிகளும், நெய், கோதுமை முத லிய தின்பண்டங்கள் அக்குழிகளில் பலர் சொரிந்து கொண்டிருப்பதும் பலர் கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டு ஜபம் செய்வதும் பார்த்து வியப்படைந்தவனு

ய்த்தன் தலைவனை அணுகி, அரசே! பெரிய தீக்குழிகளில் பலர் கோதுமை முதலிய தான்னியங்களையும் நெய்யையும் சந்தனக்கட்டை முதலிய மற்றும் பல விலையுயர்ந்த பொருள்களையும் போட்டு எரிக்கிறார்கள். அன்றியும் மனிதர்களின் தலைகள் பல தண்ணீரில் அசையாமல் மிதந்துக் கொண்டிருக்கின்றன. ஊரெல்லாம் புகையால் மூடிக் கொண்டிருக்கிறது வேறொன்றுங் காணேன் எனத் தெரிவித்தான். * கஜனியும் அறிவிலிகளாகிய இவர்களை அடக்குவதில் அச்சமொழிந்தவனாய் சைன்யங்களோடு கோரகப் புறப்பட்டு வந்துகொண்டிருக்கும்போது குருவானவன் ஏனைய அரசர்களைப் போலத் துலுக்க அரசனையும் வசப்படுத்த எண்ணினவனாய் தான் ஊர்ந்துவருகிற முத்துப்பல்லக்கைச் சிங்காரித்துச் சீடர்களும் கோவில் தாசிகளும் புடைசூழ எதிர்கொண்டழைத்து வரும்படி அனுப்பக் கஜனியும் அப்பல்லக்கைத் தன் ஒட்டைமீது போடச்செய்து ஆலயத்திற்குள் வந்து சேர்ந்தான். கோயில் மூலஸ்தானத்தில் சுவாமிக்கு எதிரிலேயே கஜனிக்காகப் பெரிய சிங்காதனம் போட்டிருந்தது. அவ்வாசனம் ஐம்பது லக்ஷ ரூபாய்கள் மதிப்புள்ளதும் "வியாசபீடம்" எனப்பெயர் வாய்ந்ததுமாம். கோயிலில் மூர்த்தியானது விலையுயர்ந்த ஆடையாபரண அலங்காரங்களால் மிக அழகு செய்யப்படிருந்தது.

---

* அப்பொழுது அங்கிருந்த மூகம்மது கஜனியினுடைய குருவாகிய மௌல்வி ஒருவர் "இது காபரினுடைய ஜின்னு (பிசாசு)களின் வேலையாகும். குரான் வாசித்துப்போனால் பிசாசுகளெல்லாம் ஓடிவிடும்; நாம் ஜெயமடையலாம்" எனத் தைரிய வார்த்தைகள் கூறியனுப்பினர்.

## கஜனிக்கும் குருவுக்கும் சம்பாஷணம்.

கஜனி ஆசனத்தில் உட்கார்ந்தபின் பேதை அரசர்களை எமாற்றும் பேய்ப் பார்ப்பனர்களின் முதல்வனுன குருவானவன் கஜ்னியைப் பார்த்து ஓ இராஜாதி ராஜனே! தங்களின் நேர்மையான ஆட்சியன்றோ பிராமணர்களாகிய எங்களைக் காப்பாற்றுவது "நாவிஷ்ணு: ப்ருதிவிபதி:" (விஷ்ணுவல்லாதவன் அரசனன்று) விஷ்ணுவின் அவதாரமாகிய தங்களைக்குறித்து இங்குள்ள பேரவிராஜர்கள் என்னென்னவோ உளறினர்கள். என் சொல்லம்புகள்தான் அவர்களை அடக்கின. ஆதலால் தாங்கள் பார்ப்பனராகிய எங்களுக்கு எவ்வித இடையூறும் செய்யலாகாது. மூன்று கோடி ரூபாய்கள் காணிக்கையாகத் தங்கள் தாளிணையில் சமர்பிக்கின்றேன் என்று சொன்னுன்.

### கஜனியின் கோபம் குருவைத்துன்புறுத்தல், கோயிலையும் மூர்த்தியையும் அழித்தலும் கொள்ளையும்.

ஆடம்பரமான கோயில் அலங்கரிக்கப்பட்ட மூர்த்தி, அழகிய சிம்ஹாசனம், கையிலகப்பட்டதைக் கவர்ந்துகொண்டு கம்பிநீட்டிய கயவர்கள் போக எஞ்சியிருப்பவர்களும் ஆபிசார (சூனியம்) மந்திரம் ஜபித்துக்கொண்டிருப்பவர்களுமான பார்ப்பனர்கள், எரிந்துகொண்டிருக்கிற ஆயிரக் கணக்கன அக்கினிக் குழிகள், அதிற் சொரியும்படிக் கொட்டிவைக்கப்பட்ட விலையுயர்ந்த பண்டங்கள், அக்கிரமமே ஒருருவெடுத்துவந்த அர்ச்சகக் குருவின் அலங்கார வேஷம் இவைகளில் கவனம்

செலுத்தியிருந்த கஜனி; காணிக்கையைப் பெற்றுக் கொண்டு, எங்களை விட்டுவிடவேண்டுமென்ற சொல்லைக் கேட்டவுடன் சிங்கத்தைப்போற் சீறி எழுந்து அட காபிர் பன்றியே! என்னைப்பிச்சைக்காரனென்று நினைத்தாய், கல்லைக் கடவுளாக வணங்கும் கயவரைக் கருவறுக்கவன்றோ இங்கு போந்துள்ளேன் என்று கர்ஜிக்கக் கன்னெஞ்சக் குருவானவன் கண்களும் கருத்தும் கலங்கக் கஜனியின் காலில் விழுந்து ஐயனே! இதெல்லாம் எங்கள் வயிற்றுப்பிழைப்புக்குள்ள ஏற்பாடுகள். எங்களைக் காக்கவந்த கடவுளே! உயிர்ப்பிச்சை தந்தருளுக; என்று பலதரம் அழுது வேண்டிக்கொண்டான். உடனே கஜனி இல்லையில்லை உங்களுக்கு நான் இரக்கங்காட்டேன். பகுத்தறிவில்லாப் பாமரர்களை ஏய்த்துப் பணத்தையும் மானத்தையும் பறித்து மக்களின் பசிப்பிணியைப்போக்கத்தக்க பற்பல அரிய பண்டங்களை அநியாயமாக அக்கினியிலிட்டு அவைகளைச் சாம்பலாக்குகிற அத்தீயையும் கல்லையும் கடவுளாக வணங்கும் நீங்கள் இத்தகைய அடாத செய்கைகளினால் பல துறையிலும் கடவுளுக்குத் துரோகிகளாதலால் உங்களுக்கு இரங்குவது தருமமல்லவென்று அதட்டிக் கூறிப் பொக்கிஷத்தைக் காட்டெனச் சொல்லச் சிலவற்றைக் காட்டி இவ்வளவுதான் உள்ளது எனப் பகர்ந்தனன். கஜனி இக்கோயிலைக் குறித்த விவரமனைத்தும் ஒற்றர்களின் எழுத்து மூலமாக முன்னரே தெரிந்திருப்பவனாகையால் அவ்வெழுத்தைக் காண்பித்துக் குருவின் கைவிரலில் எண்ணெய்த் துணியைச் சுற்றித் தீ வைக்கச் சொல்ல அவ்வாறு செய்யவே அனைத்தையும் காட்டிவிட்டான். கஜனியானவன் பொருள் எல்லாம் வாரியெடுத்த

வுடன் தன் படைகளை ஏவிக் கோயிலையும் இடிக்கச்செய் தான். ஆலயமானது அவனியோடவனியாய் அமர அது வரை அந்தரத்தில் நின்றிருந்த அற்புத லிங்க மூர்த்தி யும் காந்தக் கல்லின் கவர்ச்சியினின்றும் விடுபட்டுத் தரையில் விழுந்து புரண்டது. இதைப் பார்த்த அக் கொடிய துலுக்கனுக்குப் பின்னும் கோபம் அதிகரித்துத் தன் கையிலிருந்த தண்டாயுதத்தால் அவ்விக்கிரகத்தை ஓங்கி அடிக்க அது சின்னபின்னமாகச் சிதறி உடைந்து இரத்தம் விரிட்டு ஓடுவதை யொப்ப, மாணிக்கம் முதலிய மணிகளையும் பார்ப்பனச் சமயத்தையும் அவர்களை வணங் கும் பேதைகளையும் பரிகசிப்பதை யொப்ப மூத்து வைரம் முதலிய இரத்தினங்களையும் கொட்டிற்று. பார்த்தான் கஜனி முஹமத்; அழைத்தான் பார்ப்பனக் குருவை; அறைந்தான் அடியிற்கண்ட வண்ணம். அட பதரே! கல்லை வணங்குவது கடவுளுக்குச் சம்மதம் இல்லையென்று சொன்னேன், அவ்வுண்மையைக் கண்கூடாகப் பார்; கல்லை உடைத்தெரிந்த எனக்குக் களிப்பைத் தரும் நவம ணிகளையும் கல்லை வணங்கும் உங்களுக்குக் கடுந்துயரத் தையும் அளித்துவிட்டார். இன்னோரன்ன இழிமொழி கள் பேசியபின் எல்லாப் பொருளையும் ஒட்டைமீது ஏற்றச் செய்து அதோடு ஆறுயிரம் பெண்களையும் ஐயாயிரம் ஆண்களையும் கைதிகளாகப் பிடித்துக்கொண்டு தன் நாடு திரும்பினன். இப்பதினோராயிரம் கைதிகளில் (800) பேர்மட்டும் பார்ப்பனர்கள்; ஏனையோர் நம்மவர்கள். ஏன் அவர்களுக்கு இக்கதி வந்தது? பார்ப்பனனைக் குரு வாக நம்பினதால். இவர்களில் ஆண்களுக்குக் குதிரை களுக்குப் புல் வெட்டுதல் முதலிய வேலையும் பெண்களுக் குத் துலுக்கச் சிப்பாய்களின் வைப்பாட்டியாயிருத்தலை

•

யும் கட்டளையிட்டான். உணவும் முறையே குதிரை தின்று மிகுந்த கடலை கொள்ளு முதலியன ஆண்களுக்கும், பெண் களுக்குத் துலுக்கர்களின் எச்சிலுமாம் இவ்விதமாகப் பாரத நாட்டின் எல்லையைக்கடந்து ஆப்கானிஸ்தான் சென்றவுடன் அங்குள்ள பெரியமௌல்வி பார்த்து ஐயோ அரசே! இக்காபிர்களுக்கு ஏன்தீனிபோட்டு வைத்திருக் கிறீர்? இது நமது நபிநாயகத்தின் திருவாணைக்கு ஏற்ற தல்லவே. ஆதலால் கொன்றுவிடும் என்று சொல்ல சூத் திரத்திற்கு அடிமையான அக்கொடிய துலுக்கத்தலைவன் ஆண்களையெல்லாம் கொன்றுவிட்டு பெண்களைப்பிடித்துக் கொண்டுபோய் விட்டான்.

இச்சரித்திரம் விரிவான புத்தக ரூபமாக உருது மொழியிலும் குஜராத்தி மொழியிலும் எழுதி அச்சிடப் பட்டிருக்கிறது. பார்ப்பனர் "பாரத நாடு" என்னும் நம் தாய்நாட்டிற்குச் செய்த தீங்குகள் பலவற்றுள் நம் தமிழ் சகோதரர்களின் உணர்ச்சிக்காக ஒன்றை மட்டும் சுருக்க மாக உதாஹரித்தேன். மற்றவையும் "ஸ்தாலீ புலாக நியாய" த்தால் (பதக்கு அரிசிச்சோற்றின் பதம் ஒரு சாதத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுவதுபோல்) தெரிந்து கொள்ளுங்கள்.

இதன் குறிப்பு.—தயானந்த சரஸ்வதியால் எழுதப் பட்ட சத்தியார்த்தப் பிரகாசத்தில் பதினோராவது அத்தி யாயத்தில் பார்க்க.

## காசிக் கரு வெட்டல்.

"தில்லையைக் காணக் காசியிலிறக்க ஆரூரப்பிறக்க எல்லையிற் பெரிதாம் அருணையை நினைக்க வெய்தலால் முத்தி" என்றுரைக்க.

"காஸியாம்து மரணன் முக்திர்
ஜனனுத் கமலாலயே
தர்சனு தர்ப்ரஸரஸி
ஷ்மரணு தருணுசலே".

என்பதை அருணுசல புராணத்திற் பார்க்க.

இவ்வாறு பௌராணிக மதத்திலுள்ள முத்தி முறைகளை ஜனங்களுக்குப் போதித்துப் பல விடங்களிலும் பல விதமாகப் பார்ப்பனர்கள் மனிதர்களைக் கொலை புரிந்து ஜீவித்து வந்தார்கள். இப்படிச் செய்து வந்ததில் உதாரணமாக ஒன்றை மட்டும் எடுத்து விவரிக்கின்றேன்.

காசி க்ஷேத்திர மென்கிற நகரத்தில் இறக்கமுத்தி யென்று ஜனங்களுக்கு ஓதி யுணர்த்தினர். அக்காரணத்தால் காசிக் கருவெட்டலென்றவோர் படுகொலை நிகழுமிடமும் ஏற்பட்டு ஆங்கு படுகொலைகளும் நடந்துள்ளன. எவ்வாறெனின், பார்ப்பனர்கள் இப்போது நடப்பது போலவே அங்குமிங்குஞ் சென்று "காசியிலிறக்க, தெரிசிக்க, நினைக்க, புண்ணியமுண்டென்றும்; மோக்ஷம் உண்டென்றும் ஜனங்களுக்குப் போதித்து வந்தார்கள். ஆதலால், மனிதர்கள், இக்காலத்தில் போகிறதுபோலவே, காசிக்கு யாத்திரை போய் வந்தார்கள். அப்பொழுது காசி நகரத்திலுள்ள.பார்ப்பனர்களை கோடீஸ்வரர்களாக யிருந்ததாகவும் சொல்லுகிறார்கள். தெய்வ பக்தியும், குரு விசுவாசமும் முற்காலத்தில் அதிகமாக மக்களுக்கு மூடத்தன்மையாக யிருந்ததென்று தெரிய வருகிறது. அப்படியே தனப்பெருக்கும் ஞானமின்மையும் நிரம்பி யிருந்த காலம் அல்லவா? காசியாத்திரையை எண்ணி எண்ணி வயது முதிர்ந்தவர்களும், சிறுவயதுடையவர்க

ளும் குடும்ப சகிதமாகக் காசியாத்திரை செய்து புண்ணி யம் சம்பாதித்து வருவோமென்றும், சிலர் அவ்விடத்தி லேயே இறந்து மோட்சம் அடைவோமென்றும், எண் ணிப் பணத்தை ஏராளமாயெடுத்துக் கொண்டு குடும்ப சகிதமாய்ப் போகும் பொழுது, வழியில் அக்காலத்துள்ள திருடர், வழி பறிப்போர், முதலாகிய துஷ்டர்களின் பல இடையூறுகளையுங்கடந்து காசி நகரத்தையடைவார்கள். இக்காலத்தில் நிகழ்வதுபோலவே அந்நாட்டில் யாத்தி ரைக்காரர்களுக்கு உபகரிப்போராகிய பார்ப்பனர்களும், அவர்களுக்கு உடனிற்போரும் இவர்களையழைத்து 'இனி மைகூறி, இடவசதி முதலானவைகளைச் செய்துவருவது வழக்கம். அவர்கள் பிறகு காசியிற் செய்யும் சடங்குக ளாகிய ஸ்நானம், தரிசனம், ச்ரார்த்தம், யாத்திரை, சந் தர்ப்பணை, கோதானம், பூதானம் முதலிய கிரியைகளின் வழியாக இவர்களிடத்திருக்கிற தனத்தை, எள்ளிலி ருந்து எண்ணெய் யெடுப்பதுபோலத் தந்திரமாய்க்கசக்கி யெடுப்பது இவர்கள் நீண்டகால உத்தியோகமாம். இவற் றைச் செய்து முடித்த பின்னர், அவர்களிடம், பணங்க ளும், அழகுள்ள பெண்களும் இருக்கக்கண்டால் கீழ்வரு மாறு உபதேசிக்க ஆரம்பிப்பார்கள். அஃதாவது, பார் வதி சமேதராகப் பரமசிவனும் மற்றுமுள்ள தேவகணங் களும், ஒன்று சேர்ந்து வந்து மரணத்தருவாயில் காட்சி கொடுத்து முக்தி கொடுக்குமிடம் இவ்விடத்தில் ஒன்றி ருக்கிறது. அவ்விடத்திற் பல இருடிகளும், இராஜாக்க ளும், பிராஹ்மணர்களும், தபசிகளும் தங்கள் சரீரத்தை யிழந்து முக்தி பெற்ற இடமாகும்.

அவ்விடத்தை அடைந்து தரிசனஞ் செய்வது ஜென் மாந்திரங்களில் செய்த புண்ணியமில்லாமற் கிட்டுவது

அருமை. பெரிய தபசிகளும், ஞானிகளும், பிராஹ்மண விசுவாசிகளும் ஆகிய புண்ணிய புருடர்களுக்காகவே அவ்விடம் சிவபெருமானல் அமைக்கப்பட்டது என்று பார்ப்பனர்கள் கூட்டங் கூட்டமாகப் பல வடமொழிப் பாட்டுகளைப் பிரமாணமாகப் பிதற்றி யாத்திரைக்காரர்களுக்குப் போதிப்பார்கள். இதைக்கேட்ட யாத்திரைக்காரர்கள் விருப்புற்று சுவாமிகளே! எங்களுக்கு அப் புண்ணிய இடத்தைத் தரிசிக்கச்செய்யுங்கள் என்று கெஞ்சிக்கேட்டுக் கொள்ளுவார்களாம். உங்கள் விருப்பின் படியே செய்துவைப்போம், அதற்குவேண்டிய பூஜோபகரணங்களைச் சேகரித்து ஆங்குள்ளோர் உத்திரவு பெற்றுப்பின்னர் அழைத்துக் செல்லுவேன் என்பார்களாம். இது நிற்க!

அந்தக் கருவெட்டென்ற இடமானது சிறிதாயும், மதிலாற் சூழப்பட்டதாயுமிருக்கும். அதனுள், ஓர் பக்கத்தில் ஆழமுள்ள கிணற்றுக்கொத்த ஒரு பள்ளமும் அதன் மத்தியில் சிவலிங்கமொன்றும் அமைந்துள்ளது. கிணற்றுக்குமேல் சங்கிலியினல் உருட்டப்பட்ட ஓர் சக்கரமுள்ளது. கிணறேவெனிற் பாதி மூடியிருக்கும். அக் கிணற்றுக்குள் பல தீபங்களையும் எற்றிவைத்திருப்பார்கள். அக்கிணற்றைச் சுற்றிலும் பார்ப்பனர்கள் உட்கார்ந்து மந்திரோச்சாடனம் பண்ணிக்கொண்டு, வரும் யாத்திரைக்காரர்களுக்குத் தவசியைப்போல நடத்திக்காட்டுவார்கள். பிறகு, குருக்களைக் கெஞ்சிக்கேட்டுக்கொண்ட யாத்திரைக்காரர்கள் கொலைக்களமென்றறியாத அந்த மோச இடத்துக்கு அழைத்துச் செல்லப்படுவார்கள். சென்ற பின்னர், இளம் பெண்களையும் சொத்துக்களையும் தலைவாசலில் நிறுத்தி மற்றுமுள்ள வயது சென்ற புருடர்

களையும், பெண்களையும் (முத்தி கொடுக்குங் கருவெட்டென்ற மோச இடத்துக்குள்) தரிசிக்க வாருங்களென்று அழைத்துப்போவார்கள். ஆண்டு சென்றபின்னர், பள்ளத்திலுள்ள சிவலிங்கத்தைக் காட்டி பார்வதி சமேதபரமேசுவரரும் மற்றுமுள்ள தேவகணங்களும், சத்தரிஷிகளும், இப்போது வருவார்; ஊன்றி நோக்குங்கள் என்று சொல்ல, ஒன்றுமறியாத இவ்வேழை யாத்திரை வாசிகள் அன்போடு அப்பாவிப் பார்ப்பனருடைய மோச உரையைக்கேட்டுக் கீழே தலைகுனிந்து பார்க்குந்தருணத்தே, மேல் தொங்கவிட்டிருக்கும் இரும்புச் சக்கரத்தை யுருட்டிவிடுவார்கள். அது கழுத்தைத் துண்டிக்கக் கிணற்றில் வீழ்ந்து இறந்துவிடுவார்கள். அந்தோ! அவ்வேழை மக்கள் இறந்த பின்னர், தலைவாசலில் நிறுத்திவைக்கப்பட்ட அவ்வாலிபப் பெண்களையும், சொத்துக்களையும் அப்பார்ப்பன மாக்கள் உரிமையாக அடைந்துவருவது வழக்கம். இப்பார்ப்பன மாக்கள் "காசியில் இறக்க முத்தி" என்று சொல்லுகின்ற வாக்கியத்தை அடியாகக்கொண்டு உபதேசித்து இத்தகைக் கொடுஞ் செய்கைகளைக் காசி நகரத்தில் அநேக காலமாய் நடத்திக்கொண்டு வந்தார்கள். தற்காலம் மாட்சிமை தங்கிய நமது ஆங்கிலேய அரசாட்சியரால் இக்கொடுஞ் செய்கைகள் தடுக்கப்பட்டிருக்கின்றன. இதுபோன்ற பல இந்து மதாச்சாரக் கொடுமைகளும் காருண்ணிய கவர்ன்மெண்டாரால் தற்காலம் தடுக்கப்பட்டிருக்கின்றன. அதாவது சககமனம் (உடன் கட்டையேறுதல்) காளி கோவில் நரபலி முதலியனவாம்.

காசியின் இரண்டாவது மோசம் அதாவது அரசாங்கத்தாரால் அக்கருவெட்டல் தடுக்கப்பட்ட பின்னர் மற்றுமொரு சூழ்ச்சியால் அவ்வன் கணார்களா

டிய பார்ப்பனர்களோ வென்றால் யாத்திரை வாசிகளைக் கொலை செய்து ஜீவனோபாயம் சிறிதுகாலம் செய்து ஜீவித்து வந்தார்கள். அந்த சூழ்ச்சி எவ்வாறெனின் சில காலத்திற்கு முன் படிப்பும், நாகரீகமும், முறையாக இக்காலத்திலுள்ளதுபோலில்லை என்று எவர்களும் அறி வார்களல்லவா? அக்காலங்களில் தனவான்கள் ஆடை களையும், ஆபரணங்களையும், மிகுதியாயணிந்து தனது தனப் பெருக்கத்தைப் பிறருக்கு அறிவிப்பது வழக்கம் இப்போதும் அது முற்றும் குறைந்தபாடில்லை. சில அறிவீனர்கள் தங்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு அதிகமாக ஆபரணங்களை அணியச் செய்து அழகு பார்க்கும் காரணத்தால் குழந்தைகள், திருடர்கள் கையினால் கொலையுண்டு போவதை அடிக்கடிக் கேள்விப்படுகிறோமல்லவா? அவ்வாறே அக்காலத்தில் காசி யாத்திரை செய்பவர்கள், ஆணாயினும் பெண்ணாயினும் மிகுதியான நகைகளணிந்து காசிக்கு வருவார்கள். இங்ஙனம் யாத்திரை வாசிகளுக்கு உடனிருந்து கருமஞ் செய்விக்கும் குருக்கள் அல்லது பார்ப்பன புரோகிதர்களிடஞ் செல்லுவர். அப்புரோகிதர் கொலை பாதகரில், கொலை செய்யும் இரண்டு குண்டாக்களையும் (தடிச் சோம்பேறிகள்) பல போக்கிரிகளையும் உடன் வைத்திருப்பவர்கள். அக்குண்டாக்களோ? 3, 4, 5-மணி நேரம் ஜலத்தினுள் மூழ்கியிருக்குந் தன்மையில் பயிற்சி பெற்றவர்கள், இப்புரோகிதன் தன்னையடைந்த யாத்திரைக்காரர்களை அழைத்துக் கங்கையில் சங்கற்ப ஸ்நானம் செய்யப்போகுந் தருணத்தில் குண்டாக்களிலொருவனை உடன் அழைத்துச் செல்லுவான். கங்கையை அடைந்து மூழ்குந் தருணத்தில், இக்குண்டாவானவன் இவர்களுடன் தானுமொருவனாய் மூழ்கியவர்களில் மிகுதியாக நகை அணிந்திருக்

கும் ஆணையாவது, பெண்ணையாவது ஜலத்திற்குள் ஒன்று அல்லது இரண்டு மைல்களுக்கப்பால் இழுத்துக் கொண்டு போய்விடுவான். எஞ்சினின்றோர் ஸ்நானம் முடிந்த பின்னர் உடனிருந்து காணமற் போன தமது அருமை மகனெங்கே? மகளெங்கே! யென்று தேடித் திகைக்குங்கால், அந்தக் கங்கைக் கரையிலுள்ள பார்ப் பனர்கள் இக்குருக்களுடன் கூடிக்கொண்டு, மணியடித்து அர்ச்சித்து, கற்பூரமேத்தி பற்பல வடமொழிப் பாட்டு களை பிதற்றி கங்கைக்குப் பூசை செய்வார்கள். அத் தருணம் கங்கைக் கரையில் பெருங் கூச்சலாகவே இருக் கும். காணமற்போனவர்களுடைய பெயரைக் கேட்டு அவர்களைப் புகழ்ந்து பேசுவார்கள் -- கங்கையில் மறைந் தவர்களைக் கங்கா தேவியே வந்து அழைத்துச் சென்று ளென்றும், அவர்கள் மிகுந்த பாக்கியவான்களென்றும், அப்புண்ணியவான்களின் பொருட்டல்லவா எங்களுக் கும் உங்களுக்கும், அக் கங்காதேவியின் தெரிசனங் கிடைக்கப்பட்டதென்றும், இதனால் உங்களுடைய குடும் பம் இனிமேல் மிக க்ஷேமமடையுமென்றும் சொல்லி கங் கையின் பேரிலும் விஸ்வநாதர் பேரிலும், பாக்கள் பாடி அவர்களுடைய துக்கத்தை மாற்றுவார்கள். பறிகொடு த்த யாத்திரை வாசிகள் மனங்கொதித்துக் கண்ணீர் வடிய, மெய் சோர்ந்து கன்றிழந்த பசுவைப் போலும் கதறிக் காசி யாத்திரை போதும், போதுமென்று சொல் லித் தன்னூட்டிற்குத் திரும்புவார்கள். அந்தோ! இவ் வாறு சிறிதுகாலம் நடந்தேறியபின்னர் கங்கா தேவி புனிதர்களை அழைத்து அரியாப் பதவியாகிய சுக வாழ் க்கையை நல்குகிறுளென்ற வசனம் எங்கும் பிரசித்தமாய் விட்டது. இவ்வாறிருக்க,

நமது தென்னாட்டு அரசர்களில், ஓர் அரசனுடைய தாயாரிடத்தில் பார்ப்பனர்கள் சென்று காசி மகிமைகளைப் பற்றி பலவிதங்களாகச் சொல்லி அதற்குச் செல்லவேண்டுமென்னும் ஆசையை எழுப்பவே, அந்த வயது முதிர்ந்த இராணி கங்கா தேவியினிடம் போய் அழியாப் பதவிக்காளாக வேண்டுமென்று எண்ணங் கொண்டாள். என்னையும் கங்கா தேவியார் கருணை புரிந்து தன்னுடன் சேர்த்துக் கொள்ளுவாளா? என்று கேட்டதற்கு அந்த பிராமணர்களுடைய விடை யாதெனின்;—ஓ, மகாராணியே! பிராமணர்களுக்கு ஏராளமாகத் தான தருமங்களைச் செய்கிறவர்களையும், ஏராளமான ஆபரணங்கள் அணிந்துகொண்டிருக்கக்கூடிய புண்ணிய சிலர்களை மட்டுந்தான் தாங்கள் அப்பதவிக்கு அழைப்பது வழக்கம் என்று கூறினர். 'இவற்றைக்கேட்ட நாள் தொடங்கி அந்த ராணியானவள் அரண்மனையிலுள்ள பொருள்களை பார்ப்பனர்களுக்குத் தானமாகக் கொடுத்தும் நகைகளைப் புதிது புதிதாகச் செய்து அணிந்து கொண்டும் வந்தாள். பிறகு தனது புத்திரனுகிய இராஜனோடும் இராஜ அங்கங்களோடும் காசியை நோக்கிப் புறப்பட்டுப்போய் காசியைச் சேர்ந்தார்கள். அப்பொழுது பார்ப்பனர்களும், இராஜ புரோகிதர்களும் கலந்து அநேக லக்ஷம் பெறுமான நகைகளையணிந்துகொண்டிருக்கிற இராணியைக் கங்கையில் இழுத்துச் செல்லுவது எவ்விதமென்று யோசனை செய்து தீர்மானித்தனர். ஆனால் கங்கையோ, ஸ்நானஞ் செய்யுமிடம் மிக ஆழமாயும் பல ராஜ ஸ்திரீகளும் அவரவர்களுடைய தாதிமார்களுஞ் சேர்ந்து ஸ்நானக் கட்டத்தில் நமது மகாராணியை இன்றைக்குக் கங்காதேவி அழைத்துக் கொண்டு போவாளென்று எதிர்பார்க்கிறதாயிருந்தாலும், ஸ்நா

னஞ் செய்யுமிடத்தைப் பெரிய கூடார மறைவினல் முப் பக்கமும் மதில்போல மறைக்கப்பட்டிருந்தது. அந்த மறைப்புச் சுற்றிலும் பல சிப்பாய்களும் துப்பாக்கியுடன் பாராக் கொடுத்திருந்தனர்; ஆதலால் இவர்களுடன் மற்ற ஜனங்களுமிறங்கி ஸ்நானம் செய்ய முடியாமற் போயிற்று. வயது முதிர்ந்த ராணியோ இருக்கப்பட்ட விலையுயர்ந்த எல்லா நகைகளையும் அணிந்து பல தாதிக ளுடனும் ராஜஸ்திரீகளோடும், தனது புத்திரனுகிய ராஜனேடும், 'நான் இன்றைக்குக் கங்கையோடு சமமாகக் கலந்து வாழப்போகிறேனென்று யாத்திரை சொல்லிக் கங்கை வருமென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அக்கிழ ராணியைச் சூழ்ந்த பெண்களெல்லோரும் ஒவ் வொருவருடைய சேலைக்கும் ஒவ்வொருவரும் முடிபோட் டுக் கொண்டனர். அவ்வாறே மந்திரியின் கட்டளைப் படிக்கு கைகளையும் ஒவ்வொருவருடன் ஒவ்வொருவரும் பலமாகக் கோத்துப் பிடித்துக்கொண்டிருந்தனர். கிழ ராணியினுடைய முப்பக்கங்களிலுமிருக்கிற பெண்கள் அடிக்கடி மாற்றி நின்றுகொண்டிருந்தார்கள்.

இப்படியிருக்கப் பார்ப்பனப் புரோகிதர்கள் அங்கு மிங்குந் திரிந்து ஒருவருக்கொருவர் முணுமுணுத்துக் கொண்டும், மார்பைத் தடவி நெடுமூச்சு விட்டுத் துக்கித் துக்கொண்டும் இருந்தார்கள். அத்தருணத்தில் வரிசை யாய் நின்றுகொண்டிருந்த தாதிகளிலொருத்தியைக் கங் கா தேவி நீரிலிழுத்துவிட்டாள். அவர்களோ, முன்ன மே ஒருவருக்கொருவர் சேலையை முடிபோட்டுக்கொண் டிருந்ததினுலும், கைகளை ஒருவருக்கொருவர் பலமாய்க் கோர்த்து உறுதியாய்ப் பிடித்துக் கொண்டிருந்ததினு லும், நாலு ஐந்து தாதிகள் உடனே கங்கையில் விழுந்து

விட்டார்கள். எவ்லோரும் ஒன்றுபோல ஒருவருக்கொருவர் பலமாய்க் கைகோர்த்து இழுபட்டு விழுந்தவளையும் கூட விழுந்தவர்களையும் வலித்து இழுத்து யாவருங்கரையேறினார்கள் இவ்விதம் கங்கையால் இழுபட்டு விழுந்த தாதியும் உயிர் தப்பிப் பிழைத்துக்கொண்டாள். பிறகு இராணியினிடத்தில், மந்திரியும் ராஜாவும் கலந்துபேசி இனிக் கங்கா தேவி தங்களை இன்றைக்கு அழைத்துப் போகமாட்டாள். எனைக்கு எந்தவிதமான பூசைபோட்டாவது, கங்கையை வரவழைப்போம். பிராமணர்களிடத்தில் வேண்டிய விசாரணை செய்து நன்றாய்த்தெரிந்துகொண்டு, கங்கைபோடு தங்களை அழைத்துப் போகாததினால் கவலைப்படவேண்டாம் என்று சொல்லித் தாயாராகிய ராணியை ஸ்நானம் பண்ணிவைத்துத் தாங்கள் வசிக்கும் விடுதிக்குச் சென்றுவிட்டார்கள்.

பிற்பாடு மந்திரியும் ராஜாவும் கலந்து புரோகிதரையும் மற்றும் பல பார்ப்பனரையும் விசாரித்ததில் அவர்கள் சொல்லும் சமாதானங்கள் வருமாறு:--கங்கா தேவி பாவிகள் நிறைந்த இடத்திற்கு வரமாட்டாள். ஆதலால், ராணி தனியாகவே நீரில் இருக்கவேண்டும். கங்கையில் ஸ்நானத்திற்கு வரும் ஜனங்கள் சிப்பாய்களால் தடைசெய்யப்படாமலிருக்கவேண்டும். பாக்கியுள்ள தாதிகளும் ராணியுடைய சரீரத்தைத் தொடாமலிருக்கவேண்டும். மறைப்புக்குள் ராணி இருக்கக்கூடாது. சில பிராமணர்கள் அங்கிருந்து கங்கையை பூசை செய்துகொண்டே இருக்கவேண்டும். அப்போதுதான் கங்கை வருவாள். நிற்க இன்றைக்கு அங்கு வந்தவர்களில் யாரோ பாபிகளிருந்திருக்கலாம், அவர்கள் ராணியைத் தொட்டுக்கொண்டுமிருந்திருக்கலாம். ஆதலால் ராணியை கங்

கா தேவி தொடாமற் போனதென்ருலும் மற்ரொரு தா தியை இழுத்ததற்குக்காரணம் அவள் ஜென்மாந்திரத்தில் பெரிய புண்ணியம் செய்தவளாயிருந்திருப்பாள். பாபங் களில் யாதோ சிறிது சம்பந்தமிருந்திருக்கும். அதனுல் தான் இவளை இச்சமயத்தில் அழைக்காமல் இருந்தது. இவ்வாறு விஷயங்களைச் சொல்லி முடித்தபின், அவர்கள் எல்லோரும் போய்விட்டார்கள்.

பிற்பாடு மந்திரியும் ராஜாவும் விலையுயர்ந்த சாமான் களை சன்மானமாக எடுத்துக்கொண்டுபோய்க் காசி ரா ஜாவைத் தரிசித்தபின் இந்த கங்கா தேவி அழைப்பு விஷயத்தைப்பற்றிச் சிறிது சம்பாஷணை நடந்தது. அப் போது பல பிராமணர்கள் இருந்த காரணத்தால் காசி ராஜாவானர் ராஜா கேட்ட விஷயத்தைப்பற்றி ஒன்றும் பேசவில்லை. சிறிது நேரம் பொறுத்து, இவ்விருவரை யும் அரண்மனைக்குள் அழைத்துச் சென்று காசி ராஜா வானவர் துக்கத்தோடு உள்ள விஷயத்தை உண்மையா ய்ச் சொன்னர். அப்போதே இவர்களைத் தாக்கிறு செய்து, நான் சொன்ன விஷயம் பிராமணர்களுக்குத் தெரிந்துவிட்டால் எவ்வாருயினும் சூழ்ச்சி செய்து என் னைக் கொலை செய்துவிட எத்தனிப்பார்கள். ஆதலால் யான் சொன்ன விஷயம் யாருக்குந் தெரியக்கூடாது, தாங்களும் இவ்வூரைவிட்டு ராணியை அழைத்துக் கொண்டு தங்கள் சுயராஜ்ஜியத்திற்குப் புறப்பட்டுப் போங்கள், என்று சொன்னர். அதற்கு இந்த ராஜாவி னுடைய மந்திரியார் "நான் இதற்குத் தகுதியான ஏற் பாடு செய்து தாங்கள் சொன்ன விஷயத்தைச் சரியாகத் தடுத்து விடுகிறேன். எனக்கு மூன்று மாத காலம் மந் திரி வேலை கொடுங்கள். என்று சொன்னர். அதற்குக்

காசிராஜா இசைந்து அந்த மந்திரியாருக்குக் காசி ராஜாவின் மந்திரி உத்தியோகத்தை ஆறுமாத காலத்துக்குப் பார்க்கும்படியாகக் கொடுத்துவிட்டார். கங்கையோடு சேரப்போன ராணியும் மகாராஜாவும் ராஜாங்கமும் திரும்பி ஊருக்கு வந்து சேர்ந்தார்கள்.

பிறகு இந்தத் தமிழ் மந்திரி "காசிக் கங்கையில் எவ்வாறு ஜனங்கள் இழுக்கப்பட்டுப் போகிறார்கள்" என்பதை விசாரணையில் விளங்கிக்கொண்டார். அது விபரமாவது:— காசி நகரத்தில் கருவேட்டல் நிறுத்தப் பட்ட பிற்பாடு அந்நாட்டிலிருக்கும் பார்ப்பனர்களும் புரோகிதர்களும், அந்நாட்டில் பிரசித்தி பெற்றுள்ள தோணி யோட்டிகளும், வஸ்தாதிகளாகிய ஒருவிதக் கொலைக்காரச் சேம்பேறி மடையர்களும் ஒற்றுமையுடன் கலந்து செய்யும் நிகழ்ச்சியாம். தோணியோட்டிகளும், சோம்பேறிகளும் தண்ணீரில் 3 அல்லது 4-மணி நேரம் மூழ்கிக்கிடக்கப்பழகி ஜனங்கள் ஸ்நானம் பண்ண இறங்கும்பொழுது கூடவே இவர்கள் இறங்கிக் காலைப் பிடித்துக்கொண்டு தண்ணீருக்குக் கீழாகவே ஒரு மைல் இரண்டு மைல் தூரங் கொண்டுபோய் கொலை செய்து நகைகளைக் கொள்ளை கொள்ளுவதும் வழக்கமாம். இந்த நகைகள் கொலை பண்ணுகிறவனுக்கும், புரோகிதனாகிய கங்கா புத்திரனுக்கும் சமமான பங்குள்ளதாம். இவ்வாறு ராணியைச் செய்யமுடியாமல் போயிற்று. பல பாரர்கள் இருந்ததாலும் ராணியென்று நினைத்து வேறொருத்தி காலைப் பிடித்திழுத்ததாலும், அவர்கள் ஜீவித்துக் கரையேறினார்கள்.

இதை நன்குணர்ந்த தமிழ் மந்திரியானவர் ஒரு மாசம் காசி ராஜாவினிடத்திலிருந்து தன் தொழிலை முறை

யாகப் பார்த்ததுடன் பார்ப்பனர்களுக்கும், காசிக் குண் டாக்களென்ற போக்கிரிக் கொலைக்காரர்களுக்கும் பெரும் உதவிகள் செய்து பெருந்தர்மாத்மா என்று பேர் வழங் கும்படி செய்தார்கள். இரண்டு மாதம் போக ஒரு தந் திரமாக தஞ்சாவூர் ராஜனிடத்திலிருந்து கடிதம் வந்த தாகவும், அக்கடிதத்தில் வரைந்துள்ள விஷயங்கள் தஞ் சாவூர் ராஜாவினுடைய முத்து வியாபாரக்கப்பல் சமுத்தி ரத்தின் கண் அமிழ்ந்து போனதாகவும், அக்கப்பல் எவ் வளவோ கோடி ரூபாய்க்கு இரத்தினங்கள் நிறைந்த தென்றும் அவைகளை மூழ்கி எடுப்பவர்கட்கு தினம் ஒன் றுக்கு 10-ரூபாயும் பக்காப் போஜனமும் அளிப்பதாக வும் பிறகு எடுத்த பொருளிலிருந்து தகுந்த பங்கு கொடுப்பதாகவும், அதற்கு எவ்வளவு ஜனங்கள் கிடைத் தபோதிலும் வேலை கொடுத்துப் பெற்றுக்கொள்ளுகிறே னென்றும், ஆனுற் குறைந்த அளவு ஒரு மணி நேரத் துக்குமேல் எவ்வளவு நேரம் அதிகம் மூழ்கிப் பழக்கப் பட்டவர்களானுலும், அவர்களுக்கு அதிகச் சம்பளம் போட்டுக் கொடுப்பதாகவும், மந்திரியினிடத்தில் வந்து தான் வேலைக்கு வர ஒத்துக்கொண்ட நாள் முதல் சம்ப ளமும் பக்கா போஜனமும், கொடுக்கப்படுமென்றும் இத ற்கு ஜனங்களைச் சேர்ப்பதற்குத் தனிச் சம்பளங் கொடுப் பதென்றும் பிரசித்திப்படுத்தினுர்கள். இவ்வாறு விளம் பரம் பண்ணவே; ஒரு மாதத்துக்குள் 370 ஜனங்கள் ஒரு மணி நேரம் முதல் ஐந்து மணி நேரம் வரையிலும் தண்ணீரில் மூழ்கிப்போக வல்லவர்களாய்ச் சேர்ந்தார் கள். பிற்பாடு மந்திரியானவர் இவர்களிடம் கேட் டுக்கொண்டதாவது:— குறைந்தது ஐந்நூறு பேராவது சேர்க்கமுடியுமா? அப்படிச் சேர்த்தவர்களுக்குப் பெரிய

வேலை கொடுப்பதாகவும் சொன்னார். அதற்கு அவர்களில் தலைவனாகிய ஒருவன் 'இப்பொழுது காசியிலுள்ள ஜனங்களில் நீரில் மூழ்கப் பழக்கமுள்ளவர் எல்லோரும் இங்கேயே இருக்கிறார்கள். அதிகமாய் இன்னும் வேண்டுமாயினும் கான்பூரிற் கிடைக்கும் என்று பதில் கூறினான். கான்பூரிலும் இந்த வியாதியுண்டு; கங்கா தேவி நகை போட்டவர்களை இழுத்துக் கொண்டுபோவது. ஆனால் மந்திரியானவர் கான்பூரிலிருந்து ஜனங்களை அழைத்து வர நாளாகும். வேண்டுமானால் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லி நாம் நாளைக்குப் புறப்பட வேண்டும். வீட்டிலிருக்கிற பெண் மக்களுக்கு மாதச் செலவுக்கு ராஜாங்கத்திலிருந்து மாதப்பணம் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டியதிருக்கிறது என்று சொல்லி இந்த ஜனங்கள் அத்தனை பேர்களையும், வைக்கோலினால் செய்த ஓர் பெரிய கோட்டைக்குள் இராத்திரி படுக்கச் செய்து நாளைக் காலையில் 3-மணிக்கு யாத்திரை செய்ய வேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லிவிட்டு நடு நிசியாகிய 12-மணி நேரத்திலே சிப்பாய்களை வரவழைத்து நீரில் முழுகி முழுகிப் பழகப்பெற்றோர் படுத்துக்கொண்டிருக்கும் கோட்டைக்கு ஒரே சமயத்தில் பலவிடங்களிலும் நெருப்பு வைத்து எரியச் செய்தனர். உடனே ஜனங்கள் எழுந்திருந்து ஓடிப்போக முயன்றபோது வழி கிடைக்காமல் நெருப்பில் வந்து விழுந்து வெந்து மாண்டார்கள். அதிலும் தப்பியோடிய சிலரைக் குண்டு போட்டு சுட்டுப்போட்டார்கள். அதற்குப்பிற்பாடு, கங்கா தேவி நகைபோட்டவர்களை அழைத்துத் தன்னுடன் சேர்த்துக் கொள்ளுவதை நிறுத்திக் கொண்டாள் இப்பொழுதுங் கூடப் பூரணமாக நிற்கவில்லை. சில சமயங்

களில் நகைகள் பெருக்க அணிந்துகொண்டு ஏமாந்து நீராடும் ஜனங்களைக் கங்கா தேவி அழைப்பது வழக்கந் தான்.

இக்காலங்களில் பார்ப்பனர்கள் செய்யும் சூழ்ச்சி என்னவென்றால் யாத்திரையாக வந்த ஜனங்கள் பார்ப்ப னர்களால் சொல்லக்கூடிய கருமங்களையெல்லாம் செய்து போகுந் தருணத்தில் அவர்களுடைய விலாசம் முதலிய வற்றை யெழுதின பின்பு விருந்திடுவதுண்டு இதில் இரண்டுபேர் மூன்றுபேரானால் இராத்திரி இராத்திரிக்கே கங்கையில் போய்விடுவார்கள். அவர்கள் கொடுக்கும் சில சாமான்களில் யாதோ கலந்து கொடுப்பதென்பது உலகப் பிரசித்தம். பிணங்களை யெடுத்து கங்கையில் போடுவதற்கும், ஒருவனைக் கொலைபண்ணுவதற்குங்கூட மூன்று ரூபாயிலிருந்து ஐந்து ரூபாய் வரைக்கும் போது மாம்.

இதைக் காசியாத்திரை போகிறவர்கள் நன்றாய் விசா ரித்துத் தெரிந்து வரும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். மேற்படி செய்கை செய்கிறவர்களில் கேதாரக் கட்டிடத்தில் கோவிந்தானந்தன் என்னும் பெயருள்ள ஒருவன் இன்னும் ஜீவித்திருக்கிறதாக ஜனங்கள் தெரிந்துக்கொள்ள வேண் டியது.

இச்செய்திகளை நன்றாய் வாசித்து கவனத்தில் வைத்து விசாரித்து நம்பினால் போதுமானது.

தீர்த்த ஸ்தலங்களும் நமது ஆலயங்களும் விபசா ரம், பொய், திருட்டு, கொலைகள் என்கிற பஞ்சமகாபா தகங்கள் செய்யும்படிக் கற்றுக்கொடுக்கும் ஒரு பஜார் அல்லது பள்ளிக்கூடமாக முடிந்ததைப் பற்றி யார்தான் வருந்தாமலிருக்க முடியும்.

முற்றிற்று.

# பகுத்தறிவு நூற்பதிப்புக்கழக வெளியீடுகள்.

---

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பெண் ஏன் அடிமையானாள்? (ஈ. வெ. ரா.) | 0 | 5 | 0 |
| 2. | முன்னேற்றத்திற்கு மதம் முட்டுக்கட்டை | 0 | 5 | 0 |
| 3. | கடவுள். | 0 | 5 | 0 |
| 4. | மதம் மக்களுக்குச் செய்த நன்மை என்ன? | 0 | 3 | 0 |
| 5. | பாதிரியும், பெண்களும், பாவமன்னிப்பும் (இரண்டாம் பாகம் அச்சில்) | 0 | 3 | 0 |
| 6. | பிரகிருதிவாதம் (ஈ. வெ. ரா.) | 0 | 3 | 0 |
| 7. | மதமும், விஞ்ஞான சாஸ்திரமும் | 0 | 3 | 0 |
| 8. | பிரபஞ்ச உற்பத்தி | 0 | 3 | 0 |
| 9. | நான் ஏன் கிறிஸ்தவனல்ல? | 0 | 3 | 0 |
| 10. | நான் சம்சயவாதி ஆனதேன்? | 0 | 3 | 0 |
| 11. | மதம் என்றால் என்ன? | 0 | 2 | 0 |
| 12. | குடி அரசுக் கலம்பகம் (ஈ. வெ. ரா.) | 0 | 6 | 0 |
| 13. | மெய்ஞ்ஞான முறையும், மூடநம்பிக்கையும் | 0 | 6 | 0 |
| 14. | ,, 2-ம் பாகம் | 0 | 5 | 0 |
| 15. | பாதிரிகளின் பிரமச்சரிய லட்சணம் | 0 | 4 | 0 |
| 16. | மரணத்திற்குப்பின் வாழ்க்கை உண்டா? | 0 | 4 | 0 |
| 17. | மதப் புரட்சி | 0 | 4 | 0 |
| 18. | வால்டேயரின் சரிதம் | 0 | 4 | 0 |
| 19. | பகுத்தறிவு அல்லது மரண சாஸனம் | 0 | 4 | 0 |

கிடைக்குமிடம்:—

பகுத்தறிவு நூற்பதிப்புக்கழகம் ஈரோடு.

## குடி அரசு பதிப்பக வெ

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இந்தியாவின் குறைபாடுகள் | | | |
| 2. | லெனினும், மதமும் | 0 | 4 | 0 |
| 3. | பொதுவுடமைத் தத்துவங்கள் | 0 | 3 | 0 |
| 4. | கடவுளும், பிரபஞ்சமும் | 0 | 4 | 0 |
| 5. | கைவல்யம் அல்லது கலிக்கியானம் | 0 | 8 | 0 |
| | (இது சுவாமி கைவல்யம் அவர்களால் எழுதப்பட்டது) | | | |
| 6. | இராமாயண ஆராய்ச்சி பாலகாண்டம் | 0 | 4 | 0 |
| 7. | ,, அயோத்தியாகாண்டம் | 0 | 8 | 0 |
| 8. | ஞானசூரியன் | 0 | 4 | 0 |
| 9. | தர்ம பரீக்ஷை அல்லது புராணஆபாசம் | 0 | 3 | 0 |
| 10. | மேயோ கூற்று மெய்யா? பொய்யா? | 0 | 3 | 0 |
| 11. | பங்கஜம் அல்லது பார்ப்பனக்கொடுமை | 0 | 4 | 0 |
| 12. | ஈ.வெ.ரா. சீர்திருத்தமகாநாட்டு உபன்யாசம் | 0 | 2 | 0 |
| 13. | அகத்தியர் ஆராய்ச்சி | 0 | 2 | 0 |
| 14. | இராமலிங்க சுவாமிகள் பாடல் திரட்டு | 0 | 2 | 0 |
| 15. | சுயமரியாதைப்பாடல் | 0 | 2 | 0 |
| 16. | கதர் மூட நம்பிக்கை (இங்கிலீஷ்) | 0 | 2 | 0 |
| 17. | சுயமரியாதைத் தாலாட்டு | 0 | 2 | 0 |
| 18. | பர்னர்ட்ஷா உபந்யாசம் | 0 | 1 | 0 |
| 19. | சோஷியலிசம் | 0 | 2 | 0 |
| 20. | போல்ஷ்விக் முறை | 0 | 1 | 0 |
| 21. | ஈ. வெ. ரா. இலங்கை உபந்யாசம் | 0 | 0 | 9 |
| 22. | கத்தோலிக்கர் வீண் கூச்சல் | 0 | 0 | 6 |
| 23. | சமதர்ம உபந்யாசம் | 0 | 0 | 6 |
| 24. | சோதிடப்புரட்டு | 0 | 2 | 0 |
| 25. | மனுநீதி விளக்கம் | 0 | 2 | 0 |

விலாசம்:— மானேஜர்,

குடி அரசு பதிப்பகம், ஈரோடு.